டாக்டர் பொற்கோ
[புலவர், வித்துவான், டாக்டர் பொன். கோதண்டராமன்
எம்.ஏ., பி.ஓ.எல்., பிஎச்.டி., டிப். வங்காளம்]



# இலக்கண உலகில் புதிய பார்வை









தமிழ் நூலகம்

முதற்பதிப்பு 1973


ரூ 6-00

கிடைக்குமிடங்கள்

1. தமிழ் நூலகம்
   10 E, பீமண்ண முதலி தோட்டத் தெரு
   ஆழ்வார்பேட்டை, சென்னை 600018
2. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
   1/140, பிராட்வே, சென்னை 600001
3. மீனாட்சி புத்தக நிலையம்
   60, மேலக் கோபுர வீதி
   மதுரை 625001
4. சி. பி. எஸ். புக் ஷாப்
   அண்ணாமலைநகர் 608101
5. ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்
   கோர்ட் ரோடு, நாகர்கோவில் 629001






நண்பர்கள் அச்சகம்
சென்னை 600018

காணிக்கை

எனது பேராசிரியர்

டாக்டர் ச. அகத்தியலிங்கனுர் அவர்கட்கு

# வாழ்த்துரை

14—4—73
17, மெட்லர் இல்லம்
லாங்லேண்ட்ஸ் ரோடு
சிட்கப், கெண்ட்
இங்கிலாந்து

மதிப்பிற்குரிய டாக்டர் பொற்கோ அவர்களுக்கு, வணக்கம். தாங்கள் இலண்டனில் தங்கியிருந்த இரண்டாண்டு காலத்தில், தமிழ் மொழிக்கும், தமிழர்கள் நலனுக்கும், இலண்டன் தமிழ்ச் சங்கத்தின் ஒற்றுமைக்கும் ஆற்றிய பணி அளவிடற்கரியது. தங்களது தமிழ்ப் பணியைச் சிறப்பிக்கும்வண்ணம் இலண்டன் வாழ் தமிழ் மக்கள் தங்களை இலண்டன் தமிழ்ச் சங்கத்தின் புரவலராக நியமித்துப் பெருமைப் படுகின்றனர். தாங்கள் இலண்டனில் வாழ்ந்த காலத்தில் இலண்டன் தமிழ்ச் சங்கத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்ததோடு நில்லாது தாயகத்திற்குத் திரும்பிய பின்னரும் இலண்டன் தமிழ்ச் சங்கத்தின் முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருந்து வருவதற்கு இலண்டன் வாழ்தமிழர்கள் பெரிதும் கடமைப் பட்டுள்ளார்கள்.

தங்களுக்கு மொழியியல் துறையிலும், குறிப்பாகத் தமிழ் இலக்கணச் சிறப்பியலிலும் உள்ள

ஈடுபாட்டினைத் தமிழுணர்ந்த நல்லுலகம் நன்கறியும். தாங்கள் இலக்கணத்தை இனிக்கும் வகையில் படைக்கும் பான்மை தனிச் சிறப்பு வாய்ந்தது. தங்களைப் போன்ற ஒரு தமிழ் அறிஞரைப் புரவலராகப் பெற்றதில் இலண்டன் தமிழ்ச் சங்கம் மெத்தப் பெருமைப் படுகிறது.

தங்களது தமிழ்ப்பணியும், தமிழார்வமும், தமிழ் மணம்போல் இனிது மணம் வீச வாழ்த்துகிறோம். வணக்கம்.

(ஒ-ம்) சு.க. சுப்பிரமணியன்
செயலாளர்
இலண்டன் தமிழ்ச் சங்கம்

(ஒ-ம்) வெ. சங்கரலிங்கம்
தலைவர்
இலண்டன் தமிழ்ச் சங்கம்

# நன்றி

பல அன்பு நெஞ்சங்களின் இனிய ஒத்துழைப்பால்தான் இன்று 'இலக்கண உலகில் புதிய பார்வை' என்ற இந்நூல் செம்மையாக உருப்பெற்று உங்கள் கைகளில் தவழ்கிறது. அந்த அன்புப் பெருந்தகையோர் அனைவர்க்கும் பொது வகையால் என் நன்றி என்றும் உரியது.

எனது அன்புக்குரிய திருவாளர்கள் த. மணியன் எம்.ஏ., மு. கந்தசாமி பி.ஏ., பி.எட்., வே. இராமசாமி எம்.ஏ., கி. செம்பியன் எம் ஏ., ந. அருணபாரதி எம்.ஏ., மு. இராமதாசு எம்.ஏ. ஆகியோர் மிகுந்த ஆர்வத்தோடு இந் நூலுக்குரிய அச்சுப்படிகளை உருவாக்கித் தந்தார்கள்.

தமிழ்ப் பேரறிஞர் மறைமலையடிகளாரின் மாணவர் எனது சிற்றப்பா தமிழ் மறவர், புலவர் திரு வை. பொன்னம்பலனார் அவர்களும், எனது தங்கையர் திருமதி பகுத்தறிவு அறவணன் எம். எஸ்சி., திருமதி தெய்வா மெய்யப்பன் ஆகியோரும் இந்நூல் விரைவில் வெளிவர அவ்வப்போது தம்மாலான உதவிகளை அன்போடு வழங்கியருளினார்கள்.

எனது தோழர்கள் திரு அ. மெய்யப்பன் பி. இ., திரு சாமி. அறவணன் எம். ஏ., திரு ஆர். பெரியாழ்வார் எம். ஏ., திரு

அரங்க. தமிழ்மணி எம். ஏ. ஆகியோர் இந்நாலின் அச்சுப்படிகளைப் பொறுப்பாகத் திருத்தியும் இந்நூல் செம்மைபெற வழி செய்தும் உதவியருளினார்கள்.

இலண்டன் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் தலைவர் திரு வெ. சங்கரலிங்கம் அவர்களும் செயலாளர் திரு சு. க. சுப்பிரமணியன் அவர்களும் மிகுந்த அன்போடும் உரிமையோடும் ஒரு இனிய வாழ்த்துரையை வழங்கியுள்ளார்கள்.

இந்த நூலைச் சிறப்பாகவும் விரைவாகவும் வெளிக் கொணர்வதில் என்னைவிட அக்கரை காட்டிப் பொறுப்போடும் ஆர்வத்தோடும் இந்நூல் வெளிவருவது பற்றிய எல்லாப் பணிகளிலும் பங்கேற்று இந்நூலை வெளியிட்டுத் தமிழுலகில் தவழவிட்டிருக்கிறார்கள் எனது அன்புக்குரிய தமிழ் நூலகத்தார்.

இவர்கள் எல்லோருக்கும் சிறப்பு வகை யான் என் அன்பு கலந்த மனம் நிறைந்த நன்றி.

**பொற்கோ**

# படிப்பதற்கு முன்

மொழியியல் அறிஞர்கள் மொழியைப் பற்றி ஆழமாகவும் விரிவாகவும் ஆராய்ந்து வருகின்ற காலம் இது. என்றுமில்லாத அளவுக்கு மொழியைப் பற்றிய பல உண்மைகளை இந்த நூற்றுண்டில்தான் அறிவியல் நோக்கில் கண்ட றிந்து எடுத்து விளக்கி வருகிருர்கள் மொழியிய லறிஞர்கள். இப்படிச் செம்மையாகவும் விரை வாகவும் வளர்ந்து வரும் மொழியியற் கலையின் பிறப்பிடம் இலக்கணந்தான் என்பது மறுப்புக் கிடமில்லாத உண்மை.

ஒரு மொழியைப் பற்றிய ஆழமான விரிவான அறிவு உலகிலுள்ள ஏனைய மொழிகளையும் சரியாகப் புரிந்துகொள்ள மிகவும் உதவி புரியுமென்பது பல அறிஞர்கள் ஒப்புக்கொண்ட ஒரு உண்மை.

மனிதனின் சிந்தனை பல்வேறு துறைகளில் ஊடுருவிப் பாய்ந்து பல அரிய உண்மைகளைக் கண்டறிந்து வெளிக்கொணரும் இக்காலத்தில், இலக்கண நெறியில் சிறந்த பாரம்பரியத்தைப் பெற்ற நாம், மொழியியலில் குறிப்பிடத்தக்க அளவு அக்கரை காட்டிஞல் அதஞல் உலக அரங்கில் நமக்கொரு சிறந்த இடம் கிடைக்கும் என்பது உறுதி.

இதற்கு ஒரு முன்னேற்பாட்டு வேலையாக நமது மொழியில் இன்றைய போக்குக்கேற்பப் பல்வேறு கோணங்களில் ஆராய்ச்சிப் பணிகள் நடக்க வேண்டும். பல்வேறு கோணங்களில் நிகழ்த்தப் பெறும் இலக்கண ஆய்வுகள் பெருகும்போதுதான் தரமான உயர்நிலை ஆய்வுகளுக்கு வழி பிறக்கும். தலைசிறந்த மொழியியற் கொள்கைகளை உருவாக்க அந்த உயர்நிலை ஆய்வுகள்தான் வழிசெய்யும்.

இந்த நூலில் உள்ள கட்டுரைகள் எதிர்கால உயர்நிலை ஆய்வுகட்கு ஏதாவது ஒருவகையில் உதவி

புரியும் என்பது என் திடமான நம்பிக்கை. இலக்கண உலகில் புதியன என்றும் தேவை யானவை என்றும் என் அறிவுக்குப் பட்ட செய்திகளை அவ்வப்போது கட்டுரைகளாக எழுதி, அவற்றைச் சில இதழ்களில் வெளியிடவும் சில கருத்தரங்குகளில் எடுத்துக் கூறவும் எனக்கு வாய்ப்பு கிடைத்தது. அந்தக் கட்டுரை களும் இன்றியமையாத வேறுசில கட்டுரைகளும் சேர்ந்து இலக்கண உலகில் புதிய பார்வை என்ற பெயரில் வெளிவருகிறது. ஏராளமான மொழியியற் கட்டுரைகளையும் இலக்கணக் கட்டுரைகளையும் வரவேற்று வெளியிட்டு மகிழும் தமிழணங்கு இங்குள்ள கட்டுரைகளில் பலவற்றை வெளி யிட்டது. இன்னும் பாரதிதாசன் குயில், பைரன், லண்டன் முரசு, பாவை ஆகிய இதழ்களில் வெளி வந்த கட்டுரைகளும் இந் நூலில் சேர்ந்துள்ளன.

இந் நூலிலுள்ளவற்றில் ஒருசில கட்டுரைகள் வரலாற்றுப் போக்கினவாக்வும், வேறு சில கட்டுரைகள் இன்றைய நிலையை விளக்கும் வண்ணனைப் போக்கினவாகவும், இன்னும் சில கட்டுரைகள் இலக்கணத்தைப் பற்றியும் மொழி யியலைப் பற்றியும் பொதுவாகப் பேசுவனவாகவும் அமைந்துள்ளன.

மொழியைப் பற்றி நமக்குக் கிடைக்கின்ற உண்மைகளை முறைப்படுத்தி வழங்க வேண்டு மென்ற மன எழுச்சிதான் இந்த நூலையே உருவாக்கியுள்ளது. இன்னும் மொழியைப் பற்றிய ஏராளமான செய்திகள் நமக்குக் கிடைக்க வேண்டும். அவற்றின் அடிப்படையில் இலக்கண உலகிலேயே ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டுப் புதிய புதிய கொள்கைகள் தோன்றி உயர்தனிச் செந்தமிழுக்கு இன்றைய தேவைக்கேற்ப ஒரு முழுமையான சிறந்த இலக்கணமும் தோன்ற வேண்டும். உலக அரங்கில் தமிழும் ஒரு உயர் தனிச் செம்மொழியாக—எல்லாம் வல்ல மொழி யாகத் திகழவும், தேமதுரத் தமிழோசை உலக மெலாம் பரவவும், நாம் முறையாகக் காண வேண்டிய பல்வேறு வழிவகைகளில் மொழியியல்

நோக்கில் இலக்கண உலகில் மறு மலர்ச்சியைத் தோற்றுவிப்பதும் ஒன்று. மொழி வளர்ச்சியைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்த பேரறிஞர்களுக்கு இந்த உண்மை தெளிவாக விளங்கும்.

இருக்கிற இலக்கணங்களைச் சரியாகப் புரிந்துகொண்டு இன்றைய வழக்கிலுள்ள செந்தமிழில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை உற்று நோக்கிக் கண்டுணர்ந்து நடுநிலை நோக்கில் நமது மொழிக்குத் தேவையான சீர்திருத்தங்களைச் செய்து ஒரு சிறந்த இலக்கணத்தை அமைத்தால்தான் மொழியில் இதுவரை ஏற்பட்டுள்ள மாற்றங்கட்கு நிலைபேறு கிடைக்கும். அதன்பிறகுதான் புதிய வளர்ச்சிக் கூறுகட்குக் காலூன்ற இடம் கிடைக்கும்.

தொல்காப்பியர் காலத்தில் நிகழ்காலத்துக்கென்று ஒரு தனியான இடைநிலை இல்லை. நன்னூலார் காலத்தில் கிறு, கின்று என்ற நிகழ்கால இடைநிலை மொழியில் இடம் பெற்றுவிட்டது. இதற்குத் தம் இலக்கணத்தில் இடம் அளித்து நிலைபேறு தந்தார் நன்னூலார். இன்றைய வழக்கிலுள்ள செந்தமிழில் வந்திருந்தார், வந்திருக்கிறார். வந்திருப்பார் எனவும் வந்துவிட்டார், வந்துவிடுகிறார், வந்துவிடுவார் எனவும் வாங்கிக் கொண்டார், வாங்கிக்கொள்கிறார், வாங்கிக் கொள்வார் எனவும் வரக்கூடும், வரவேண்டும், வரலாம் எனவும் பல்வேறு வினைவடிவங்கள் தோன்றியுள்ளன. இப்படிப்பட்ட புதிய வளர்ச்சிக் கூறுகட்கு இலக்கண உலகம் நிலைபேறளிக்கும்போதுதான் மொழியில் புதிய வளர்ச்சிக்கு இடம் ஏற்படும்.

மொழி வளர்ச்சியில் அக்கரை கொண்டுள்ள அறிஞர்களும், பல்கலைக் கழகங்களும், அரசும், மக்களும் ஒருமுகப் பட்டு இசைந்து விரைந்து பணியாற்றும்போதுதான் மொழிவளர்ச்சிக்கு வேண்டிய அடிப்படையான வேலைகள் நிறைவுபெற்று மொழி வரலாற்றில் ஒரு புதிய திருப்பம் பிறக்கும்.

நாம் இப்படியெல்லாம் கூறுவதால் இலக்கணமும் மொழியியலுமே மொழி வளர்ச்சிக்கு வேண்டிய எல்லாப் பணிகளையும் செய்துவிடும்

என்று பொருளல்ல. ஆனால், இன்றைய நிலையில்—இன்றைய உலகப் போக்கில்—இலக்கணத்தையும் தன்னுள் ஒரு அங்கமாகக் கொண்ட மொழியியல் என்பது மொழிவளர்ச்சிப் பணிகளுக்கு மிகவும் பயன்படுகின்ற ஒரு இன்றியமையாத தலைசிறந்த துறை என்பது நாம் தெளிவாகக் கண்டுகொள்ள வேண்டிய ஒரு உண்மை.

நாடு உயரவும் மக்களின் வாழ்வு சிறக்கவும் நம்முடைய தனி மனிதத் தன்மானத்தோடு உலக அரங்கில் நம் நாட்டினது தன்மானமும் உறுதி பெற்று உயர்ந்து நிற்கவும் நாம் பல்வேறு வகையில் பல்வேறு துறையில் தொடர்ந்து பாடுபட்டாக வேண்டும்; அப்படி நாம் பாடுபட்டு வளர்க்க வேண்டிய துறைகளில் மொழியியல் துறையும் ஒன்று: அந்த மொழியியல் துறையின் பிறப்பிடமே இலக்கணந்தான்: இலக்கண உலகில் நமக்கு மிக நீண்ட வரலாறும் தலைசிறந்த பாரம்பரியமும் உண்டு: இந்தத் துறையில் நாம் ஈடுபட்டுப் பாடுபட்டால் உலகுக்கே வழி காட்டுகிற அளவுக்குக்கூட நாம் வளர முடியும்: வளர வேண்டிய நாட்டில் வளர்க்க வேண்டிய இன்றியமையாத துறைகளில் இதுவும் ஒன்று:—வாசகர்கள் இந்த உண்மைகளை மனங்கொண்டருள வேண்டுகிறேன்.

சென்னை
மே, 1973

**பொற்கோ**

# பொருள்







# 1

# இலக்கண உலகில் புதிய பார்வை

இற்றைக்குச் சற்றேறக்குறைய இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகட்கு முன்பே மனித வாழ்வுக்கு மிக இன்றியமையாததாக உள்ள மொழியைப் பற்றியும் மனித வாழ்வைப்பற்றியும் நன்கு சிந்தித்துப் பார்த்திருக்கிறான் தமிழன். இன்று அறிவியலில் முன்னின்று ஏறுநடை போட்டுவரும் ஆங்கிலம், பிரஞ்சு, செர்மன், உருசியம் ஆகிய மொழிகளெல்லாம் இலக்கணம் என்பதைப் பற்றிக்கூட எண்ணிப் பார்க்காத காலத்தில் மொழியைப் பற்றியும் வாழ்வைப் பற்றியும் தாம் கண்டறிந்த உண்மைகளைத் தொகுத்துச் சீராக்கி ஒல்காப்பெரும் புகழ்த் தொல்காப்பியப் பெருந்தகையார், 'தொல்காப்பியம்' என்ற வடிவில் ஈடுஇணையற்ற ஒரு கருவூலத்தை நமக்கு வழங்கி யுள்ளார். மொழி, வாழ்வு, வாழ்வை மையமாகக் கொண்டு செழித்து வளரும் இலக்கியம் ஆகிய இவற்றைப் பற்றிய சீரிய உண்மைகளையும் விளக்கங்களையும் வாரி வழங்குகிறது தொல்காப்பியக் கடல். தொல்காப்பியப் பெருந்தகையாரின் பணி மிகமிகப் பெரியது—மிகமிக அரியது.

அவருக்குப் பின் பன்னருஞ் சிறப்பின் பவணந்தியார் தோன்றினார். எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டும் இலக்கணம் வழங்கினார். ஆனால் இயல்பிற் சேனாவரையரும் உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியரும் உளங்கூர்கேள்வி இளம்பூரண அடிகளும் மாதவச்சிவஞான வள்ளலும் இலக்கண உலகிற் புகுந்து தம்முடைய உரைகளின் வாயிலாகப் பல உண்மைகளை வழங்கியருளினர். இன்னும் எத்துணையோ பேரறிவுச் செம்மல்கள் இலக்கண உலகிற்புகுந்து அரும்பணியாற்றி ஒளிபெருக்கி நமக்கெல்லாம் வழிகாட்டிச் சென்றிருக்கின்றனர்.

தமிழிலக்கண உலகில் வீரசோழியம், நேமிநாதம், பிரயோக விவேகம், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, முத்துவீரியம், சாமிநாதம், தொன்னூல்விளக்கம் முதலிய பல இலக்கண நூல்கள் எழுந்தன. பல நூல்கள் இருக்குமிடம் தெரியாமல் மறைந்து கிடக்கின்றன. சில நூல்கள் வடமொழி இலக்கண அமைப்பையும் மரபையும் தமிழில் புகுத்த விரும்பித் தோற்றுப்போய் ஒதுங்கிக் கிடக்கின்றன. இவற்றுக்கு நடுவே தொல்காப்பியப்பெருநூல் மட்டும் விண்மீன் நடுவண் விளங்கும் தண்மதிபோல ஒளி வீசித் திகழ்கிறது. அதனை அடுத்து நம் கண்ணுக்குத் தென்படுவது நன்னூல்தான் என்பது தவறாகாது.

தொல்காப்பியர் காலத்திலிருந்து இன்றுவரையில் தமிழகத்தில், தமிழர் வாழ்வில் எத்தனையோ புதுமைகளும் மாற்றங்களும் ஏற்பட்டுத்தான் இருக்கின்றன. எண்ணத்திலும் செயலிலும் பல்வேறு மாற்றங்கள் தோன்றினால் அந்த மாற்றங்கள் மொழியிலும் ஏதோ ஒருவகையில் இடம் பெற்றே தீரும். இது இயற்கை. இந்த இயற்கைக்கேற்ப நமது உயர்தனிச் செம்மைத்தமிழும் காலத்துக்கேற்ற பல்வகைக் கோலங்கள் பூண்டுதான் புதுப்பொலிவு பெற்றுத் திகழ்கிறது.

இதுவரையில் நமது மொழியில் நமக்கே உரித்தான வகையில் அரும்பிப் பூத்த புதுமைகளை ஒப்புக்கொண்டு வரவேற்று உறுதியளித்தால்தான் மேலும் மேலும் வளர்ச்சிக்கும் செழிப்புக்கும் வாய்ப்பு ஏற்படும். அதற்காக நாம் என்ன செய்யவேண்டும்? நடைமுறையில் பயன்பாடுடையதாய் நிற்கும் பழமைக் கூறுகளையும் அரும்பிப் பூத்துப் புது வாழ்வு கொண்டுள்ள புதுமைக் கூறுகளையும் நாம் ஒன்று சேர்த்தாக வேண்டும். அவ்வாறு ஒன்று சேர்க்கும் பணியை, இலக்கண உலகில், தொல்காப்பியம் போன்ற திண்மையான இலக்கண நூல்கள்தாம் செம்மையாகச் செய்து முடிக்க வல்லன. செந்தமிழ் மொழியினை மிகத் தெளிவாக உணர்ந்த பெருஞ் சான்றோர்கள் யாராவது முன் வந்து பேரருள் பெருக்கி இலக்கணப் பணியைத் தொட்டால் நம் வேட்கை நல்லபடி நிறைவேறும்.

தமிழில் மிகச் செம்மையான நற்பணிகளைச் செய்த பெருந்தகையோருள் மிகப்பலர் முனிவர் பெருமக்களாகவே உள்ளனர். தொல்காப்பியத்தை வழங்கிய தொல்காப்பியர் ஒரு முனிவர்; நன்னூலை வழங்கிய பவணந்தியார் ஒரு முனிவர்;

அந்த நன்னூலுக்குப் பேருரையளித்த சிவஞான அடிகள் ஒரு முனிவர்; இன்னும் சிலம்பையும் மணிமேகலையையும் வழங்கியருளிய பெருந்தகைகள் இருவருமே முனிவர்கள்.

இனியும் ஒரு பேரிலக்கணமோ பேரிலக்கியமோ வேண்டுமாயின் முதலில் ஒரு முனிவரைத்தான் நாடவேண்டும் போலும். முனிவரை இந்தக் காலத்தில் எங்கே போய் தேடுவது!

குறையை உணர்ந்து கொள்ளவும் ஒப்புக்கொள்ளவும் மனப்பக்குவம் பெற்றால்தான் குறையைப் போக்கமுடியும். குறைகள் நீங்க நீங்க நிறைவு நெருங்கும். மெய்யறிவாளர்கள் முன்வந்து தொல்காப்பியப் பெருந்தகையின் திருவுளத்தை உள்ளவாறு அறிந்து உலகறிய உணர்த்துவதும், தமிழுலக இலக்கண வளர்ச்சியை மெய்ப்பிக்கும் வகையில் இன்னும் சில படிகள் மேலே சென்று புதிய பார்வையில் புதிய கொள்கையைப் பிறப்பித்துச் சேர்த்துப் புதியதோர் இலக்கணம் வகுப்பதும் இன்றியமையாத பணிகளேயாம். இப்பணிகள் நிறைவுபெறும் பொற்காலத்தைத் தமிழுள்ளங்கள் ஆவலோடு எதிர்நோக்கியுள்ளன.

# 2

# ஆகுபெயர் அன்மொழித் தொகை

ஆகுபெயர் அன்மொழித் தொகை என்னும் இவைபற்றிப் பல்வேறுபட்ட கருத்துகள் வெளியிடப்பட்டுள்ளன. நம் அறிவு வளர்ச்சிக்கும் தமிழ் வளர்ச்சிக்கும் பெருந்துணை புரிந்த பேரறிஞர்கள் பலர் ஆகுபெயரையும் அன்மொழித் தொகையையும் விளக்கப் புகுந்து சிந்தனை ஈட்டியை எட்டின மட்டும் செலுத்தி ஒருவகைப் போராட்டத்தையே உருவாக்கியிருக்கின்றனர். மொழியியலின் துணைகொண்டு சொற்றொடரியலை உற்றுநோக்கும்போது ஆகுபெயர் அன்மொழித் தொகை என்னும் இவைபற்றி நமக்கு ஒரு புதிய விளக்கம் கிடைக்கிறது. இந்த விளக்கம் நமது இலக்கண நூலாசிரியர்கள் கருத்தையும், உரையாசிரியர்கள் கருத்தையும் தெளிவுப் படுத்துவதாக அமையும் என நம்புகிறோம்.

**ஆகுபெயர் :** ஆகுபெயர் என்றால் என்ன? ஆகுபெயர் என்ற தொடரே நமக்குக் குறிப்பாக ஒரு விடையளிக்கிறது. ஆகிவரும் பெயர் ஆகுபெயர். இயல்பாக ஒன்றற்கு அமைந்த பெயர் ஏதாவது ஒரு தொடர்புபற்றி இன்னொன்றற்கு ஆகிவரின் அங்ஙனம் ஆகிவரும் பெயர் ஆகுபெயராம். 'வீட்டுக்கு வெள்ளையடித்தான்' என்ற தொடரில் வெள்ளை என்பது சுண்ணாம்பு என்று பொருள் படுகிறது. வெள்ளை என்பது ஒரு வண்ணத்தின் பெயர். வண்ணத்தின்பெயர் அவ்வண்ணத்தையுடைய பொருளுக்கு ஆகிவந்தது. இவ்வாறு ஆகும்பெயர் ஆகுபெயராம். இயற்பெயராக உள்ள ஒன்று ஏதாவது ஒரு தொடர்பு பற்றியே ஆகுபெயராக மாறும். இந்தத் தொடர்பினை ஒல்காப் பெருபுகழ்த் தொல்காப்பியப் பெருந்தகையார் எடுத்து விளக்குகிறார்[1]. (1) முதல்-சினை (2) சினை-

முதல் (3) பொருள்-பொருள் பிறந்த இடம் (4) பொருள்-பொருளின் பண்பு (5) பொருள்-பொருளை ஆக்கிய பொருள் (6) பொருள்-பொருளை அமைத்த வினைமுதல் என இவ்வாறு வகைத் தொடர்பையும் எடுத்துக்கூறி இவற்றோடு இரு பெயரொட்டு என்பதையும் சேர்த்துக் கொள்கிறார் தொல்காப்பியர். இரண்டு பெயர்கள் ஒட்டி நின்றே ஆகுபெயராவதனை இரு பெயரொட்டென்றார். ஏனைய எல்லாம் ஒரு பெயர் நின்றே ஆகுபெயராதல் இதனாலும் விளங்கும்.

ஏதாவது ஒரு தொடர்புபற்றியே ஆகுபெயர் அமைதல் பெரும்பான்மைத்தெனினும் தொடர்பு அறியப்படாதன உளவேல் அவற்றையும் தழுவிக்கொள்ள 'ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலும் அப்பண்பினவே நுவலுங்காலை'[2] என்று கூறிச் செல்கிறார் தொல்காப்பியர்.

மேற்கூறிய அறுவகைத் தொடர்பாலும் ஆகுபெயர் வருமாறு: கடுத்தின்றான், மிளகாய் நட்டான், அவள் அணிந்துள்ள புடவை காஞ்சிபுரம், வீட்டுக்கு வெள்ளை யடித்தான், இம்மோதிரம் பொன், இவ்வாடை கோலிகன் என வரும்.

ஏதாவதொரு தொடர்புபற்றியே ஆகுபெயர் அமையும் என்பது 'ஒன்றன் பெயரான் அதற்கு இயை பிறிதைத் தொன்முறை உரைப்பன ஆகுபெயரே'[3] எனவரும் நன்னூலார் கூற்றானும் தெளியப்படும். பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்பனவும் அளவை, சொல், தானி, கருவி, காரியம், கருத்தன் என்பனவும் ஆகிய இவற்றுள் ஒன்றைச் சுட்டும் பெயர் அது இயல்பாகச் சுட்டும் பொருளோடு இயைபுடைய பிறிதொன்றைப் பண்டுதொட்டுச் சுட்டி வருமாயின் அது ஆகுபெயராம். பொருளின் பெயர் அதனோடு இயைபுடைய பிரிதொன்றைச் சுட்டின் அது பொருளாகுபெயர். இவ்வாறே இடவாகுபெயர் முதலியவற்றிற்கும் பொருத்திக் காண்க. இயற்பெயர்ப் பொருளுக்கும் ஆகுபெயர்ப் பொருளுக்கும் உள்ள தொடர்பு தொல்காப்பியத்தில் நன்கு விளக்கப்பெற்றுள்ளது. நன்னூலார் ஆகுபெயரை வகைப் படுத்தியுள்ளார். ஆனால் தொல்காப்பியரைப் போல இயற் பெயர்ப் பொருளுக்கும் ஆகுபெயர்ப் பொருளுக்கும் உள்ள தொடர்பினை நன்னூலார் தெளிவாக வழங்கவில்லை. முதற் பெயர் சினைக்கும், சினைப்பெயர் முதற்கும், பொருள் பிறந்த இடத்தின் பெயர் பொருளுக்கும், பண்பின் பெயர் பண்புக்கும், பொருளின் பெயர் அப்பொருளாற் செய்யப்பட்ட பிறிதொரு

பொருளுக்கும், வினைமுதலின் பெயர் வினைமுதலாற் செய்யப் பட்ட பொருளுக்கும் ஆகிவரும் என்பதைத் தொல்காப்பியர் தெளிவாகக் கூறுகிறார். இதன் வாயிலாக இயற்பெயர்ப் பொருளுக்கும் ஆகுபெயர்ப் பொருளுக்கும் உள்ள தொடர்பு நமக்கு இனிது விளங்குகிறது. நன்னூலார் கூற்றின்படி பார்த்தால் பொருளின் பெயர் பிறிதொன்றற்கு ஆகிவருவது பொருளாகு பெயர் என்பது பெறப்படுமேயன்றிப் பிறிதொன்றுவது யாது என்பது பெறப்படாது. பொருளின் பெயர் இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகியவற்றிற்கும் அளவை முதலாகச் சொல்லப் பெற்ற ஏனையவற்றிற்கும் ஆகிவருமா? அல்லது பொருளின் பெயர் சினைக்கு மட்டுமே ஆகிவருமா? இத்தகைய வினாக்கட்கு நன்னூலார் கூற்றில் விடைகாண இயலவில்லை. முதற்பெயர் சினைக்கு ஆகிவருமே யன்றி இடத்துக்கோ காலத்துக்கோ ஆகிவராது எனவும் சினைப் பெயர் முதலுக்கு ஆகிவருமேயன்றி இடத்துக்கும் காலத்துக்கும் ஆகிவராது எனவும், பொருள் பிறந்த இடத்தின் பெயர் பொருளுக்கு ஆகிவருமேயன்றிப் பிறவற்றிற்கு ஆகிவராதெனவும் இவ்வாறே பிறவும் நமக்கு உணர்த்துங் குறிப்புடன்

‘முதலிற் கூறும் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனைமர பினவே ஆகுபெயர்க் கிளவி’[4]

என்று கூறிச்செல்கிறார் தொல்காப்பியர். இவற்றோடு அளவை, சொல், தானி முதலாயவற்றையும் சேர்த்துக்கொள்கிறார் பவணந்தியார்.

இன்னின்ன இயற்பெயர் இன்னின்ன தொடர்பு பற்றி இன்னின்னவற்றுக்கு ஆகி ஆகுபெயராம் என்று கூறுவது ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனாரின் நோக்கம். பொருட் பெயர், இடப்பெயர் முதலான பல்வகைப் பெயர்களும் இயை புடைய பிறிதொன்றற்கு ஆகிவரின் ஆகுபெயராம் என்பது பன்னருஞ் சிறப்பிற் பவணந்தியாரின் கருத்து, ‘அனைமரபினவே’ என்று தொல்காப்பியர் கூறுவதும் ‘தொன்முறையுரைப்பன’ என்று நன்னூலார் கூறுவதும் நாம் கூர்ந்து நோக்கத்தக்கன. காலப்போக்கில் மக்கள் வழக்கிற் பழகி வழக்கு வலிமை பெற்றனவே ஆகுபெயராம் என்னும் குறிப்பு இருவர் கூற்றிலும் காணக்கிடக்கிறது. இருபெயரொட்டாகுபெயரைப் பற்றி நன்னூலார் ஒன்றும் கூறாமலே விட்டுச் செல்கிறார்.

**தொல்காப்பியர் கூறும் ஆகுபெயர்கள் :—**

1. முதலிற் கூறல் (முதலாகு பெயர்)
   எ. டு. கடுத்தின்றான்

2. சினையிற் கூறல் (சினையாகு பெயர்)
   எ. டு. மிளகாய் நட்டான்

3. பிறந்தவழிக் கூறல் (இடவாகு பெயர்)
   எ. டு. இந்தப் புடவை காஞ்சிபுரம்

4. பண்புகொள் பெயர் (பண்பாகு பெயர்)
   எ. டு. வீட்டுக்கு வெள்ளை அடித்தான்

5. இயன்றது மொழிதல் (காரணவாகு பெயர்)
   எ. டு. இம்மோதிரம் பொன்

6. இருபெயரொட்டு (இருபெயரொட்டாகு பெயர்)
   எ. டு. வகரக்கிளவி

7. வினைமுதலுரைக்கும் கிளவி (கருத்தாவாகு பெயர்)
   எ. டு. இவ்வாடை கோலிகன்

**நன்னூலார் கூறும் ஆகு பெயர்கள் !—**

1. பொருளாகு பெயர் எ. டு. தாமரைமுகம்
2. இடவாகு பெயர் எ. டு. ஊர் சிரித்தது
3. காலவாகு பெயர் எ. டு. கார்விளைந்தது
4. சினையாகு பெயர் எ. டு. வெற்றிலை நட்டான்
5. குணவாகு பெயர் எ. டு. வெள்ளை அடித்தான்
6. தொழிலாகு பெயர் எ. டு. வற்றல் உண்டான்
7. அளவையாகு பெயர் எ. டு. படி கொடுத்தான்
8. சொல்லாகு பெயர் எ. டு. இந்நூற்கு உரை செய்தான்
9. தானியாகு பெயர் எ. டு. விளக்கு ஒடிந்தது
10. கருவியாகு பெயர் எ. டு. திருக்குறள் முற்றிற்று
11. காரியவாகு பெயர் எ. டு. இந்நூல் அலங்காரம்
12. கருத்தாவாகு பெயர் எ. டு. இவ்வாடை கோலிகன்

ஆகுபெயரைப்பற்றி நூலாசிரியர்களின் கருத்தைக் கண்டோம். இனி அன்மொழித் தொகையைப் பற்றியும் அவர்கள் கருத்தை அறிந்துகொள்ளவேண்டும்.

அன்மொழித் தொகை என்ருல் என்ன? அல்லாத மொழி தொக்கு நிற்பது அன்மொழித் தொகை என்று இத்தொடர்க்குப் பொருளுரைப்பர். அன்மொழித் தொகை எவ்வெவ்வாறு வரும் என்று தொல்காப்பியர் விளக்கிக் கூறுகிருர்.

'பண்பு தொக வருஉம் கிளவியானும்
உம்மைத் தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே'[5]

என்ற நூற்பாவின் வாயிலாக அன்மொழித்தொகை எங்கெங்கே பிறக்கும் என்பதை விளக்கிச் செல்கிருர் தொல்காப்பியர். இதனல் பண்புத் தொகைப் புறத்தும் உம்மைத் தொகைப் புறத்தும் வேற்றுமைத் தொகைப் புறத்தும் அன்மொழித் தொகை பிறக்கும் என்பது பெறப்பட்டது. உவமைத்தொகைப் புறத்தும் வினைத்தொகைப் புறத்தும் அன்மொழித் தொகை பிறக்கும் என்பதும் அவை இங்குக் குறிக்கப்படவில்லை என்பதும் நினைவிற்கொள்ளத்தக்கது. அன்மொழித் தொகை என்ருல் என்ன என்பதற்கு நேரடியாக இந்த நூற்பாவில் விடை இல்லை. அன்மொழித்தொகை ஈற்று நின்றியலும் என்பதும் அது பண்புத் தொகை, உம்மைத்தொகை, வேற்றுமைத்தொகை இம் மூன்றையும் நிலைக்களனகக் கொண்டு பிறக்கும் என்பதும் இந்த நூற்பாவினுல் பெறப்படும் உண்மைகளாம்.

'ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி'[6] என்று கூறுகிருர் நன்னூலார். வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை ஆகிய ஐந்து தொகைகளின் மேலும் அன்மொழித் தொகை பிறக்கலாம் என்பது நன்னூலார் கருத்து. உவமைத் தொகைப் புறத்தும் வினைத்தொகைப் புறத்தும் தோன்றும் அன்மொழித்தொகைகளை இவர் ஏற்று விதிவகுத்துள்ளார்.

அன்மொழித் தொகையைப் பொறுத்தவரையில் அல்லாத மொழி தொக்கு வருமென்பதிலும், ஈற்று நின்றியலும் என்பதிலும் தொகைகளை நிலைக்களனகக் கொண்டே அன்மொழித் தொகை தோன்றும் என்பதிலும் தொல்காப்பியர்க்கும் நன்னூலார்க்கும் கருத்து வேற்றுமை இல்லை. உவமைத் தொகைப் புறத்தும், வினைத்தொகைப் புறத்தும் பிறக்கும் அன்மொழித் தொகைகளைத் தொல்காப்பியர் ஏனே குறிப்பிடாமல் விட்டிருக்கிருர்; ஆனல் நன்னூலார் அவற்றையும் சேர்த்துக்கொண்டிருக்கிருர்.

இனி உருவகத்தைப் பற்றியும் விளங்கிக் கொள்ளவேண்டும். உருவகத்தை இங்கு ஏன் கொண்டுவரவேண்டும் என்று சிலர்க்கு வினு எழலாம். உருவகம் ஒரு மொழியாகவும் தொகை மொழியாகவும் நிற்கக் கூடியது. அதுவும் நின்றசொல் இயல்பாகக் குறிக்கும் பொருளைவிட்டு உருவக வழக்கில் பிறிதொருபொருளைக் குறிப்பது. எனவே ஆகுபெயர் அன்மொழிக் குழப்பம் தீர உருவகமும் இங்கு வந்து பங்கு பெற்ருகவேண்டும்.

உருவகம் என்ருல் என்ன? உவமைக்கும் பொருளுக்கும் உள்ள வேற்றுமையைக் கெடுத்து உவமையையே பொருளாக உருவகப் படுத்துவது உருவகம்[7]. பாவையைப்போல இருக்கும் பெண்ணைப் பாவை என்றே சொல்லுவது ஒருமொழி உருவகம். மலர் போன்ற கண் என்பதனை கண்மலர் என்பது தொகைமொழி உருவகம். அவள் கண் மலரைப் போல்வது என்பது அமையாது அது மலரேயாம் என்னும் குறிப்புப்பட அமைந்துள்ளது 'கண்மலர்' என்ற தொடர். இதனையே கண்ணுகிய மலர் என விரித்துக் கூறுவர். உவமைக்கும் பொருளுக்கும் உள்ள வேற்றுமை நீங்கிக் கண்ணே மலர், மலரே கண் என்ற குறிப்பு இவண் அமைந்திருப்பதையும் நோக்குக.

உருவகம் அணியிலக்கணமன்ருே! அதனைச் சொல்லிலக்கணத்துத் தொடர்புபடுத்துவது பொருந்துமா? என்னும் ஐயம் எழலாம். உவமைத்தொகையில் காணப்பெறும் உவமையும் அணியிலக்கணத்ததேயாயினும் தொகையாதல் பற்றிச் சொல்லிலக்கணத்துப் பேசப்பட்டது போலவே உருவகமும் ஆகுபெயர் அன்மொழிபோலப் பிறிதுபொருள் சுட்டுதல் பற்றி ஈண்டுப் பேசப்படும்.

ஆகுபெயர், அன்மொழி, உருவகம் — இவற்றிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் காண்போம். இவை மூன்றும் இயற்பெயரின் மாறுபட்டவை. இயல்பாகத் தமக்குரிய பொருளையன்றிப் பிறிது பொருளைச் சுட்டுபவை. இந்த நோக்கில் காணும் போது இவை ஒற்றுமை யுடையன. ஆகுபெயர் முதல் - சினை, சினை - முதல், பொருள் - பொருள் பிறந்த இடம் ஆகிய தொடர்புகளின் அடிப்படையில் தோன்றும். அன்மொழித் தொகை நிலைத்தொடராக நின்று தனக்குப்பின் பிறிதொரு சொல் தொக்கு நிற்க, தொக்குகின்ற சொல்லின் பொருளே தன் பொருள் போலக் காட்டி நிற்கும். ஆகுபெயர் ஒருமொழிக் கண்ணும் சிலகால் இருமொழிக் கண்ணும் வரும். அன்மொழி ஒரு மொழிக்கண் வராது. ஆகுபெயரின் பின் பிறிதொரு சொல் தொக்கு நிற்பதுமில்லை. வெளிப்படுவதுமில்லை. அப்பெயரின்

பொருளே விரிவு பெறுகிறது. அன்மொழித் தொகையில் அல்லாத மொழி தொக்கு நின்றே வரும். உருவகம் உவமையும் பொருளும் வேறுவேறென்னாது அதனை அதுவாக உருவகப் படுத்தி நிற்கும்.

ஆகுபெயர், அன்மொழி, உருவகம் மூன்றுமே இயல்பான பொருளை யன்றிப் பிறிதுபொருள் குறிக்குமேனும் அவை தம்முள் வேற்றுமை யுண்டென்பது ஒருதலை. இவ் வேற்றுமை கருதியே இவற்றை வேறுவேறாக்கி நம் முன்னோர்கள் வேறுவேறு பெயர்களும் இட்டுள்ளனர்.

II

**புதிய விளக்கம் :-** சொற்றொடர் இலக்கணத்தின் துணை கொண்டு பார்த்தால் இங்கு ஒரு புதிய விளக்கம் கிடைக்கும்.

1. அவன் வந்தான்
2. அவள் வந்தாள்
3. அவர் வந்தார்

மேற்காட்டிய சொற்றொடர்களில் எழுவாய்க்கும் பயனிலைக்கும் உள்ள இறுதியில் ஓர் இயைபு காணப்படுகிறது. அன் என்ற பெயரிறுதிக்கு ஆன் என்ற வினை இறுதியும் அள் என்ற இறுதிக்கு ஆள் என்ற இறுதியும் அர் என்ற இறுதிக்கு ஆர் என்ற இறுதியும் இயைபாகி வந்துள்ளன. இந்த இயைபினை 'எழுவாய் பயனிலை இயைபு' என்று குறிப்போம். அது வரும் அவை வரும் என்பன போன்ற இடங்களில் இந்த இயைபு காணப்படவில்லையெனினும் இவ்வியைபு பெரும்பாலான இடங்களில் காணப்படுகிறது. இந்த இயைபு தமிழ்மொழிக்கு இன்றியமையாத ஒரு இலக்கண அமைப்பென்பதைக் கருதியே தொல்காப்பியரும்

'வினையின் தோன்றும் பாலறி கிளவியும்
பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே'[3]

என்று ஒரு விதிவகுத்துச் செல்கிறார்.

4. இவன் வந்தான்
5. ஆண் வந்தான்
6. ஊர் சிரித்தது

நான்காவது தொடரன் (Sentence) எழுவாய் பயனிலை இயைபைக் கொண்டுள்ளது. ஐந்தாவது தொடரனும் ஆறுவது தொடரனும் சற்று வேறுபட்டுள்ளன. ஆண் என்ற பெயரில் அன், அள் போன்ற பாலறி கிளவி இல்லையாயினும் அது (இன்றைய வழக்குப்படி) உயர்திணை ஆணொருமைக்கு உரியதாம். உயர்திணை ஆணொருமைப் பெயர் பயனிலையில் தனக்கேற்ற ஆன் விகுதியையே பெற்றுள்ளது. இதுபோலவே ஊர் என்ற அஃறிணை ஒருமைப் பெயர் பயனிலையில் தனக்கேற்ற 'அது' விகுதியையேபெற்றுள்ளது. எனவே தொடரன்கள் 4, 5, 6 ஆகிய மூன்றிலுமே 'எழுவாய் பயனிலை இயைபு' காணப் படுகிறதெனலாம். ஊர் சிரித்தது என்ற தொடரன் ஊர் மக்கள் சிரித்தார்கள் எனப்பொருள் தருகிறது. ஊர் என்ற சொல் இடத்தைக் குறிப்பதோடு அமையாது இடத்திலுள்ள மக்களுக்கே ஆகிவந்துள்ளது. இதனை இலக்கணப் புலவர்கள் ஆகுபெயர் என்பர். ஊர் சிரித்தது என்பதில் உள்ள எழுவாய் பயனிலை இயைபை உற்றுநோக்குங்கள். இவ்வியைபு சொல்லளவான் உள்ளதேயன்றிச் சொல் குறித்த பொருளடிப் படையில் இல்லை. இவ்வியைபு ஆகுபெயர்ப் பொருளின் அடிப்படையில் அமைந்திருப்பின் ஊர் சிரித்தார்கள் என்று வரவேண்டுமேயன்றி ஊர் சிரித்தது என வருதல் கூடாது. (ஊர் சிரித்தார்கள் என்பது இலக்கண வழு).




6. ஊர் சிரித்தது
7. தேமொழி வந்தாள்
8. பூங்குழல் வந்தாள்

தொடரன்கள் 6, 7, 8 ஆகிய மூன்றிலும் முறையே காணப் படும் ஊர், தேமொழி, பூங்குழல் ஆகிய மூன்றும் சொல் நிலையால் அஃறிணை ஒருமையனவாகவே உள்ளன. எழுவாயாக இங்கு நிற்கும் பெயர்கள் மூன்றும் மேற்கண்ட தொடரன்களில் மக்கள், பெண் ஆகிய உயர்திணைப் பொருளையே சுட்டி நிற்கின்றன. இன்னும் ஒரு படி விளக்கமாகச் சொன்னால் ஊர், தேமொழி, பூங்குழல் முதலிய சொற்கள் சொல் நிலையால் அஃறிணை ஒருமையாம்; பொருள் நிலையால் உயர்திணையாம். தொடரன் 6இல் எழுவாய் பயனிலை இயைபு சொல் நிலையால் தோன்றி நிற்கிறது. அதாவது அஃறிணை ஒருமைப்பெயர் அஃறிணை ஒருமை வினையோடு முடிந்தது. ஆனால் தொடரன்கள் 7, 8 இல் அஃறிணை ஒருமைப்பெயர் உயர்திணை வினையோடு முடிந்துள்ளது. இந்த முரண்பாட்டை எப்படித் தீர்ப்பது? இங்குதான் 'அல்லாத மொழி தொக்கு நிற்கும் அன்மொழித்

தொகை' நமக்கு விளக்கம் அளிக்கிறது. தேமொழியை உடைய பெண் வந்தாள் என்றும், பூங்குழலை உடைய பெண் வந்தாள் என்றும் தொக்கு நின்ற பெண் என்ற சொல் வெளிப்படும் போது முரண்பாடு தீர்கிறது.

9. தேமொழியை உடைய பெண் வந்தாள்

10. பூங்குழலை உடைய பெண் வந்தாள்

தொடரன்கள் 7, 8இல் தொக்கு நின்ற சொல்லுக்கேற்ப அதாவது மறைந்து நின்று வெளிப்பட்டுள்ள பெண் என்ற எழுவாய்க்கேற்பப் பயனிலை அமைந்துள்ளது. தேமொழி, பூங்குழல் என்பவை பெண்ணைச் சுட்டுவதற்கு ஆகிவந்த பெயர்களல்ல. அவை தேமொழியை உடைய பெண், பூங்குழலை உடைய பெண் என்பவற்றின் சுருக்கமான வடிவங்களேயாம். அதனால்தான் பெண் என்ற எழுவாய்க்கேற்பப் பயனிலை அமைந் துள்ளது. ஆனால் ஊர் என்பது ஊர் மக்கள் என்ற தொடரின் சுருங்கிய வடிவமல்ல. ஊர் என்ற இடப்பெயர் பொருண்மை விரிவுபெற்று ஊரிலுள்ள மக்களையும் சுட்டுகிறது. இடத்தின் பெயர் இடம்—இடத்தில் உள்ள பொருள் என்ற தொடர்பால் இடத்திலுள்ள பொருளுக்கு ஆகிவந்துள்ளது. எனவே இதில் பொருள் நிலையில் மாற்றமேயன்றிச் சொல் நிலையில் மாற்றமில்லை.

11. ஊர் அருகில் உள்ளது

12. ஊர் உன்னைக் கண்டு சிரித்தது

13. பூங்குழல் அவிழ்ந்தது

14. பூங்குழல் வந்தாள்

தொடரன் 11இல் உள்ள ஊர் என்ற சொல் தனக்குரிய இயல்பான பொருளையே (இடத்தை) சுட்டிற்று. தொடரன் 12இல் அது ஆகுபெயர்ப் பொருளை அதாவது ஊரிலுள்ள மக்களைச் சுட்டிற்று. தொடரன் 13இல் உள்ள பூங்குழல் என்ற சொல் கூந்தலைச் சுட்டிற்று. தொடரன் 14இல் உள்ள பூங்குழல் என்ற சொல் பூங்குழலை உடைய பெண் என்பதன் தொகையாக நின்றது.

**தொகை நிலைத் தொடரனும், விரிநிலைத் தொடரனும் :** பூங்குழல் வந்தாள் என்ற தொடரன் பூங்குழலையுடைய பெண் வந்தாள் எனவிரியும். பின்னதனை விரிநிலைத் தொடரன் என்றும் முன்னதனைத் தொகை நிலைத் தொடரன் என்றும்

குறிப்போம். ஊர் சிரித்தது என்பதற்கு ஊரில் உள்ள மக்கள் சிரித்தார்கள் என்று பொருள் சொல்லலாமேயன்றி முன்னதற்குப் பின்னது விரிநிலைத் தொடரன் என்று கூறமுடியாது.

14. பூங்குழல் வந்தாள்

15. பூங்குழலையுடைய பெண் வந்தாள்

16. ஊர் சிரிக்கிறது

தொடரன் 15ஐ நோக்க (ஒப்புமையான்) தொடரன் 14 தொகைநிலைத் தொடரன் ஆயிற்று. தொடரன் 14ஐ நோக்க அவ்வாறே தொடரன் 15 விரிநிலைத் தொடரன் ஆயிற்று. தொடரன் 16க்கு விரிநிலைத் தொடரனோ தொகைநிலைத் தொடரனோ இல்லை. அது தன்னளவில் நின்றது. விரிநிலைத் தொடரனில் உள்ள எழுவாய்க்கேற்பவே தொகைநிலைத் தொடரனில் பயனிலை அமைந்துள்ளதையும் தொடரன் 16இல் ஊர் என்ற சொல் அஃறிணைப்பொருள் தரினும் உயர்திணைப் பொருள் தரினும் சொல்நிலைக்கேற்பவே அஃறிணைப் பயனிலை அமைந்துள்ளதையும் கூர்ந்து நோக்கவேண்டும்.

இந்த நுண்ணிய வேற்றுமையை நன்கு தெரிந்து ஆகுபெயரையும் அன்மொழித் தொகையையும் வேறுபிரித்து இலக்கணம் வகுத்துத் தனிமொழி இலக்கணமும் தொடர்மொழி இலக்கணமும் தொகைமொழி இலக்கணமும் கூறிச் சென்றுள்ள தொல்காப்பியப் பெருந்தகையாரின் நுண்மாண் நுழைபுலமும் அறிவினதகலமும் நாம் எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்து பாராட்டற்பாலன. இப்பெருமூதறிஞர் வழங்கியருளிய தொல் காப்பியத் திருவிளக்கு, பல பேருண்மைகளைக் கண்டறிய நமக்கெல்லாம் உறுதுணையாகும் என்பது உறுதி.

மேற்கூறிய விளக்கங்களை நன்கு மனத்திற்கொண்டு பின்வரும் தொடரன்களையும் உற்றுநோக்கவேண்டும்.

17. காளை வந்தான்

18. பாவை வந்தாள்

காளை, பாவை என்பன சொல் நிலையான் அஃறிணையாயினும் உயர்திணைப் பயனிலைகளைப் பெற்று வந்துள்ளன. இவற்றைத் தேமொழி வந்தாள் பூங்குழல் வந்தாள் என்பவற்றோடு ஒப்பவைத்து எண்ணுவதா? அன்றி ஊர் சிரிக்கிறது என்பதனோடு ஒப்பவைப்பதா? தேமொழி வந்தாள் என்ற தொடரில் அஃறிணைப் பெயர் உயர்திணை வினையோடு

முடிந்ததைப் போலவே பாவை வந்தாள் என்பதிலும் அஃறிணைப் பெயர் உயர்திணை வினையோடு முடிந்துள்ளது என்று கூறத் தோன்றுகிறதல்லவா? தேமொழி வந்தாள் என்பதில் பெண் என்ற எழுவாய் மறைந்து நின்றது போலவே பாவை வந்தாள் என்பதிலும் அது மறைந்து நின்றது எனக் கூறினால் பாவை என்பதும் அன்மொழித்தொகை என்று கூறவேண்டும். அங்ஙனம் கூறுவது பொருந்துமா? இல்லையேல் ஊர் என்ற இடத்தின் பெயர் இடத்திலுள்ள மக்கட்கு ஆகிவந்தது போல, இங்குப் பாவை என்ற பொருட்பெயர் பாவை போன்ற பெண்ணுக்கு ஆகிவந்தது என்று கூறிப் 'பாவை' என்பதை ஆகு பெயர் என்று கூறவேண்டும். அங்ஙனம் கூறுவது பொருந்துமா? இந்த வினாவுக்கு விடை காண்பதில்தான் நாம் மிகமிக விழிப்பாக இருக்கவேண்டும்.

19. கோதை வந்தாள்
20. பூங்கோதை வந்தாள்
21. பூம்பாவை வந்தாள்
22. இளங்காளை வந்தான்

கோதை, பாவை, காளை என்பன அடைமொழி பெற்றும் பெறாதும் வருகின்றன. ஆனால் தேமொழி பூங்குழல் என்பன தேன், பூ என்ற அடைகள் இல்லாமல் அன்மொழித் தொகையாக வருவதில்லை. எனவே கோதை, பாவை, காளை என்பன அன்மொழித் தொகையல்ல என்பது தெளிவு. அன்றியும் பிறிதொரு தொகையை நிலைக்களனாகக் கொண்டுதான் அன்மொழித்தொகை பிறக்கும் என்று தொல்காப்பியரும் நன்னூலாரும் தெளிவாகக் கூறியுள்ளனர். பண்பு, உம்மை, வேற்றுமை ஆகிய தொகைகளை நிலைக்களனாகக்கொண்டு அன்மொழித் தொகை பிறக்கும் என்று தொல்காப்பியரும் வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை ஆகிய ஐந்து தொகை மேலும் அன்மொழி பிறக்கும் என்று நன்னூலாரும் கருதுவா ரெனினும் அன்மொழித் தொகை பிறிதோர் தொகையை நிலைக்களனாகக் கொண்டுதான் பிறக்கும் என்பது இருவருக்கும் ஒத்த முடிபாகவே உள்ளது. ஆகவே கோதை வந்தாள், பாவை வந்தாள், காளை வந்தான் என்பவற்றில் உள்ள பெயர்கள் அன்மொழித்தொகையாகா என்பது நன்கு உறுதிப்படுகிறது.

அப்படியானால் அவை ஆகுபெயர்களா? பாவை, காளை என்பன வற்றை இலக்கண உரையாசிரியர்கள் சிலர் உவமையாகு பெயர் எனக்கொண்டுள்ளனர்[9]. இக் கொள்கை தமிழ் மொழியின்

இலக்கண அமைப்புக்குப் பொருந்தாது. இவ்வுண்மையை நன்குணர்ந்தே தமிழ் மூதறிஞர் தொல்காப்பியரும் பன்னருஞ் சிறப்பிற் பவணந்தியும் 'உவமையாகுபெயர்' என ஒன்று கூருது சென்றனர்.

23. ஊர் உறங்கிற்று

24. உலகம் ஒப்பாது

25. கோதை சிரித்தாள்

தொடரன்கள் 23, 24இல் சொல் நிலையான் 'எழுவாய் பயனிலை இயைபு' அமைந்து நிற்கிறது. தொடரன் 25இல் மட்டும் இந்த இயைபு இல்லை. இங்கு நாம் காணும் தொடர்களில் உள்ள ஊர் உலகம் என்பவற்றினின்றும் கோதை யென்பது வேறுபட்ட இலக்கணம் உடையது என்பது தெளிவு. அதாவது கோதை, பாவை, காளை என்பன ஆகுபெயர்களல்ல. இவை ஆகுபெயர்களாயின், இவையும் (ஊர், உலகு என்ற ஆகு பெயர்கள் போல) இயற்பெயராக வருங்கால் ஏற்க வேண்டிய பால் விகுதியையே பயனிலைக் கண் ஏற்றுவர வேண்டுமல்லவா? அவ்வாறன்றி வேறு வகையான் பால்விகுதி ஏற்பதால் பாவை, கோதை, காளை என்பன ஆகுபெயரல்ல என்பது மீண்டும் உறுதிப்படுகிறது.

பாவை, கோதை, காளை என்பன ஆகுபெயருமன்று; அன்மொழித் தொகையுமன்றெனின், அவற்றிற்குக் கூறத்தக்க இலக்கண முடிபுதான் யாது? ஒரு பெண்ணைப் பாவையாகவும் கோதையாகவும் உருவகபடுத்திக் கூறுதல் இலக்கிய மரபு; அவள் பாவையாகவும், கோதையாகவும் அவள்மேல் அன்புடைய காதலனுக்குத் தோன்றலாம். எல்லோருக்கும் அப்படித் தோன்ற வேண்டுமென்பதில்லை. அவளை அவள் காதலன் பாவை என்றும் கோதை என்றும் புகழ்கிருன். நுண்ணுணர்வும் கலைத்திறனும் மிக்க புலமையுள்ளமும் ஒரு பெண்ணைப் பாவையாகவும், கோதை யாகவும் காண்பதுண்டு. இவ்வாறே காளை என்பதற்கும் பொருத்திக் காண்க. அற்றுயின் இவற்றை குடிமை, ஆண்மை......எனத் தொடங்கும் தொல்காப்பிய நூற்பாவில்[10] காணும் காதல், சிறப்பு முதலியவற்றுள் அடக்கிக் கொள்ளலாமோவெனின் அதுவும் பொருத்தமாக இல்லை. காதல் மிகுதியான் காதலன் தன் காதலியை, அன்பே; என் ஆருயிரே என்றெல்லாம் விளிக்கிருன். அன்பு மிகுதியால் தாய் தன் குழந்தையைக் கண்ணே, மணியே என்றெல்லாம் விளிக்கிருள். இவை போல்வன பொருள் நிலையான் உயர்திணை மருங்கின் நிலையினவாயினும் சொல்

நிலையான் அஃறிணை முடிபெய்தி நிற்கும். இந்த நாட்டிற்கு அவர்தான் உயிர் என்பன போலச் சிறப்புக் கருதி வருவனவும், இவன் ஒரு பிடை, இவன் ஒரு அசடு என்பன போலச் செறுதலைப் புலப்படுத்துவனவும் தொல்காப்பியர் கூறும் சிறப்பு, செறற் சொல் என்பனவற்றின் கீழ்க் கொள்ளத்தகும். இவையெல்லாம் சொல்நிலையான் அஃறிணையாக நின்று அஃறிணை முடிவே பெறுவன. தன்மகன் வரக்கண்டு மகிழும் தாய் என் கண்மணி வந்தது என்னும் போதும், இடைவிடாது தொல்லை செய்யும் ஒருவனிடமிருந்து விடுதலை பெற்றுெருவன் பிடை தொலைந்தது என்னும்போதும் கண்மணி, பிடை என்பன அஃறிணைச் சொல்லாக நின்று அஃறிணை முடிபெய்தி உயர்திணையைச் சுட்டி நிற்கின்றன.

25. கோதை சிரித்தாள்
26. கண்மணி வந்தது
27. பிடை தொலைந்தது

தொடரன் 25இல் உள்ள பயனிலையையும் ஏனைய தொடரன் களில் உள்ள பயனிலையையும் காண்க. தொடரன்கள் 26, 27இல் சொல் நிலையில் 'எழுவாய் பயனிலை இயைபு' காணப்படுகிறது. அதாவது அஃறிணைப் பெயர் அஃறிணை வினையோடு முடிந்தது.

கோதை, பாவை, காளை என்பன ஆகுபெயருமல்ல — அன்மொழித் தொகையுமல்ல; குடிமை, ஆண்மை......எனத் தொடங்கும் நூற்பாவில் உள்ள காதல், சிறப்பு என்பவற்றின் கீழ் இவை அடங்குவனவுமல்ல. மேற்காண்பன ஒருமொழியான் நிற்பதாலும், உருவக நடையில் இயல்வதாலும் இவற்றை ஒரு மொழி உருவகம் என்று கூறலாம். தொல்காப்பியர் எச்சவியலின் கண் கூறியுள்ள, பெயர் நிலைக்கிளவியின் ஆகுநவும் என்பதன் கீழ்க் கோதை, பாவை, காளை என்பனவற்றை அடக்கிக் கொள்ளலாம். வீட்டில் மிக அன்போடு வளர்க்கப்படும் நாய்க் குட்டியை அவ்வீட்டில் வளரும் ஆண் குழந்தைக்குத் தம்பி என்பதும் அவ்வாறே கிளி முதலானவற்றைத் தங்கை, தோழி என்பதும் 'பெயர் நிலைக்கிளவியின் ஆ அகுந' எனக்கொள்ளுதல் சாலப் பொருந்தும். தொல்காப்பியப் பெருந்தகையார் காலத்தில் உருவகத்திற்குத் தனியான இடந்தரப்படவில்லையாதலின் கோதை, பாவை, காளை என்பனவற்றை அவர் ஒருமொழி உருவகம் என்று இலக்கணம் அமைக்கவில்லை. பூங்கோதை, பூம்பாவை, இளங்காளை என்பன இருமொழிகளால் வந்துள்ளன. ஆகவே ஒருமொழி உருவகம் என்பது பொருந்துமாவெனின் இங்குக் கோதை, பாவை, காளை என்னும் தனி மொழிகளே

உருவகமாதலானும்; பூ, இளமை முதலிய அடைகள் இல்லாமலும் அவை தம் பொருளைக் குறிக்குமாதலானும் முகமதி, கண்மலர் முதலிய இருமொழி உருவகத்தினின்றும் கோதை, பாவை என்பவற்றை வேறுபடுத்திக் கூறவேண்டுமாதலானும் ஒருமொழி யுருவகம் என்ற பெயர் சொல்லளவிலேயே முகமதி, பாவை என்பவற்றிலுள்ள அமைப்பு வேறுபாட்டை உணர்த்துத லானும் கோதை, பாவை, காளை என்பனவற்றை அவை அடை யோடு வரினும் அடையின்றி வரினும் ஒருமொழி யுருவகம் என்றே கூறுதல் சாலப்பொருந்தும்.

சொற்றொடரியலின் துணைகொண்டு இதுவரை ஆகுபெயர், அன்மொழி, உருவகம் ஆகியவற்றின் ஒற்றுமை வேற்றுமை களைக் கண்டோம். பின்வரும் சொற்றொடரமைப்புகளை உற்று நோக்கின் இதுகாறும் விளக்கிய செய்திகள் மிக நன்கு தெளிவாகும்.

28. அவன் போக்கைப் பார்த்து ஊர் சிரிக்கிறது

29. எனக்குத் தெரியாமல் கோதை என்னொடு வருகிறாள்

30. அவனைக் கண்டவுடன் அந்தத் தேமொழி புன்னகை பூத்தாள்

(அ) ஊர் சிரிக்கிறது (ஆகுபெயர்).

அஃறிணைப் பெயர் உயர்திணைப் பொருட்கு ஆகிவந்து அஃறிணை விகுதிபெற்ற வினையைப் பயனிலையாகக் கொண் டுள்ளது.

(ஆ) கோதை வந்தாள் (ஒரு மொழியுருவகம்)

உயர்திணைப் பொருள் அஃறிணைச் சொல்லால் உருவகப் படுத்தப் பெற்று உயர்திணை வினையே பெற்றது.

(இ) தேமொழி வந்தாள் (அன்மொழித்தொகை)

தேமொழியையுடைய பெண் என்ற விரி தேமொழி என்று தொகுக்கப்பட்டு அது விரி தொடரில் உள்ள பெண் என்ற எழுவாய்க்குரிய பயனிலையே பெற்று நிற்கிறது.

III

இனித் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள 'இருபெயரொட்டு' யாது என்பதில் நமக்குத் தெளிவு வேண்டும். ஆகுபெயர்

அன்மொழி பற்றி மயக்கம் எழுந்தமைக்கும் கருத்து வேற்றுமை வளர்ந்தமைக்கும் இந்த 'இருபெயரொட்டு' ஒரு முதன்மையான காரணமாகும். ஆகுபெயர்ப் பகுப்பில் 'இருபெயரொட்டு' இல்லையானுல் பொற்றெடி என்பதைச் சேனவரையரும், துடியிடை என்பதைத் தெய்வச்சிலையாரும், பொற்றெடி என்பதையே இளம்பூரணரும் இருபெயரொட்டுக்கு எடுத்துக் காட்டாகக் காட்டியிருக்க மாட்டார்கள். 'பொற்றெடியென்பது அன்மொழி; ஆகுபெயர் அன்மை உணர்க' என்று நச்சினர்க்கினியர் எழுதியிருக்கவும் மாட்டார். இரு பெயர்கள் ஒட்டியும் வரவேண்டும்; அந்த ஒட்டு பிறிதொன்றனைச் சுட்டவும் வேண்டும். இந்நிலையில்தான் சேனவரையரும், இளம்பூரணரும், தெய்வச் சிலையாரும் பொற்றெடி, துடியிடை முதலிய காட்டுகளை வழங்க முற்படுகின்றனர். இங்குதான் ஆகுபெயரும் அன்மொழியும் ஒன்ரு என்ற வினவையும் எழுப்பிக்கொண்டு, தெய்வச் சிலையாரும் சேனவரையரும் அமைதி கூறவும் முற்பட்டுள்ளனர். இருபெயரொட்டுக்கு மக்கட்சுட்டு என்பதனைக் காட்டாகக் கொடுத்துவிட்டு, 'பொற்றெடி என்பது அன்மொழி; ஆகுபெயரன்மை உணர்க' என்று சேனவரையரையும் இளம்பூரணரையும் மறுத்துவிட்டுச் செல்கிருர் நச்சினர்க்கினியர்.[11] 'கனங்குழை' என்பதற்கு ஆகுபெயர் என்று இலக்கணக் குறிப்பு எழுதி வைத்துவிட்டார் பரிமேலழகர்.[12] அருந்திறல் என்பதனை 'அன்மொழித்தொகையாகுபெயர்' என்ருர் அடியார்க்கு நல்லார்.[13] திருவாசகம், திருவாய்மொழி என்பவற்றைச் சங்கர நமச்சிவாயர், ஆறுமுகநாவலர் ஆகியோர் ஆகுபெயர் என்றனர்.[14] 'திருவாசகம், திருவாய்மொழி என்பன உண்மையான் நோக்குவார்க்கு அன்மொழித் தொகையாவன வன்றி ஆகுபெயராகாமை உணர்க' என்று மாதவச் சிவஞான வள்ளல் கூறிச் செல்கிருர்.[15] இவ்வாருக ஆகுபெயர் அன்மொழிபற்றிய குழப்பம் உச்ச நிலைக்குச் சென்றது.

இவையன்றியும் அடைமொழியோடு வரும் ஆகுபெயரை இலக்கணக் கொத்துடையார் பண்புத் தொகையில் அடக்கு கிருர்.[16] இந்த நிலையில் இருபெயரொட்டுப் பண்புத் தொகைக்கும் இருபெயரொட்டாகுபெயர்க்கும் வேற்றுமை யாது என்ற வினவும் நம் உள்ளத்தில் எழுகிறது. இஃதன்றியும் இலக்கண விளக்கத்தின் உரையில் மக்கட்சுட்டு என்பது இருபெய ரொட்டாகு பெயரெனவும் பொற்றெடி என்பது அன்மொழித் தொகையே எனவும் பிறர் கொண்ட கொள்கை மறுக்கப் படுகிறது.

'அற்றேல், மக்கட்சுட்டென்றவழி மக்களாகிய சுட்டு மக்கட் சுட்டு. சுட்டு, நன்மதிப்பு; அஃது ஆகுபெயராய் மக்கட்பொருளை உணர்த்தும்; உணர்த்தவே மக்கட்சுட்டென்பது பிறிது பொருள் உணர்த்தாது அம்மக்களையே உணர்த்தி நிற்றலானும், பொற்றொடி என்பது பொன்னும் தொடியுமன்றி அணிந்தாள் எனப் பிறிதுபொருள் உணர்த்தி நிற்றலானும், இருபெய ரொட்டாகு பெயரும் வேறே அன்மொழித்தொகையும் வேறே எனக்கொண்டு, ஈண்டு மக்கட்சுட்டென்பதனை இருபெய ரொட்டாகு பெயர்க்கு உதாரணமாக்கி ஆண்டுப் பொற்றொடி யென்பதனை அன்மொழித் தொகைக்கு உதாரணமாக்கிற்படும் இழுக்கு என்னை யெனின்; மக்கட்சுட்டே இருபெயரொட்டாகு பெயராய் அச்சுட்டு மக்களை உணர்த்திற்றேல் மக்களாகிய மக்க ளென்று வருவதல்லது ஒன்றை யொன்று விசேடித்து இன்னது இதுவென வாராமையின் மக்கட் சுட்டே இருபெயரொட் டாகாமையின் இருபெயரொட்டாகு பெயராமாறு யாண்டைய தென்பதாம்'—என்பது இலக்கண விளக்கத்தில் காணும் மறுப்புப் பகுதியாகும்.[17]

இப்போது இருபெயரொட்டுப் பண்புத்தொகை, இரு பெயரொட்டாகு பெயர், அன்மொழித் தொகை ஆகிய இம் மூன்றற்கும் உள்ள வேறுபாட்டினைக் கண்டறிய வேண்டுவது நமக்குக் கடமையாகிறது.

31. சாரைப்பாம்பு ஓடிற்று

32. கொள்ளைக் கூட்டம் வந்தது

33. மலர்விழி வந்தாள்

சாரைப்பாம்பு என்பதில் இரண்டு பெயர்கள் ஒட்டி நின்று பாம்பின் ஒருவகையதாகிய சாரைப்பாம்பைக் குறித்தது. சாரை என்ற அடை ஏனைய பாம்பின் இது வேறு என வேறுபடுத்திற்று. பாம்பு என்ற சொல் இயற்பெயர்ப் பொருளையே கொண்டு நின்றது. கொள்ளைக் கூட்டம் என்பதிலும் இரண்டு பெயர்கள் ஒட்டி நிற்கின்றன. ஆனால் கூட்டம் என்பது இயற்பெயர்ப் பொருளாகிய 'தொகுதி' என்ற பொருளைச் சுட்டுவதோடு நில்லாமல் கூட்டமாக உள்ள மக்களைச் சுட்டிற்று. கொள்ளை என்ற அடைமொழி கூட்டம் என்ற ஆகுபெயர்ப் பொருளையே தழுவிற்று. முன்னது இருபெயரொட்டுப் பண்புத் தொகை. பின்னது இருபெயரொட்டாகுபெயர். சாரைப் பாம்பு என்பதில் பாம்பு என்பது இயற்பெயராகவே நிற்கிறது. கொள்ளைக் கூட்டம் என்பதில் கூட்டம் என்பது ஆகுபெயராக நிற்கிறது.

முன்னதில் சாரை என்ற அடை இயற்பெயர்ப் பொருளைத் தழுவிற்று; பின்னதில் கொள்ளை என்ற அடை ஆகுபெயர்ப் பொருளைத் தழுவிற்று. மலர்விழி என்பது உவமைத் தொகையாய் நின்று அதனை உடைய பெண் எனப் புறமொழிக் கண் பொருள் சிறந்து மலர்விழியை உடைய பெண் என்பதன் சுருங்கிய வடிவாய் நின்று அன்மொழித் தொகையாயிற்று. இதன்கண் கண்டதுபோல் அல்லாத மொழி தொக்கு நிற்றல் ஏனைய இரண்டிற்கும் பொருந்தாது. எனவே மேற்காட்டிய மூன்றும் உருவத்தால் ஒருவகையான் ஒற்றுமையுடையவாயினும் அவை தம்முள் வேறுபட்டனவே என்பது தெளிவு.

மாதவச் சிவஞான அடிகள் இருபெயரொட்டாகு பெயர்க்கும் அன்மொழிக்கும் உள்ள வேற்றுமையை நுண்ணிதின் உணர்ந்து தெளிவாக்குகிறார்.

'இருபெயரொட்டாகு பெயர் இருமொழிக்கண் வந்ததன்றோ எனின் :- அன்று, என்னை? வகரக்கிளவி, அதுவாகு கிளவி, மக்கட்சுட்டு என்னும் இருபெயரொட்டாகு பெயருள், வகரமும் அதுவாதலும் மக்களுமாகிய அடைமொழிகள் கிளவி சுட் டென்னும் இயற்பெயர்ப் பொருளை விசேடித்து நில்லாது, எழுத்தும் சொற்பொருளும் பொருளுமாகிய ஆகுபெயர்ப் பொருளை விசேடித்து நிற்ப, கிளவி சுட்டென்பனவே ஆகு பெயராய் அப்பொருளை உணர்த்த, இருபெயரும் ஒட்டிநிற்கு மாகலின். இனிப் பொற்றொடி என்னும் அன்மொழித்தொகையில் பொன் என்பது அவ்வாறு அன்மொழித் தொகைப் பொருளை விசேடித்து நில்லாது தொடியினையே விசேடித்து நிற்ப, அவ் விரண்டன் தொகையாற்றலான் அன்மொழித் தொகைப் பொருளை உணர்த்துமாறும் அறிக.' என வரும் மாதவச் சிவஞான முனிவரின் விளக்கம் நமக்குப் பெரிதும் துணையாகிறது. கொள்ளைக் கூட்டம் என்பதில் கொள்ளை என்ற அடை ஆகு பெயர்ப் பொருளைத் தழுவி நிற்க, மலர்விழி என்பதில் மலர் என்ற அடை விழியையே தழுவி உவமைத் தொகையாகி அதன்பின் அன்மொழித் தொகையிலக்கணம் பெறுகிறது. மலர் போன்ற விழியையுடைய பெண் என்பதன் தொகை வடிவமே மலர்விழி என்பது.

## IV

கனங்குழை என்பது ஆகுபெயரா? அன்மொழித்தொகையா? ஒரு சொற்றொடர்க்கு நாம் பொருள்கொள்வதற்கேற்பவே இலக்கணக் குறிப்பும் அமையும். எழுபிறப்பு என்பதனை

எழுமை—பிறப்பு எனக்கொண்டால் பண்புத்தொகையாகும். அதனையே எழுபிறப்பு எனக்கொண்டால் வினைத்தொகையாகும்.

'அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு'

என்ற திருக்குறளை உரைநடை யமைப்புக்குக் கொண்டு வந்தால் அது கனங்குழை அணங்கு கொல் ஆய்மயில் கொல்லோ! மாதர் கொல்! என்நெஞ்சு மாலும்! என அமையும். கனங்குழை என்பதனைப் பெண் என்று பொருள் கொண்டால் அது மாதர் கொல் என்பதனோடு நன்கு பொருந்தாது முரணும். இங்குத் தோன்றும் இவ்வுரு அணங்கா? மயிலா? பெண்ணா? எனின் நன்கு இயையும். குற்றியோ மகனோ என ஐயம் ஏற்பட்டவழி இவன் குற்றியோ மகனோ என்பதும், இது குற்றியோ மகனோ என்பதும் பொருந்தாதனவாம், 'குற்றிகொல்லோ மகன் கொல்லோ தோன்றாநின்ற உரு என்பதே பொருத்தமாம். இங்கு உரு என்பது குற்றிக்கும் மகனுக்கும் பொதுவாய் நின்றது. இவ்வாறே அங்கும் இவ்வுரு அணங்குகொல்! மயில்கொல்! மாதர் கொல்! எனின் நன்கு இயையும். கனங்குழை என்ற பெயர் கனங்குழையோடு நிற்கும் உருவுக்கு ஆகுபெயராயிற்று எனக் கொண்டு 'கனங்குழை அணங்குகொல்! ஆய்மயில்கொல்! மாதர் கொல்! என்நெஞ்சு மாலும்' எனக் கூறின் நன்கு இயையும். இக்கருத்து ஏற்கப்பட்டால் கனங்குழை என்பதனை ஆகுபெய ரென்று கூறுதல் சரியே. ஆனால் கனங்குழை என்பதற்கு 'இக்கனவிய குழையை உடையாள்' என்று பொருள் கூறுகிறார் பரிமேலழகர். 'இக்கனவிய குழையை உடையாள்' என்பதே பொருளாயின் பெண்ணையே கனங்குழை என்று தலைவன் கூறுகிறான் என்பதும் தான் ஒரு பெண்முன்னே நிற்கும் உணர் வுடையான் என்பதும் பெறப்படும். பெறப்படவே ஒரு பெண்ணைப் பார்த்து, பெண்ணென்று அறிந்த நிலையிலேயே இவள் பெண்ணோ என்று ஐயுற்றான் என்பது பொருந்தாது.

இந்தக் குறட்பாவுக்குரிய சூழலையும் பொருளையும் நோக்கும் போது கனங்குழை என்பது கனங்குழையோடு நிற்கும் உருவுக்கு ஆகிவந்ததாகக் கொண்டு அதனால் கனங்குழை என்பது ஆகுபெயர் எனக்கூறின் நன்கு பொருந்தும். கனங்குழை என்பதற்குக் கனவிய குழையை உடையாள் (கனவிய குழையை உடைய பெண்) என்று பொருள் செய்தால் அது ஆகுபெய ராகாது; அன்மொழித் தொகையேயாம்.

**அன்மொழித்தொகையாகுபெயர் :** 'அருந்திறல் பிரிந்த அயோத்திபோல' எனவரும் சிலப்பதிகார அடியிலுள்ள 'அருந்

திறல்' என்ற தொடர் அன்மொழித்தொகை யாகுபெயர் என்று கூறுகிறார் அடியார்க்கு நல்லார். ஈண்டு அருந்திறல் என்பது இராமனைக் குறிப்பது. அருந்திறல் பிரிந்த அயோத்தி என்பது அருந்திறல் அயோத்தியைப் பிரிந்தான்......அந்த அயோத்தி என்பதன் மறுவடிவமாகும். அருந்திறல் பிரிந்தான் என்றவழி அருந்திறல் என்பது அருந்திறலையுடைய இராமன் என்பதன் தொகை வடிவில் நிற்றலின் அது அன்மொழித்தொகையேயாம். இருசொல் இணைந்து நின்று அத்தொடர் வேறொன்றைக் குறிப்பதனால் ஆகுபெயர் எனவும் தொகையை நிலைக்களனாகக் கொண்டு பிறக்கும் அன்மொழி போல இதுவும் அமைந்து புறத்துப் பொருள் சிறந்து நின்றமையான் அன்மொழித் தொகை எனவும் கொண்டு 'அருந்திறல்' என்பதனை அன்மொழித் தொகையாகு பெயர் என்றார் அடியார்க்கு நல்லார். அரும் என்ற அடை ஆகுபெயர்ப் பொருளுக்குச் செல்லாது திறல் என்பதற்கே சேறலானும், அருந்திறல் என்பது அருந்திறலையுடைய இராமன் என்பதன் சுருங்கிய வடிவாக நிற்றலானும் அது ஆகுபெயரன்று என்பதும் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாம் என்பதும் இனிது பெறப்படும்.

திருவாசகம், திருவாய்மொழி என்பன அன்மொழித் தொகையா? இவை உண்மையான் நோக்குவார்க்கு அன்மொழித் தொகையே என்று கூறுகிறார் சிவஞானமுனிவர் பெருமான். திருவாசகம் படித்தான் என்ற வழி திருவாசகம் என்னும் நூல் படித்தான் என்பதே பொருள். வாசகம் என்றசொல் அடையடுத்து நின்று அதுவே நூலுக்கு ஆயிற்று எனக்கொண்டால் இது ஆகுபெயராம். அவ்வாறன்றித் 'திருவாசகம்' என்பதைத் 'திருவாசகம்' என்னும் நூல் என்பதன் தொகை வடிவமாகவோ அல்லது 'திருவாசகத்தால் ஆகிய நூல்' என்பதன் தொகை வடிவமாகவோ கொண்டால் அஃது அன்மொழித்தொகையேயாம். மேற்காட்டிய இரு விரி தொடர்களிலும் நூல் என்ற அல்லாத மொழி நிற்பதைக் காண்க. திருவாசகம் திருவாய்மொழி என்பவற்றின் விரிவடிவம் நூல் என்ற அல்லாத மொழியைக் கொண்டே அமையவேண்டும் என்று சிவஞான அடிகளார் கருதுவதால் திருவாசகம் திருவாய்மொழி என்பன உண்மையான் நோக்குவார்க்கு அன்மொழித் தொகையாவனவன்றி ஆகு பெயராகாமை உணர்க என்று கூறிச் செல்கிறார். எனவே திருவாசகம் திருவாய்மொழி என்பன நாம் கொள்ளும் பொருள் விளக்கம் சொல் விளக்கங்களுக்கேற்ப ஆகுபெயராகவும் அன்மொழியாகவும் அமையும்.

ஆகுபெயரை ஓர் உறுப்பாகக் கொண்டு தொகை நிலைத் தொடர் அமையும்போது அஃது ஒரு தொகையில் அடங்க வேண்டுமல்லவா? புளி என்ற சுவையின் பெயர் அச்சுவையினை உடைய புளியம் பழத்திற்கு ஆகி வந்தது. இந்த ஆகுபெயர் பழம்புளி, புதுப்புளி என்ற தொடர்களில் உறுப்பாகி நின்றது. பழம்புளி என்பது பண்புத்தொகை. பண்புத் தொகையில் ஆகுபெயர் நிற்பதும் உண்டாதலின் அவ்வாறு நிற்பவற்றை வகை பிரித்துப் பண்புத் தொகையிலேயே ஓர் இடந்தருகிறார் இலக்கணக் கொத்துடையார்.

V

ஆகுபெயர் அன்மொழித் தொகை என்னும் இவற்றைப் பற்றி எழுந்த சிக்கலுக்கு விடை காணும்போது இவற்றோடு இயைபுடைய உருவகம், இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்னும் இவை பற்றியும் தெளிவை ஏற்படுத்திக் கொள்வது இன்றியமையாததாகிவிட்டது. இதுகாறும் கூறியவாற்றான் ஒருமொழிக்கண் நிற்கும் உருவகமும் ஆகுபெயரும் வேறு வேறென்பதும், இருபெயரொட்டாகுபெயரும், அன்மொழித் தொகையும், இருபெயரொட்டுப் பண்புத் தொகையும் தம்முள் வேற்றுமை உடையன என்பதும், உருவகம், அன்மொழி, ஆகு பெயர், இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்பவற்றிடையே ஒருவகை ஒற்றுமை காணப்பட்ட போதிலும் இவையாவும் தம்முள் இலக்கண அடிப்படையில் புறக்கணிக்க இயலாத அளவில் வேறுபாடுடையன என்பதும் நன்கு தெளியப் படும். இவற்றிடையே கண்ட நுண்ணிய வேறுபாடுகளைத் தொடரியல் இலக்கணத்தின் துணைகொண்டு விளக்கிக்காட்ட முற்பட்டிருக்கின்றான் இக்கட்டுரையாசிரியன். ஆகுபெயர் அன்மொழித்தொகை பற்றிய பிறருடைய கருத்துக்கள் எல்லா வற்றையும் எடுத்துரைப்பதும் உடன்படுவதும் மறுப்பதும் புதிய முறையில் விளக்கம் காணும் இந்நெடிய கட்டுரையில் தெளிவைக் குறைத்து மயக்கம் விளைக்குமாதலின் இக்கட்டுரையாசிரியன் அங்ஙனம் செய்யாது விடுத்தான். ஆகுபெயர், அன்மொழி பற்றித் தெளிவின்றிக் குழம்பியிருக்கும் அன்புத்தமிழ் நெஞ்சங் களுக்கு இக்கட்டுரை ஓரளவாவது தெளிவு வழங்கும் என்பதும் இன்னும் தெளிவான எளிமையான விளக்கம் கிடைத்தால் இக் கட்டுரையாசிரியன் மிகவும் மகிழ்ச்சியோடு அதனை ஏற்றுக் கொள்வான் என்பதும் உறுதி.

## குறிப்பு

ஆகுபெயர், அன்மொழித் தொகைகளைத் தொடரியல் இலக்கணத்தின் துணைகொண்டு ஆராய்ந்து புதிய விளக்கம் காணும் முயற்சியை வரவேற்று ஆங்காங்கு எழுந்த சிக்கல்களைத் தீர்க்க வழி கூறி ஊக்கமூட்டினார் எங்கள் பேராசிரியர் டாக்டர் ச. அகத்தியலிங்கனார் அவர்கள். இக் கட்டுரை உருவாகும்போது என் ஆசிரியப் பெருமக்கள் செ. வை. சண்முகனார், ந. குமாரசாமி ராஜா ஆகியோர்கள் அவ்வப்போது எழுந்த சிக்கல்களைத் தீர்க்க உதவி செய்து ஊக்கமும் அளித்தார்கள். எனது அன்பு நண்பர்கள் இரா. கோதண்டராமன் M.A., சி. மெய்கண்டான் M.A., வ. ஞான சுந்தரம் M.A, B.O L. ஆகியோர்கள் நான் கலந்து பேசிச் சிந்திக்க வாய்ப்பளித்து, இக்கட்டுரை விளக்கமும், தெளிவும்பெற உதவி செய்தார்கள். அன்றியும் ஆகுபெயரன்மொழித் தொகை பற்றி நல்லதோர் விளக்கம் தர வேண்டும் என்று கேட்டு, என்னுள்ளத்தில் ஒரு மூலையில் கிடந்த எண்ணத்திற்கு முழுவடிவம் தர ஒரு நல்ல வாய்ப்பினை ஏற்படுத்தினார் தமிழணங்கு ஆசிரியர் வித்துவான் மு. த. வேலாயுதனார். இவர்கள் எல்லோருக்கும் என் உளங்கனிந்த நன்றி. இங்குப் பயன்படுத்தப்பட்டுள்ள நூலாசிரியர்கட்குத் தமிழுலகமே நன்றி செலுத்துகிறது. தமிழுலகில் நானும் ஒரு சிறு உறுப்பினனே.

1. தொல்காப்பியம் சொல்லதிகாரம் 114
2. ,, ,, 115
3. நன்னூல் 210
4. தொல்காப்பியம் சொல்லதிகாரம் 114
5. தொல்காப்பியம் சொல்லதிகாரம் 418
6 நன்னூல் 369
7, 'உவமையும் பொருளும் வேற்றுமை ஒழித்
தொன்றென மாட்டின ஃதுருவகமாகும்' இலக்கணவிளக்கம் 643
'உவமையும் பொருளும் வேற்றுமை ஒழித்
தொன்றென மாட்டின ஃதுருவகமாகும்'' தண்டியலங்காரம் 35.
8. தொல்காப்பியம் சொல்லதிகாரம் 11
9. சேனாவரையர், இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோர் 'பாவை' 'காரி' என்பன உவமையாகு பெயர் என்னும் கருத்தினர்.
10 தொல்காப்பியம் சொல்லதிகாரம் 56
11. தொல்காப்பியம் சொல்லதிகாரம் (நச்சினார்க்கினியம்) 115
12. திருக்குறள் (பரிமேலழகருரை) 1081
13. சிலப்பதிகாரம் (அடியார்க்கு நல்லாருரை) 13-65
14 நன்னூல் 290
15. இலக்கண விளக்கச் சூறாவளி
16 இலக்கணக் கொத்து 98
17. இலக்கண விளக்கம் 192
18. தொல்காப்பியச் சூத்திர விருத்தி
19. திருக்குறள் 1081
20. தொல்காப்பியம் சொல்லதிகாரம் (சேனாவரையம்) 24
21. சிலப்பதிகாரம். 13-65

## உதவிய நூல்கள்


1 தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம்

2. ,, ,, நச்சினார்க்கினியம்

3. ,, ,, இளம்பூரணம்

4. ,, ,, தெய்வச்சிலையார்

5. தொல். சொல். குறிப்பு. பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார்

6. Tolkappiyam Chollatikaram P. S. Subramaniya Sasthiri with an English Commentary

7. தொல்காப்பியச் சூத்திர விருத்தி சிவஞான சுவாமிகள்

8. இலக்கண விளக்கச் சூறாவளி ,,

9. நன்னூல் விருத்தியுரை ,,

10. நன்னூல் காண்டிகையுரை, ஆறுமுக நாவலர்

11. இலக்கணக் கொத்து. சுவாமிநாத தேசிகர்

12. வீரசோழியம். புத்தமித்திரனார்

13 திருக்குறள். பரிமேலழகருரை

14. சிலப்பதிகாரம். அடியார்க்கு நல்லாருரை

15. செந்தமிழ் தொகுதி 2.


---

3

# 'மை' ஈற்றுப் பண்புப் பெயர்

செம்மை, சிறுமை, நன்மை, தீமை முதலிய பெயர்கள் தமிழில் நன்கு பழக்கத்தில் உள்ளன. இவற்றை மை ஈற்றுப் பண்புப் பெயர்கள் என்று குறிப்பர். இதனையே பண்புப் பெயர் விகுதி 'மை' என்று கூறுவது பொருந்துமா? இவ்வினாவுக்குத் தெளிவான விடை காண்பதே இக் கட்டுரையின் நோக்கம்.

**'மை' ஈறு? 'ஐ' ஈறு?**—செம்மை, சிறுமை, நன்மை, தீமை முதலாகிய கிளவிகளில் 'மை' ஈற்றைக் காண்கிறோம். ஆனால் வெள்ளை, பச்சை, பொறை, நிறை முதலாகிய கிளவிகளில் 'ஐ' ஈற்றை மட்டுமே காண்கிறோம். ஓரிடத்து 'மை' ஈறும் ஓரிடத்து 'ஐ' ஈறும் காணப்படும்போது பண்புப்பெயர் விகுதி என்று எதனை ஏற்பது? 'மை' ஈற்றையா? அல்லது 'ஐ' ஈற்றையா?

**'மை' ஈறே பண்புப் பெயர் விகுதி என்பார் கூறும் விளக்கம் :** உண்மை, நன்மை, பொன்மை ஆகிய கிளவிகளை உள்-மை, நல்-மை, பொன்-மை என முறையே பிரித்து, விதி கூறலாம். இவ்விடங்களில் ஐகாரத்தைப் பிரிப்பது இயலாது. எனவே பண்புப்பெயர் விகுதி 'மை' தான் என்பது அவர்தம் கோட்பாடு

**பண்புப்பெயர் விகுதி 'மை' ஈறல்ல :** 'மை' ஈற்றைப் பிரித்து அதனை விகுதியென்று கூறுவதே முறையாயின் திறமை, கடமை, மடமை, வளமை, புலமை முதலாகிய பண்புப் பெயர்களிலும் 'மை' ஈற்றையே பிரித்து, அதனைப் பண்புப் பெயர் விகுதி என்று கூறல் வேண்டும். அவ்வாறு பிரித்தால் நமக்கு ஏற்படும் இடர்ப்பாட்டைக் காண்போம். நாம் இங்குக் காட்டிய திறமை முதலாகிய கிளவிகளை முறையே திற-மை, கட-மை, மட-மை, வள-மை, புல-மை என்று

பிரித்துக் கூறுவது சற்றும் பொருத்தமாகத் தோன்றவில்லை. எனவே 'மை' ஈறுதான் பண்புப்பெயர் விகுதி என்று கூறுவது பொருந்தாது. இவ்விடர்ப்பாடு கருதியே நன்னூலார் போன்ற நம் தமிழிலக்கண வல்லுநர்கள் இவற்றைப் 'பகாநிலைப் பதம்' எனக் குறித்தனர் போலும்.

**பண்புப்பெயர் விகுதி 'ஐ' ஈறுதான் :** இந்தச் சிக்கலை நாம் நன்கு ஊடுருவிப் பார்த்தால் 'ஐ' ஈறுதான் பண்புப் பெயர் விகுதியாக இருந்ததென்றும், காலப் போக்கில் 'ஐ' யீற்றையே 'மை' யீருகப் பிறழக் கொண்டனர் என்பதும் தெளிவாக விளங்குகின்றது. கீழ்வரும் சொற்களை நோக்குங்கள்:

திறம் } திறம்+ஐ > திறமை
திறன் }

கடம் } கடம்+ஐ > கடமை
கடன் }

மடம் மடம்+ஐ > மடமை

வளம் } வளம்+ஐ > வளமை
வளன் }

புலம் } புலம்+ஐ > புலமை
புலன் }

மேற்கண்ட சொல்லமைப்பு முறையின் வாயிலாகப் பண்புப் பெயர் விகுதியாவது ஐகார ஈறே என்பது தெளிவுபெறும். 'அம்' இறுதியோடு ஐகாரம் சேர்ந்தபின் அக்கிளவிகளை வழுப் படப் பிரித்து 'மை' ஈற்றையே பண்புப்பெயர் விகுதியென்று கூறி இடர்ப்பட்டுள்ளனர்.

நன்மை, தீமை, செம்மை, சிறுமை, வன்மை முதலாகிய கிளவிகளிலும் பண்புப்பெயர் விகுதி 'ஐ' தானு?

இவ்வினுவுக்குத்தான் மிகவும் கவனமான விடைகாண வேண்டியுள்ளது. மொழியின் சொல்லமைப்பு. பொருள் மாற்றம், புணர்ச்சி மாற்றம் இவற்றையெல்லாம் நுனித்து நோக்கினுல் அம்மொழியின் மிகப் பழங்கால நிலையை நாம் ஒருவாறு கண்டறியலாம். அவ்வாறு நோக்கித்தான் மேற்கண்ட வினுவிற்கு நாம் விடைபகர வேண்டும். நுண்மாண் நுழை புலனேடு இச்சிக்கலில் நாம் ஊடுருவிச் சென்றுல் நமக்கு மிக நல்ல தெளிவு ஏற்படும். கீழ்வரும் சொற்களின் அமைப்பை நோக்குங்கள்.

| 1 | 2 | 3 |
|---|---|---|
| நல் | நலம் | நன்மை |
| பொல் | பொலம் | பொன்மை |
| வள் | வளம் | வண்மை |
| வல் | வலம் | வன்மை |
| உள் | உளம் | உண்மை |

முதல் வரிசையில் (மேலிருந்து கீழ்) உள்ள ஈரெழுத்தொரு மொழிகள் யாவும் வேர்ச் சொற்கள் (Root Morphemes) அல்லது அடிச்சொற்கள் எனப் பெயர் பெறும். இரண்டாவது வரிசையில் உள்ள சொற்கள் யாவும் 'அம்' விகுதியை ஏற்றுள்ளன. மூன்ருவது வரிசையில் உள்ள சொற்களில் ஐகார ஈறு காணப்படுகிறது. ஆனல், மூன்ருவது வரிசையிலுள்ள சொற்களை எப்படிப் பிரிப்பது?

நல்+அம்+ஐ > நன்மை.

நல் அம் ஐ என்ற மூன்று கிளவிகளும் சேர்ந்து நலமை என்ற சொல் உருவாகியிருந்தால் நமக்கு இங்கு ஒன்றும் சிக்கல் இல்லை. நலமை என்ற சொல்லுக்குப் பதிலாக நன்மை என்ற சொல்லைத்தான் காண்கிறோம். இதனை எப்படி விளக்குவது? 'நலமை' என்ற கிளவி 'நன்மை' என்று மாறுமா? மாறக்கூடா தென்பதில்லை. வளமை, வண்மை என்ற கிளவிகளை ஒப்புநோக்குக.

நலமை, வளமை என்னும் கிளவிகளில் இடையில் நிற்கும் அகரக்கேடு எப்படி நேர்கிறது என்று பார்த்தால் விளக்கம் கிடைக்கும்.

போலும் என்ற சொல் போன்ம் என்று மாறுவது பற்றித் தொல்காப்பியனர் குறித்துச் சொல்கிருர்.[1] இவ்வழக்கு அவர் காலத்திலேயே செய்யுளில் மட்டுமே நிலவியிருக்கிறது. போலும், மருளும் என்ற சொற்களில் இடையில் உள்ள உகரம் கெட்டு முறையே போன்ம், மருண்ம் என்ற சொற்கள் உருவாகின்றன. மொழியிடையில் இவ்வாறு உயிர்க்கேடு நிகழ்தல் தமிழுக்குப் புதிதல்ல. லகர ளகரங்களுக்கும், மகரத்துக்கும் இடையிலுள்ள உயிர் கெட்டு லகர ளகரங்கள் முறையே னகர ணகரங்களாக மாறுகின்றன.

போலும் > போல்ம் > போன்ம்
மருளும் > மருள்ம் > மருண்ம்

இவற்ளேடு பொலம், பொன் என்ற சொற்களும் ஒப்பு நோக்கத் தக்கன. மேற்கண்ட போன்ம், மருண்ம் என்ற கிளவி கட்குரிய மாற்றங்களைப் பெற்று அதற்கு மேலும் ஒரு மாற்றம் இங்குக் காணப்படுகிறது. அதாவது பொலம் என்ற கிளவி பொன் என்று மாறும்போது இறுதி மகரமும் கெடுகிறது.

பொலம் > பொல்ம் > பொள்ம் > பொன்

இடையில் நிற்கும் அகரமும் உகரமும் கெடுவதைக் கண்டோம். இனி இகரக்கேடு பற்றியும் காண்போம். வல், வலி, வலிமை, வன்மை என்ற சொற்களை ஒப்பிட்டு நோக்குக.

வல் வலி வலிமை வன்மை
வல் வன்ம்-ஐ வன்ம்-ஐ

வலிமை என்ற சொல்லிலுள்ள இகரங்கெட்ட பின் லகரமும் மகரமும் இணைந்து லகரம் னகரமாக மாறுகிறது.

வலிமை வல்-ம்-ஐ வன்மை
எளிமை எள்-ம்-ஐ எண்மை

இப்போது எண்ணிப் பாருங்கள் நன்மை, வன்மை என்ற சொற்களில் பண்புப்பெயர் விகுதி 'ஐ' தானேயன்றி 'மை' அல்ல என்பது விளங்கும்.

இனித் தீமை, செம்மை என்ற சொற்களைப் பார்ப்போம். தீம்— செம்— என்ற அடிச் சொற்களிலிருந்து தீமை, செம்மை என்பன உண்டாகின்றன. கீழ்க்காணும் சொற்களை ஒப்பு நோக்குக.

தீம்—ஐ தீமை
தீம்—கு தீங்கு
தீம்—பு தீம்பு (உலக வழக்கு)
செம்—ஐ செம்மை/செவ்வை
செம்—அல் செம்மல்
செம்—பு செம்பு

தீமை, செம்மை என்பவற்றில் தீம்— செம்— என்பவற்றை அடிச்சொல்லாகக் கொண்டால் தீமை, தீங்கு, தீம்பு, செம்மை, செம்மல், செம்பு முதலாய கிளவிகளைத் தெளிவாக விளக்கிக் காட்டலாம்.

இங்குக் கண்ட உண்மைகளையெல்லாம் ஒருங்கு வைத்து நன்கு எண்ணிப் பார்த்தால் பண்புப் பெயர் விகுதி 'மை' அல்ல 'ஐ' தான் என்பது தெள்ளிதின் விளங்கும்.

**மகரத்தொடு புணராத ஐகார ஈறு :** ஐகார ஈறு மகரத்தொடு புணர்ந்தபோது அதனை 'மை' என்று தவறாகப் பிரித்தனர். வெள்ளை பச்சை முதலிய கிளவிகளில் மகரமே இல்லாததும் காண்க. இக் கிளவிகளில் ஐகார ஈற்றை மட்டுமே பண்புப் பெயர் விகுதி என்று கொள்ள வேண்டும். இங்கு 'மை' விகுதியைக் காட்ட யாரும் முன்வரமாட்டார்கள்.

கல்—ஐ கலை
மால்—ஐ மாலை
வெள்—ஐ வெள்ளை
பச்—ஐ பச்சை

இவற்றையெல்லாம் ஒப்புநோக்குங்கால் பண்புப் பெயர் விகுதி 'மை' அல்ல 'ஐ' தான் என்ற கருத்து மேலும் வலுப் பெறுகிறது.

**அம், அல் முதலிய ஈறுகள் :** 'ஐ' ஈறு விகுதியாக நின்றது போலவே அம், அல் முதலிய ஈறுகளும் விகுதியாக நிற்கின்றன. வாட்டம், நோக்கம் முதலியவற்றில் அம் ஈறும், இன்னல், அல்லல் முதலியவற்றில் அல் ஈறும் நிற்கின்றன. இவையும் இங்குப் பண்புப் பெயர்களாகவே நிற்றல் நன்கு கவனிக் கற்பாலது.

**அம் ஈற்றின் மேல் ஐ சேர்தல் :** ஓர் அடிச் சொல்லுடன் ஒன்றுக்கு மேற்பட்ட விகுதிகளைச் சேர்த்துப் பல்வேறு சொற்கள் தமிழில் படைக்கப்படுகின்றன. விடு என்ற அடிச் சொல் பல்வேறு விகுதிகளையும் புணர்ச்சி முடிபுகளையும் ஏற்று விடை, விடுதல், விடுதலை, வீடு, விடுப்பு, விடுத்தல் முதலிய பல்வேறு பெயர்களைத் தருகிறது.

இவ்வாறே வள் என்ற அடிச்சொல் அம், ஐ என்ற விகுதிகளை ஏற்று வளம், வளமை ஆகிய சொற்களை வழங்கு கிறது. வள் என்ற அடிச்சொல் அம், ஐ ஆகிய இரண்டு விகுதிகளையும் ஒருங்கு ஏற்று வளமை என நிற்பது நன்கு நோக்கற்பாலது.

**'ஐ' ஈறு 'மை' ஈறாயிற்று :** நன்மை, தீமை, செம்மை, சிறுமை, பெருமை முதலாகிய சொற்களில் உள்ள 'மை' ஈற்றைக் கண்ட மக்கள் பெயரோடும், பெயரெச்சத்தோடும் தாராளமாக

'மை' ஈற்றைச் சேர்த்துப் புதுவகையான பண்புப் பெயர்களை உருவாக்கினர். இத்தகைய சூழ்நிலை கடைச்சங்க காலத்திலேயே தோன்றி விட்டதென்று கூறலாம். குடிமை, தாய்மை, காதன்மை போன்ற சொற்களில் பெயரின் பின் 'மை' ஈறு சேர்ந்திருப்பதையும் கல்லாமை, கள்ளாமை, பொய்யாமை, கிடந்தமை, நடந்தமை முதலிய சொற்களில் பெயரெச்சத்தின் பின் 'மை' ஈறு சேர்ந்திருப்பதையும் காண்க.

பொய்யாமை, செய்யாமை எனவும்; நாடாமை, நாணுமை, பேணுமை எனவும்; செல்லாமை, கொல்லாமை எனவும்; கிடந்தமை எனவும் வள்ளுவப் பெருந்தகை காலத்து இவ்வழக்கு நன்கு பயின்று வரத் தொடங்கிவிட்டது.[2]

'ஐ' ஈறும் 'மை' ஈறும்: இக்காலத்து 'மை' ஈற்றைத் தமிழ் மொழி ஒரு விகுதியாக ஏற்றுக்கொண்டு விட்டது. வினையடியாகப் பிறந்த எல்லாப் பெயரெச்சங்களோடும் 'மை' விகுதி சேர்க்கப்படுகிறது. எதிர் மறையில் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்களோடு 'மை' விகுதி சேர்வது பெருவழக்கு.

எ டு.

| | |
|---|---|
| கிடந்தமை<br>கிடக்கின்றமை | } கிடவாமை |
| கற்றமை<br>கற்கின்றமை | } கல்லாமை |
| பொய்த்தமை<br>பொய்க்கின்றமை | } பொய்யாமை |

செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சங்களில் செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தோடு 'மை' விகுதி சேர்வதில்லை என்பது இங்கு நன்கு கவனிக்கத்தக்கது.

முடிபு: இக்கட்டுரையை முடிக்கும்போது இங்கு 'மொழி வரலாறு', 'இலக்கிய வரலாறு' என்ற இரண்டைப் பற்றியும் ஒரு சில குறிப்புகளைக் கூறவேண்டியுள்ளது. இக்கால அன்பர்கள் பலர் 'தமிழ் வரலாறு' என்பது 'தமிழிலக்கிய வரலாறு'தான் என்று மயக்கங் கொள்கின்றனர்; அதாவது மொழி வரலாறும் இலக்கிய வரலாறும் ஒன்றெனக்கொண்டு இடர்ப்படுகின்றனர். இலக்கியங்களின் தோற்றம், வளர்ச்சி, தேய்வு இவற்றைப் பற்றிப் பேசுவது இலக்கிய வரலாறு. ஆனால் மொழி வரலாறு இதனினும் வேறுபட்டது. ஒரு மொழியில் காலப் போக்கில்

ஏற்படுகிற எழுத்து மாற்றம், ஒலி மாற்றம், சொல் மாற்றம், சொல்லாக்கம், சொல்லிழப்பு, சொற்களுக்கு உள்ள பொருள் மாற்றம், பொருளாக்கம், பொருளிழப்பு, புணர்ச்சி முடிபுகளின் மாற்றம், சொற்றொடரமைப்பில் ஏற்படுகிற மாற்றம் ஆகிய இவைபற்றியெல்லாம் பேசுவது மொழி வரலாறு. இந்தப் படிப்பியலை 'வரலாற்று மொழியியல்' (Historical Linguistics) என்று இக்கால மொழியியலார் கூறுவர்.

கிறு, கின்று என்னும் நிகழ்கால இடைநிலைகள் தொல்காப்பியனார் காலத்து வழக்கில் இல்லை. கடைச்சங்ககால இறுதியிலோ அதற்குப் பின்னரோ இந்த இடைநிலைகள் தோன்றி வளர்ந்திருக்கின்றன. நன்னூலார் காலத்தில் எகர ஒகரங்கட்குப் புள்ளியிடும் வழக்கம் (மெய்கட்குப் புள்ளியிடுவது போல) இருந்திருக்கிறது. 'பாட்டி' என்ற சொல் தொல்காப்பியனார் காலத்தில் பன்றிப் பிணவையும் நாய்ப் பிணவையும் குறித்து நின்றது. இப்போது அது உறவு முறைச் சொற்களில் ஒன்றாக நிற்கிறது. ஈதல், வாழ்தல் போன்ற சொற்கள் வள்ளுவப் பெருந்தகை காலத்து ஈக, வாழ்க என்ற பொருளில் நின்றிருக்கிறது.[3] இப்போது ஈதல், வாழ்தல் என்பன தொழிற்பெயராக நிற்கின்றன. சங்க காலத்தில் வினையோடன்றிப் பெயருடனும் தன்மை, முன்னிலை, படர்க்கை விகுதிகள் சேர்க்கப்பட்டுள்ளன. 'யாரையோ நீ மடக்கொடியோய்' என 'மடக்கொடி' என்ற பெயருடன் 'ஓய்' என்ற விகுதி சேர்ந்து வருதல் காண்கிறோம்.[4] அரசனேன், கள்வனேன், அடியனேன் முதலிய சொற்களில் தன்மை ஒருமை விகுதி 'ஏன்' என்பது சேர்ந்து நிற்கிறது. 'பெருமுதாளரேம்' என்ற சொல்லில் 'ஏம்' என்ற விகுதி நிற்கிறது.[5] இக்காலத்து இத்தகைய வழக்கு அருகிவிட்டது. 'யான் ஆசிரியன்' என்று கூறுவது இக்கால வழக்கு; 'யான் ஆசிரியனேன்' என்பது அக்கால வழக்கு. காலப்போக்கில் மொழி வளர்ச்சியில் நாம் காண்கின்ற மாற்றங்கட்குச் சில காட்டுகள் கொடுத்தோம். இத்தகைய மாற்றங்களைக் கண்டறிந்து திட்டவட்டமாக அறிவியல் நோக்கில் எடுத்து விளக்குவதே 'வரலாற்று மொழியியலின்' பணியாகும்.

இக்கட்டுரையில் பண்புப்பெயர் விகுதியைப் பற்றி வரலாற்றுப் போக்கில் அணுகி நமக்குத் தென்பட்ட உண்மைகளைக் கொடுத்திருக்கிறோம். இதைப்பற்றிய ஆய்வு இவ்வளவுதான் என்று இக்கட்டுரையாசிரியன் முற்றுப்புள்ளி வைக்கவில்லை. மேலும் மேலும் உண்மைகள் கிடைக்கும்போது மகிழ்ந்து வரவேற்போம்.

## குறிப்பு

1. 'செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் றாகும்'— தொல். மொழிமரபு 18
2. 'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று'— திருக்குறள் 297

'நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்'— திருக்குறள் 833

'செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை'— திருக்குறள் 1151

'நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார் வாய்ச் சொல்'— திருக்குறள் 959
3. 'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
தூதியம் இல்லை உயிர்க்கு'—திருக்குறள் 231
4. 'நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய்
யாரையோ நீ மடக்கொடியோய்?'—சிலம்பு—வழக்குரை காதை 48, 49
5. 'பெருமு தாளரேம் ஆகிய எமக்கே'— புறம் 243

# 4

# தமிழில் ஐகார ஔகாரங்கள்

தமிழ் நெடுங்கணக்கில் ஐ, ஔ என்ற இரண்டு எழுத்துக்களையும் உயிரெழுத்துக்களோடு சேர்த்து உயிர்கள் பன்னிரண்டு என்று நமக்கு முன் வாழ்ந்த தமிழ் மூதறிஞர்கள் கணக்கிட்டுச் சென்றுள்ளனர். ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய மாமுனிவரும் ஐகார ஔகாரங்களை உயிரெழுத்து வரிசையில் நிறுத்தி உயிர்கள் பன்னிரண்டு என்று கணக்கிடுகின்றார். இவை இரண்டும் நெட்டுயிர்கள் என்றும் ஏனைய நெடில்கள் போல இவையும் அளபெடுத்து நிற்குமென்றும், ஐகார ஔகாரங்கள் அளபெடுத்து நிற்கும்போது முறையே இகர உகரங்கள் அவற்றுக்கு இசை நிறைவாகுமென்றும் தொல்காப்பியனார் கூறிச் செல்கிறார். அவர் காலத்தில் ஐகார ஔகாரங்களின் தன்மை என்ன என்று ஆராயப் புகுந்தால் அது ஒரு தனிக் கட்டுரையாக விரியும். ஆகவே ஐகார ஔகாரங்களின் இப்போதைய நிலைமையை மட்டும் இக்கட்டுரையில் விளங்கக் காண்போம்.

ஐ, ஔ என்பன உயிரெழுத்துக்களா அல்லது உயிரும் மெய்யும் சேர்ந்த கூட்டுகளா என்பதைத் தெளிவுபடுத்த வேண்டும். அதாவது ஐ என்பது ஒரு தனிப்பட்ட நெட்டுயிரா? அல்லது அகரமும் யகரமும் (அய்) சேர்ந்த கூட்டா? ஔ என்பது ஒரு தனிப்பட்ட நெட்டுயிரா? அல்லது அகரமும் வகரமும் (அவ்) சேர்ந்த கூட்டா? ஐ என்ற எழுத்துக்குப் பதிலாக அய் என்று எல்லா இடங்களிலும் எழுதலாமா? ஔ என்ற எழுத்துக்குப் பதிலாக அவ் என்று எல்லா இடங்களிலும் எழுதலாமா? இந்த வினாக்களுக்கெல்லாம் முறையாக விடை காண்பதே இக் கட்டுரையின் நோக்கம். ஐ, ஔ என்பவற்றைப் பற்றி முடிவு செய்தால் அந்த முடிவு கை, கௌ, சை, சௌ எனவரும் உயிர்

மெய்களுக்கெல்லாம் பொருந்தும் என்பது சொல்லாமலே விளங்கும்.

தமிழில் ஐகாரம் பயன்படுகின்ற அளவுக்கு ஔகாரம் பயன் படுவதில்லை. ஐகாரம் மொழிமுதல், இடை, ஈறு ஆகிய எல்லா இடங்களிலும் நிற்கும். ஔகாரம் மொழிமுதலிலும், சிறு பான்மை மொழியிறுதியிலும் நிற்குமேயன்றி இடையில் நிற்ப தில்லை. எனவே ஐகாரத்தைப் பற்றித்தான் நாம் இங்கு மிகவும் ஆழமாகச் சிந்திக்க வேண்டியுள்ளது. ஔகாரத்தைப் பற்றிய குறிப்பினை இக் கட்டுரையின் பிற்பகுதியில் காண்போம்.

**மொழி முதல் நிலையில் வரும் ஐகாரம் :** ஐகாரம் மொழி முதலில் வரும்போது அதனை அகர யகரச் சேர்க்கையாகக் கொள்வதில் இடர்ப்பாடு எதுவும் இருப்பதாகத் தெரிய வில்லை. ஐயம், அயிர், அயிர்ப்பு என்ற சொற்கள் சொல் வகையாலும் பொருள் வகையாலும் தம்முள் தொடர்புடையன. இவற்றுள் ஐயம் என்ற சொல்லில் மட்டும் ஐகாரம் நெட்டுயிர் எனக் கொள்ளப்படுகிறது. அயிர், அயிர்ப்பு என்பனவற்றில் அய் என்பதே வேர்ச் சொல்லாகக் கொள்ளப்பட்டுள்ளது. அயிர், அயிர்ப்பு என்பனவற்றிலுள்ள அய் என்ற வேர்ச்சொல்லும், ஐயம் என்பதிலுள்ள வேர்ச்சொல்லும் ஒன்றே என்பது கீழ்க் காணும் சொற்களைக் கூர்ந்து நோக்கும்போது நன்கு புலனாகும்.

ஐயம், ஐயுறு, ஐயுறவு
அயிர், அயிர்ப்பு

இச்சொற்களை நன்கு பாகுபடுத்திப் பார்க்கும்போது அய் என்பதே வேர்ச்சொல் என்பதும் அதனையே ஐயம், ஐயுறவு, ஐயுறு ஆகிய சொற்களில் ஐகார உயிராகக் கொண்டுள்ளனர் என்பதும் தெளிவாகிறது.

அய்+அம்=அய்யம் (ஐயம்)
அய்+உறு=அய்யுறு (ஐயுறு)
அய்+உறவு=அய்யுறவு (ஐயுறவு)

கீழ்க்காணும் சொற்களின் அமைப்பினையும் ஒப்பு நோக்குக :

எண்+அம்=எண்ணம்
கள்+அம்=கள்ளம்
முன்+அம்=முன்னம்
கண்+உறு=கண்ணுறு
பேது+உறு=பேதுறு

குறிலும் ஒற்றும் சேர்ந்த ஒரு வேர்ச்சொல்லோடு உயிர் எழுத்தை முதலாகக் கொண்ட விகுதி சேரும்போது வேர்ச் சொல்லில் உள்ள ஒற்று இரட்டித்து நிற்குமென்பதும் உறு, உறவு ஆகிய சொற்கள் சில அடிச் சொற்களோடு சேர்ந்து சொற்களை உருவாக்குமென்பதும் தமிழியலார் எல்லோர்க்கும் தெரிந்த உண்மை. ஐயுறவு என்பதிற் காணும் உறவு என்ற சொல், செலவு வரவு என்பவற்ளேடு ஒப்பு நோக்கத்தக்கது.

இனி அயிர், அயிர்ப்பு ஆகிய சொற்களின் அமைப்பையும் பார்ப்போம். அய்—இர் = அயிர் எனவும், அய்—இர்—பு = அயிர்ப்பு எனவும் அமைந்துள்ளன. சில், சிலிர், சிலிர்ப்பு ஆகிய சொற்கள் இங்கு ஒப்பு நோக்குதற்குரியன. அய் என்ற வேர்ச்சொல்லில் இருந்து அய்யம் (ஐயம்), அய்யுறு (ஐயுறு), அய்யுறவு (ஐயுறவு) அயிர், அயிர்ப்பு ஆகிய சொற்கள் உருவாகியுள்ளன என்பது இப்போது தெளிவாக விளங்குகிறது. எனவே ஐயம், ஐயுறு, ஐயுறவு என்ற சொற்களில் உள்ள முதல் அசையினை ஐகார உயிர் என்று கொள்வதைவிட அகர யகரச் சேர்க்கை (அய்) என்று கொள்வது பொருந்தும். இதனுல் இப்போதைய நற்றமிழ் வழக்கின்படி எவ்வாற்ருனும் ஒலிமயக்கமோ பொருள் மயக்கமோ ஏற்படப்போவதில்லை. அன்றியும் ஐயம், ஐயுறு, ஐயுறவு, அயிர், அயிர்ப்பு ஆகிய சொற்கள் அய் என்ற வேர்ச்சொல்லில் இருந்து உருவாயின என்ற உண்மை தெற்றெனப் புலனுகிறது.

மொழியில் முதலசையில் நிற்கும் யகர ஒற்று சகரமாதலும் உண்டு. உயர்வு, உச்சி எனவும் பயப்பு, பச்சை எனவும் இயை, இசை எனவும் வரும் சொற்கள் இவ்வுண்மையை விளக்கும். இந்தக் கண்ணேட்டத்தில் ஐயன், அச்சன்; ஐயோ, அச்சோ முதலிய சொற்களை நோக்கினுல் அவை தம்முள் தொடர் புடையன என்பது புலனுகும். ஐயன், அச்சன் என்பன சொல் லாலும் பொருளாலும் தொடர்புடையன. அவ்வாறே அச்சோ ஐயோ என்பனவும் தொடர்புடையன. இங்கும் அய்யன் (ஐயன்) அய்யோ (ஐயோ) என எழுதுவதே விளக்கமுடையதாக அமைகிறது.

**இடைநிலையில் வரும் ஐகாரம் :** ஐகாரம் மொழியில் இடைப் பட்டு நிற்கும்போதும் அது அகர யகரச் சேர்க்கையாகவே உள்ளது. கீழ்க் காணும் சொற்கள் இந்த உண்மையை விளக்கு கின்றன.

**கைப்பு, கை**

**காய், கயப்பு, கசப்பு, கச்சல்**

கய் என்ற வேர்ச் சொல்லிலிருந்து கய்ப்பு, கய் (கய்த்தது, கய்க்கும்) கயப்பு, கசப்பு, கச்சல் என்பன உருவாகியுள்ளன. யகரம் சகரமாவது பற்றி முன்பே குறிப்பிட்டோம். காய், கய் என்பன ஊண், உண் என்பவற்றோடு ஒப்புநோக்கத் தக்கன.

நை
நசி, நயம், நசுங்கு, நசுக்கு, நைப்பு
(நய்) நச் : நய் + அம் = நயம்
நச் + இ = நசி
நச் + உங்கு = நசுங்கு
நச் + உக்கு = நசுக்கு
நய் + பு = நய்ப்பு

பை (பைந்தமிழ், பைங்கொடி)
பச்சை, பசுமை, பயப்பு, பாசடை,
பச்சூன், பசலை, பாசி

பையுள், பையாப்பு
பசி, பசலை (துன்பம்)

பைய
பய்ப்பய (பய்ப்பயப் பயந்த காமம்–கம்பர்)

பையன்
பயல், பசல், பைதல்

மை, மையல், மையாப்பு
மயல், மயங்கு, மயக்கு, மயக்கம்
மயர்வு, மால், மம்மர்

மைந்து, மைந்தா
மதம், மதவு, மதர், மதர்ப்பு

மை (நுண் துகளாதல்)
மாவு

மை (கருமை)
மா, மயிலை, மஞ்சு, மச்சம, மப்பு, மாமை

வை (கூர்மை)
வாய், வை, வசி

வை (ஏசுதல், திட்டுதல்)
வசை, வசவு

வை (இடம்), வையம்
வாய், வாய்ப்பு, வசம், வசதி

இங்குக் காட்டப்பெற்ற சொற்களில் முதலசையில் நிற்கும் ஐகாரங்களை அகர யகரச் சேர்க்கை (அய்) என்று கொள்வது தான் உண்மையான சொற்பொருள் தொடர்பை இனிது விளக்கு வதாக உள்ளது.

இதுவரை மொழிஇடையில் ஐகாரம் முதல் உயிராக வருவது பற்றிப் பார்த்தோம். இனி அது மொழியில் இடை நிலையில் இரண்டாம் உயிராக வருவது பற்றியும் பார்க்க வேண்டும். இளைஞன், இளையர் போன்ற சொற்களில் ஐகாரம் இரண்டாம் உயிராக நிற்கிறது. இவ்வாறு வரும் ஐகாரத்தின் தன்மை என்ன?

இளைஞர், இளையர், இளையோர், இளம்பருவம், இளமை
[இளய்+ந்+அர்=இளய்ஞர் (இளைஞர்)
இளய்+அர்=இளயர் (இளையர்)
இளய்+ம்+பருவம்=இளம்பருவம்
இளய்+ம்+ஐ=இளமை]

பழையம், பழையன், பழைய, பழங்காலம், பழமை
[பழய்+அம்=பழயம் (பழையம்)
பழய்+அன்=பழயன் (பழையன்)
பழய்+ம்+காலம்=பழங்காலம்
பழய்+ம்+ஐ=பழமை]

இளை—, பழை—என்பவற்றிலும் இவற்ருேடு சொற்பொருள் தொடர்புடைய ஏனைய சொற்களிலும் அகர யகரச் சேர்க்கை (அய்) நிற்பது தெளிவாகிறது.

**மொழியில் இறுதியில் வரும் ஐகாரம்:** தந்தை, தங்கை முதலிய ஐகார ஈற்றுப் பெயர்கள் விளி வேற்றுமையை ஏற்கும்போது முறையே தந்தாய், தங்காய் என ஆய் என்ற ஈற்றினைப் பெறுகின்றன. இங்கும் ஐகார ஈற்றினை அகர யகரச் சேர்க்கையாகக் (அய்) கொள்வது பொருந்தும்.

தந்தய் (தந்தை) தந்தாய்
தங்கய் (தங்கை) தங்காய்
அன்னய் (அன்னை) அன்ஞய்
கோதய் (கோதை) கோதாய்

பாவய் (பாவை) பாவாய்
அன்பினய் (அன்பினை) அன்பினாய்
பண்பினய் (பண்பினை) பண்பினாய்

செம்மல், வள்ளல் என்னும் பெயர்கள் செம்மால், வள்ளால் என விளியேற்று நிற்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாம்.

ஆய், ஆர், ஆல், ஆழ், ஆள் எனவும் வாய், வார், வால், வாழ், வாள் எனவும் நெட்டெழுத்தை அடுத்து ய், ர், ல், ழ், ள் ஆகிய ஒற்றுக்கள் நின்று சொற்கள் அமைவதைக் காண்கிறோம். இவ்வாறு இயலுவது நெட்டெழுத்துகட்குப் [ஐ, ஔ தவிர] பொதுவான ஓர் இயல். இந்த இயல் ஐகார ஔகாரங்களுக்குப் பொருந்தவில்லை. மேற்கண்ட ஐந்து ஒற்றுக்களில் ஒன்றுகூட மொழியீறாக ஐகார ஔகாரங்கட்குப் பின் வருவதில்லை. ஐ, ஔ இரண்டும் ஏனைய நெட்டுயிரினின்றும் மாறுபட்ட இயல் கொண்டது என்னும் உண்மை இப்போது தெளிவாகிறது. நாம் இதுவரை காட்டிய சான்றுகளால் ஐகாரத்தை அகர யகரக் கூட்டாகவும் [அய்] ஔகாரத்தை அகரவகரக் கூட்டாகவும் [அவ்] கொள்ளும்போது தமிழ் ஒலியமைப்பு முறையில் இன்னும் சில புதிய விளக்கங்கள் கிடைக்கின்றன. அய், அவ் என்பவற்றின் பின் ய், ர், ல், ழ், ள் என்பவற்றுள் எந்த ஒற்றும் நின்று சொற்கள் அமையத் தமிழொலியியல் இடந் தராது. மொழியிறுதியில் இரண்டு ஒற்றுகள் சேர்ந்து நிற்பது தமிழொலியியலுக்குப் பொருந்தாது. போன்ம், மருண்ம் என்பன சிறுபான்மைய என்பதும் செய்யுள் முடிபென்பதும் நினைவு கொள்ளத்தக்கன. அய் [ஐ], அவ் [ஔ] என்பன ஒலிமுறையான் மெய்யீறாக நிற்கின்றன. அதன்பின் ய், ர், ல், ழ், ள் என்பனவற்றுள் ஏதேனும் ஒன்று சேர்ந்தால் மொழியிறுதியில் ஈரொற்று நிற்கும். இந்த அமைப்புக்குத் தமிழொலியியலில் இடமில்லை. ஆகையால்தான் ஐகார ஔகாரங்களின் பின் ய், ர், ல், ழ், ள் என்பன சேரவுமில்லை. சேர்ந்து சொற்கள் தோன்றவுமில்லை. இதனாலும் ஐகாரம் அகர யகரச் சேர்க்கையே என்று கருத இடமேற்படுகிறது.

எழுதும் முறையும் படிக்கும் முறையும்: தமிழ் எழுத்து முறையில் நினைத்து நினைத்துப் பாராட்டத் தக்கது ஒன்று உண்டு. எழுதப்பட்ட எல்லா எழுத்துக்களுக்கும் ஒலி உண்டு. அதாவது walk என்ற ஆங்கிலச் சொல்லில் 1 என்ற எழுத்து ஒலிக்கப்பெறுமல் இருப்பது போன்ற நிலை தமிழ் எழுத்தியலில் இல்லை. எழுதுவது போலவே படிக்கவும் படிப்பது போலவே எழுதவும் இயலும் வகையில் தமிழ் எழுத்தியல் அமைந்துள்ளது. ஒலியை மிகுத்துப் படிப்பதை உணர்த்த,

அதாவது அளபெடையைக் காட்ட, அளபெடைக் குறி ஒன்றையும் நம் தமிழ் மூதறிஞர்கள் அமைத்துள்ளனர். இச் சிறப்புக்கே ஐகார ஔகார எழுத்து முறை ஊறு விளைவிப்பதாக உள்ளது. 'என்னையா சொன்னான்' என்ற தொடரைப் பாருங்கள். இந்தத் தொடர் இரண்டு வகையாகப் படிக்க இடந்தருகிறது. அதனால் பொருள் மாற்றமும் ஏற்படுகிறது. என்ன ஐயா சொன்னான் என்று ஒரு பொருளும், என்னை-யா சொன்னான் என்று ஒரு பொருளும் தோன்றுகிறது. இரண்டு வகையாகப் படிக்க இடமேற்பட்டதோடு இரண்டு பொருளும் ஏற்பட்டுள்ளது. இத்தகு மயக்க நிலையைத் தமிழ் எழுத்தியலில் (ஐ, ஔ தவிர) காண இயலவில்லை. ஐகாரத்தை அகர யகரச் சேர்க்கையாக எழுதுவதால் இந்த மயக்க நிலை தீர்கிறது. இரு வேறு பொருளுடைய தொடர்களும் இரு வேறு வகையான் எழுதப்படும்,

அவன் என்னய்யா சொன்னான்
(என்ன+ஐயா சொன்னான்)
அவன் என்னயா சொன்னான்
(என்னை+ஆ சொன்னான்)

எழுதுவதிலும், படிப்பதிலும் பொருள் காண்பதிலும் இப்போது மயக்கம் நீங்கித் தெளிவு பிறக்கிறது. என்னய்-ஆ என்பது என்னயா என்று அமையும். என்(ன)-அய்யா என்பது என்னய்யா என்று அமையும். இவ்வாறே 'பொன்னையா கேட்டார்' 'தங்கையைப் பார்த்தார்' என்பனவும் மயக்க நிலையில் உள்ளன. இங்கும் ஐகாரத்தை அகர யகரச் சேர்க்கை (அய்) யாகவே எழுதுவதாலும் எழுதியபடியே படிப்பதாலும் மயக்க நிலை நீங்குகிறது. இனித் தொடர்களே யன்றித் தனியே வரும் சொற்களிலும் இம் மயக்கநிலை ஏற்படுவதைக் காண்போம். 'செய்கையர்' என்ற சொல்லை இருவகையாகப் படிக்கலாம்; இருவகையாகப் படிப்பதால் இருவகையாகப் பொருளும் ஏற்படுகிறது. செய்கயர் (செய்கய்-அர்) என்று படிக்கும்போது செய்கையினை உடையவர் என்றும், செய்கய்யர் (செய்-கய்-அர்) என்று படிக்கும்போது செய்கின்ற கையினை உடையவர் என்றும் பொருள் படுதல் காண்க. 'கொள்கையர்' என்ற சொல்லையும் இவ்வாறே பொருத்திக் காணலாம். இங்கெல்லாம் ஐகாரத்தை ஒரு நெட்டுயிராகக் கொள்ளாமல் அகரக் குறிலும் யகர மெய்யும் சேர்ந்த சேர்க்கையாகக் கொண்டு அய் என்று எழுதுவதே விளக்கமுடையதாக இருக்கிறது.

**ஐகாரக் குறுக்கம் :** நமது இலக்கண மரபுப்படி நெட்டுயிர்கள் யாவும் இரண்டு மாத்திரை பெறும். இந்த விதிப்படி ஐகார ஔகாரங்களும் இரண்டு மாத்திரை பெறும். ஆனால் ஐகாரக் குறுக்கம் பற்றிப் பேசும்போது நன்னூலார் இந்த ஐகாரம் முதலிடை கடை ஆகிய மூவிடங்களிலும் குறுகும் என்று கூறு கிறார். அதாவது மொழியில் பயன்படும் போதெல்லாம் குறுகுமாம். மொழியில் பயன்படுத்தாமல் இந்த ஐகாரத்தைத் தனியே ஒலிக்கும்போது குறுகாதாம். மொழியில் பயன்படும் போது எழுத்துக்களின் மாத்திரை நிலை என்ன என்பதுதான் நமக்குத் தேவையான செய்தி. தனியே ஒலித்துப் பார்க்கும்போது எத்தனை மாத்திரை என்ற வினா நமக்குத் தேவையற்றது. ஐகாரம் தவிர ஏனைய எழுத்துக்களைத் தனியே ஒலிக்கும்போது அவற்றின் மாத்திரை நிலை என்ன என்று தனிப்படக் கூறாமையும் காண்க. ஒலியும், எழுத்தும் மொழியின் கூறுகளே என்பதை மறத்தலாகாது. ஐகாரம் மொழியில் முதல், இடை, கடை ஆகிய மூவிடங்களிலும் குறுகுமெனில் இதன் இயல்பான மாத்திரை நிலை ஏனைய நெடில்களைவிடக் குறைவானதுதான் என்பது தேற்றம். மொழியில் முத லிடை கடை ஆகிய மூவிடத்தும் ஐகாரத்தின் ஒலி ஆ, ஈ போன்றவற்றின் ஒலியைவிடக் குறைந்ததே என்ற உண்மை ஐகாரத்தை அகர யகரச் சேர்க்கை யாகக் கொள்ளலாம் என்ற கருத்துக்கு அரண் ஆகிறது. இந்த விளக்கம் ஔகாரத்துக்கும் பொருந்தும்.

இனி ஐகாரத்தை நெட்டுயிரென்று கொள்வதனால் யாப் பிலக்கணக் கொள்கையில் வரும் இடர்ப்பாட்டையும் காண் போம். 'ஆற்றுப் பெருக்கற்று......' என்று தொடங்கும் ஒரு வெண்பாவின் (நல்வழி) ஈற்றடி 'இல்லையெனமாட்டார் இசைந்து' என வருகிறது. இங்கு ஐகாரத்தை நெடிலாகக் கொண்டால் 'இல்லையென' என்பது தேமாங்கனி வாய்பாட்டுக்கு உரியதாகும். கனிச்சீர் வெண்பாவில் வருவதில்லை என்பது இங்கு நினைவு கூறத்தக்கது. அப்படியானால் இந்த வெண்பா தவறா? இல்லை. இப்பாடல் வெள்ளோசை குன்றாமல் வழுவின்றி நிற்கிறது. 'இல்லையென' என்ற சீர் கூவிளங்காய்ச் சீராகவே நிற்கிறது. ஐகாரத்தை அகர யகர சேர்க்கையாகக் கொண்டால் இந்தச் சீர் கூவிளங்காய்தான் என்பது தெளிவாகும்.

இல்லய்—என = இல்லயென

இல்—லயெ—ன

நேர்—நிரை—நேர்—>கூவிளங்காய்

இவ்வாறு தமிழ்ப் பாக்களில் இன்னும் மிகப்பல எடுத்துக் காட்டுகள் தரலாம். விரிவஞ்சி விடுத்து மேலே செல்வோம்.

இஃதன்றியும் பாடல்களில் ஐகாரத்தை முதலசையாகக் கொண்டு அமைந்துள்ள சீர்க்கு எதுகையாக வரும் சொற்களை நோக்கும் போதும் ஐகாரம் ஒரு தனி நெடிலல்ல என்பது விளங்கும்.

'கைவேல் களிற்ருெடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்'—என்ற குறளிலும்,

'ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு'—என்ற குறளிலும்,

உள்ள அடியெதுகைகளை ஒலித்துப் பார்க்கும்போது அங்குள்ள ஐகாரம் அகர யகரச் சேர்க்கையே என்பது தெளிவாகிறது. கய்வேல் என்றும், மெய்வேல் என்றும் கொள்ளும்போது அவை தம்முள் எதுகையாதல் தெற்றென விளங்கும். இவ்வாறே அய்யுணர்வு மெய்யுணர்வு எனக்கொண்டு உண்மை உணரலாம். ஐகாரம் நெட்டுயிராயின் அது 'மெய்' என்பதற்கு எதுகை யாகாது. கல் என்பதற்குக் கால் எதுகையல்ல. 'கட்டு' என்பதற்குக் 'காட்டு' எதுகையல்ல. எனவே இங்கும் ஐகாரம் தனி நெடிலன்று என்பதும் அகரக் குறிலும் யகர மெய்யும் சேர்ந்த சேர்க்கை (அய்) என்பதும் உறுதியாகிறது.

இதுவரை நாம் கண்ட ஏதுக்களும் எடுத்துக்காட்டுகளும் ஐகாரம் ஒரு நெட்டுயிரன்று என்றும், அது அகரக் குறிலும் யகர ஒற்றும் சேர்ந்த சேர்க்கையே (அய்) என்றும் உறுதிப்படுத்தக் காண்கிருேம். ஔகாரம் மொழிமுதலாகவும் (ஔவை) மொழிமுதல் அசையினதாகவும் (கௌ) வருமேயன்றி ஒரு மொழிக்கண் இரண்டாவது மூன்ருவது அசையில் வருவதாகத் தெரியவில்லை. இப்போதைய அறிவுக்கு எட்டியவரை ஔகாரத்தையும், அகர வகரச் சேர்க்கை (அவ்) யாகவே கொள்ளுதல் பொருந்தும். நவ்வி, பவ்வம், அவ்வியம் என்ற சொற்களின் ஒலியமைப்பை ஒப்பு நோக்கின் ஔவை என்பதை அவ்வை என்று கொள்வதும் பொருத்தமே என்பது விளங்கும். இனி ஐகார ஔகாரங்களைத் தனித்தனி நெடில்களாகக் கொள்ளாது குறிலும் ஒற்றுமாகக் கொள்வதால் ஏற்படும் விளைவுகளையும் காண்போம்.

சொல் நிலையாலும், பொருள் நிலையாலும் தொடர்புகொண்ட சொற்களை நன்கு விளக்க நமது கொள்கை துணையாகிறது.

காட்டாக மயல், மய்யல், மச்சம் ஆகிய சொற்கள் தம்முள் தொடர்புடையன என்பதை உணர 'மை' என்பதை 'மய்' என்று கொள்வது துணையாகிறது. இவ்வாறே காய், கய்ப்பு, கசப்பு, கச்சல், கைப்பு ஆகிய சொற்கள் தொடர்புடையன என்ற உண்மை கைப்பு என்பதைக் கய்ப்பு எனக் கொள்ளும்போது நன்கு தெளிவாகும். நை, நசி, நசல் எனவும்; பை, பசுமை, பச்சை எனவும்; பையுள், பையா, பசி எனவும்; வை, வசை, வசவு எனவும் காணப்படும் சொற்கூட்டங்களை நன்கு விளங்கிக் கொள்ளவும் விளக்கிக் காட்டவும், ஐகாரத்தை அகர யகரமாகக் (அய்) கொள்கின்ற கொள்கை உறுதுணையாகின்றது.

விளிவேற்றுமையை ஏற்கும்போது ஐகார ஈற்றுப் பெயர் களில் உள்ள ஐகார ஈறு 'ஆய்' என்று மாறுகிறது. கீழ்க்காணும் பெயர்களையும் அவை விளி ஏற்கும்போது பெறும் மாற்றங் களையும் ஒப்புநோக்குக :

வள்ளல்—வள்ளால்; செம்மல்—செம்மால்;
அண்ணல்—அண்ணல்

இப்பெயர்கள் விளி ஏற்கும்போது ஈற்றயல் நீண்டு அல் ஈறு 'ஆல்' என மாறுகிறது. ஈற்றயல் நீட்சியை மனத்துட் கொண்டு கீழ்க்காணும் ஐகார ஈற்றுப் பெயர்களையும் நோக்குக :

தந்தய் [தந்தை] தந்தாய்; தங்கய் [தங்கை] தங்காய்;
நங்கய் [நங்கை] நங்காய்; அன்னய் [அன்னை] அன்னாய்;
கிள்ளய் [கிள்ளை] கிள்ளாய்; பிள்ளய் [பிள்ளை] பிள்ளாய்;
கோதய் [கோதை] கோதாய்; தோகய் [தோகை] தோகாய்;
பாவய் [பாவை] பாவாய்.

ஐகாரம் ஆய் என்று மாறுகிறது எனக்கொள்வதைவிட இங்கு யகர ஈற்றுப் பெயர்கள் ஈற்றயல் நீண்டு ஆய் ஈறாக மாறின என்று கொள்வது மிகவும் பொருத்தமாகும். அதாவது விளியில் 'அல்' ஈறு 'ஆல்' ஈறாவது போல் 'அய்' ஈறு 'ஆய்' ஈறாயிற்று என்று கொள்வது பொருத்தமாம்.

'என்னய்யா கேட்டான்' என்ற தொடர் ஒரு வகை வினா என்பதும், 'என்னயா கேட்டான்' என்ற தொடர் இன்னொரு வகை வினா என்பதும் ஒலிப்பு முறையில் நன்கு தெளிவாகும். இந்த இரு வேறு ஒலிகளையும் 'என்னய்யா' 'என்னயா' என்ற எழுத்துருவில் தெளிவாகக் காணலாம். ஆனால் 'என்னையா' என்ற எழுத்து முறையில் இவ்வேறுபாடு காட்டப்பெறவில்லை.

ஐ, ஔ தவிர ஏனைய இடங்களில் தமிழ் மொழியில் இந்த மயக்கம் இல்லை. எழுதியவாறே படிப்பதும், படிப்பதற்கேற்ப எழுதுவதும் தமிழ் மொழியின் சிறப்புக்களுள் ஒன்று என முன்னமே கண்டோம். ஐகாரத்தையும் ஔகாரத்தையும் முறையே 'அய்' 'அவ்' எனக் கொள்வது நம் எழுத்து முறையின் சிறப்புக்குத் துணை நிற்கிறது.

ஐகாரத்தை அகர யகரச் சேர்க்கையாகக் (அய்) கொள்வதால் யாப்பில் சீர் பிரித்துத் தளை கூறுவோர்க்கு ஓசை நுண்மையைப் பற்றிய உண்மை விளங்குமாற்றையும் எதுகை பற்றிய கொள்கையில் தெளிவு பிறக்குமாற்றையும் முன்பே காட்டினேம்; ஐகாரத்தை 'அய்' எனக் கொள்வது ஒலி நெறிக்கும், அதனை உணர்த்துகின்ற யாப்பு நெறிக்கும் மிகவும் பொருத்தமான கொள்கையாம்.

இவையன்றியும் தமிழ் நெடுங்கணக்கில் முப்பத்தெட்டு எழுத்துக்களை விலக்கி எஞ்சிய எழுத்துக்களின் துணைகொண்டே செந்தமிழ் மொழியின் ஒலிக்கும் சிறப்புக்கும் ஊறு நேராமல் எழுதவும் படிக்கவும் இயலும். மொழி மரபுக்கும் சிறப்புக்கும் ஊறு நேரா வகையில் முப்பத்தெட்டு எழுத்துக்களைக் (உயிரில் 2, உயிர் மெய்யில் $18 \times 2 = 36$ ஆகமொத்தம் $2 + 36 = 38$) குறைக்க வாய்ப்பிருந்தால் உடனே அந்த வாய்ப்பை முற்போக்கு நெஞ்சங்கள் வரவேற்றுப் பாராட்டிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமல்லவா? இஃதன்றியும் இக் கொள்கை ஏற்கப்பட்டால் இனிவரும் இலக்கண நூல்களில் புணரியல் பற்றி எழுதும்போது ஐகார ஔகார ஈறு நீங்கிவிடும். இவை யகர வகர ஈற்றில் அடங்கிவிடும். ஐ, ஔ என்பவற்றை அய், அவ் என்று கொள்வதனால் மொழிக்கோ நமக்கோ அணுவளவும் இழப்பில்லை; மாறாக நன்மையும், தெளிவும், விளக்கமுமே ஏற்படுகிறதென்ற உண்மை இப்போது நன்கு புலனாகும்.

இப்போதைய மொழி நடையில் ஐகாரத்தை 'அய்' என்று கொள்வதில் இடர்ப்பாடு இல்லை. இதுவரை ஐகார ஔகாரங்களை நெடிலாகக் கொண்டு வெளிவந்த நூல்களைப் படிப்பதில் நம் வழித்தோன்றல்கட்கு இடர்ப்பாடு நேருமே என்றும் அளைஇ, விரைஇ, நிலைஇய ஆகிய அளபெடைச் சொற்களில் ஐகாரத்தை 'அய்' என்று கொள்வதால் ஏதாவது சிக்கல் நேருமோ என்றும் நம் உள்ளத்தில் ஒரு எண்ணம் தோன்றுவது முற்றும் முறையானதேயாம். இவற்றிற்கு விடை காண்பதும் இப்போதைய சூழலில் எளிதாகத்தான் உள்ளது. பழைய நூல்களில் காணப்படும் ஐ, ஔ என்பவற்றை முறையே அய், அவ்

எனப் படிக்கவேண்டும் என்று ஒரு விதி அமைத்துக்கொண்டால் பழைய நூல்களைப் படிப்பதில் உள்ள இடர்ப்பாடு தீரும். அளைஇ என்பதனை அளயி (அளய்+இ> அளயி) என எழுதிக் கொள்ளலாம். இவ்வாறே ஏனைய சொற்களும் விரயி, நிலயிய என எழுதப்படும். இவற்றோடு ஒப்புமை உடையனவாக இக்காலத்து விரவி, நிலவிய என்ற சொற்கள் ஆளப்படுவதனையும் நோக்குக. கோயில், கோவில் என்பவற்றில் உள்ள யகர, வகரத் திரிபுடன் விரயி, விரவி என்பவற்றிலுள்ள யகர வகரத் திரிபையும் ஒப்பு நோக்குக. தொல்காப்பியர் காலத்துக்கு முன் இருந்த தமிழ் நிலை நமக்குத் தெரிய வாய்ப்பிருந்தால், ஐ, ஔ என்பவற்றை அய், அவ் எனக்கொள்ளாது ஏன் நெட்டுயிர் களாகக் கொண்டனர் என்ற வினாவிற்கு ஓரளவு விடை காணலாம். இப்போதைய நிலையில் அந்த வினாவுக்கு மனம் ஒப்பும் வகையில் விடை கூற இயலவில்லை.

நடைமுறைக்குப் பயன்படாமல் வளர்ச்சியைத் தடுக்கும் பழமைகளை விலக்கவும், நடைமுறைக்குப் பயனுடையதாய் வளர்ச்சிக்குத் துணை புரியும் புதுமையை ஏற்கவும் நமக்கு அறிவுத் தெளிவும் மனத்துணிவும் வேண்டும். ஆண்டாண்டுக் காலமாகப் பழக்கத்தில் இருந்த ஒன்றை இழக்கவேண்டும் என்ற நினைப்பைக் கூடச் சிலரால் பொறுத்துக்கொள்ள முடியாது. உலகமே மின்னல் வேகத்தில் போய்க்கொண்டிருக்கும்போது நாம் தேவையற்ற மரபுகளைக் கைவிடத் தயங்கி மயங்கி நிற்பது நம் வளர்ச்சிக்கு நல்லதல்ல. 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல' என்ற அருமருந்தை உட்கொண்டு தயக்கத் தையும், மயக்கத்தையும் போக்கிக்கொள்ள வேண்டும். அன்றியும் நாம் இங்குக் காட்டியதெல்லாம் எழுத்து முறையில் ஒரு சிறு மாற்றம் வேண்டும் என்பதுதான்; ஒலிநிலையிலோ சொல் நிலையிலோ நாம் இங்குக் காட்டியுள்ள கோட்பாட்டினால் எவ்வித ஊறுபாடும் நேராது. உயர் தனிச் செம்மொழியாகிய தமிழ் கால ஓட்டத்தில் எ, ஒ, ம் போன்ற எழுத்துக்களில் மாற்றத் துக்கு இடந்தந்தே வளர்ந்து வந்துள்ளது என்ற உண்மையும் இங்கு நினைவுகூரத் தக்கது. ஐ, ஔ என்பவற்றை அய், அவ் என்று எழுதுவதற்கு இன்னும் நம் கைகள் பழகவில்லை. எப்படி யும் இந்தப் புதிய முறையில் படிக்கும்போது பொருள் வேற்றுமை ஏற்படுமளவுக்கு ஒலி வேறுபடுவதில்லை. ஆகவே இந்தப் புது முறையினால் செவிப் புலனுக்குத் தொல்லை இல்லை. 'ஐயையோ'. என்ற சொல் நமது கோட்பாட்டின்படி 'அய்யய்யோ' என்று எழுதப்படும். இதனைப் புதிய முறையில் எழுதும்போது கைக்குத் தயக்கம்—படிக்கும்போது கண்ணுக்கு தயக்கம்—

ஒரு வகையான திகைப்பு. இதற்கெல்லாம் காரணம் இந்த முறை புதியது—பழக்கமில்லாதது என்பதுதான்.

வய்யயாற்றுக்கு அருகில் உன்னுடைய அய்ந்து பய்யன்களயும் அழய்த்துக்கொண்டு பய்ய நடந்து சென்றுள் அந்த அவ்வய்ப்பாட்டி. இந்தத் தொடரை எழுதும்போதும் படிக்கும் போதும் பழக்கமின்மையால் தயக்கம் வருவது இயற்கை. இதை நாமே படிக்கும்போதும் மற்றொருவருக்குப் படித்துக் காட்டும் போதும் எவ்வித ஒலித்திரிபும் ஏற்படுவதில்லை - பொருள் மயக்கமும் ஏற்படுவதில்லை. இந்தப் புதுமுறை நமக்குப் பழகி விட்டால் இதில் உள்ள நன்மைகள் யாவும் இனிது விளங்கும்.

ஐ, ஔ என்பவற்றை அய், அவ் என எழுதலாம் என்ற எண்ணம் நமக்கு முன்பே பலர்க்குத் தோன்றியுள்ளது. அவர்கள் அந்த எண்ணத்தை வளர்த்து வெளிக் கொணர இயலாது விட்டுவிட்டனர் போலும். ஐ, ஔ என்பவற்றைத் தனித்தனி நெட்டுயிர்களாகக் கொள்ளாமல் அய், அவ் எனக் குறிலும், ஒற்றும் சேர்ந்த சேர்க்கையாகக் கொள்வது எல்லா வகையானும் பொருத்தமே என்பதும், இவ்வாறு கொள்வதால் அணுவளவும் நமக்கு இழப்பில்லை என்பதும் இக்கொள்கை தமிழியலுக்குச் சிறப்பளிப்பதே என்பதும், விருப்பு வெறுப்பின்றி நோக்குவார்க்குத் தெற்றென விளங்கும். பழமைப் பிடிப்பும், புதுமை மோகமும் இல்லாமல் நடைமுறைப் பயன் பாட்டினை நோக்கும் உள்ளங்கள் இக் கொள்கையை இனிது வரவேற்கும் என நம்புகிறோம்.




# 5

# வினைதரு பெயர்கள்

வினையிலிருந்து பிறக்கும் பெயர்கள் எல்லாவற்றையும் ஒரு சேரக்குறிக்கும் வகையில் 'வினை தரு பெயர்கள்' என்ற தொடரை நாம் இங்கு ஆக்கிக் கொண்டோம். நமது இலக்கணப் புலவர்கள் தொழிற் பெயர், வினையாலணையும்பெயர் என இரண்டு வகைகளை மட்டும் உணர்ந்து வேறு பிரித்துப் பெயரிட்டிருக்கிறார்கள். வினையிலிருந்து பிறக்கும் எல்லாப் பெயர்களையும் இந்த இரண்டு வகைகளில் அடக்க இயலாது. தொடரியல் அடிப்படையில் பார்த்தால் இப்பெயர்களை மேலும் வகைபடுத்தவேண்டும்.

கீழ்வரும் பெயர்களைப் பாருங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பூ | 7. | கொள்வது |
| 2. | கோள், ஊண் | 8. | கொண்டமை |
| 3. | கொள்கை, பாடல் | 9. | கொண்டவன் |
| 4. | கொளல், வரல் | 10. | கொள் |
| 5. | கொள்ளுகை | 11. | மூடி, கொள்ளி, மண்வெட்டி |
| 6. | கொள்ளுதல் | 12. | கோடல், தீனி, நிலையம் |

மேற்கண்ட பனிரண்டுமே வினைதரு பெயர்கள்தாம். ஆனால் இவை அனைத்தும் அமைப்பாலும் நடையாலும் தம்முள் வேறுபட்டவை. பூ என்ற சொல் எவ்விதமான மாற்றமுமின்றிப் பெயராக நிற்கிறது. அடி, மலர் என்பனவும் இவ்வகையில் அடங்கும். அதாவது வினையடியே எவ்வித மாற்றமுமின்றிப் பெயராக நிற்பது முதல்வகை. கோள் என்ற பெயர் கொள் என்ற வினையிலிருந்து பிறந்தது. வினைமுதலின் முதலுயிர் நீள்வதால் பெயர் உருவாகியுள்ளது. ஊண், பாடு, சூடு முதலிய பெயர்கள் இவ்வகையில் அடங்கும். கொள் என்ற வினைமுதலோடு கை

என்ற விகுதி சேர்ந்து கொள்கை என்ற பெயர் அமைகிறது. இவ்வாறே பாடு என்ற வினைமுதலோடு அல் என்ற விகுதி சேர்ந்து பாடல் என்ற பெயர் அமைகிறது. இன்னும் ஐ, பு, சி, தி முதலிய பல விகுதிகள் இப்படிப்பட்ட பெயர்களை உருவாக்கிக் கொடுக்கும். இந்த மூவகை வினைப் பெயர்கட்கும் ஒரு பொதுத் தன்மை உண்டு. இவை பெயரெச்சங்களை ஏற்கும். மற்றவை ஏற்காது. இவை மூன்றும் சொல்லமைப்பில் வேறுபாடுடையன. பூ, மலர் என்பனவற்றில் வினைமுதலே பெயராக நின்றன. ஊண், கோள் என்பனவற்றில் முதலுயிர் நீண்டன. ஆனல் பாடல், கொள்கை என்பனவற்றில் அல், கை முதலிய விகுதிகள் சேர்ந்தன. முன்னைய இரண்டிலும் விகுதிகள் இல்லை என்பது நோக்கத்தக்கது. அல், கை போன்ற விகுதிகளைப் பற்றிப் பின்னர் விரிவாகக் காண்போம்.

கொளல், வரல் என்பன பாடல் என்ற பெயர்போலத் தோன்றினும் நடையால் இவை வேறுபட்டன. நல்ல, பெரிய, கெட்ட, அந்த முதலாகிய பெயரடைகளைப் பாடல் என்ற பெயரின் முன் சேர்க்கலாம். கொளல், வரல் என்பவற்றின் முன் அப்படிச் சேர்க்க இயலாது. இவ்வகைப் பெயர்கள் இன் வேற்றுமையினையும் கு வேற்றுமையினையும் எடுக்கும். ஏனைய வேற்றுமை உருபுகளை ஏற்பது பெருவழக்கன்று. கொள்ளுகை, செல்லுகை முதலிய பெயர்கள் ஏழாம் வேற்றுமை இல் உருபோடு வருதல் பெருவழக்கு. இங்குக் காணும் கை விகுதி நடக்கை, படுக்கை என்பவற்றினின்றும் வேறுபட்டது. நடக்கை, படுக்கை என்பன பெயரடைகளை ஏற்கும். கொள்ளுகை, செல்லுகை என்பன ஏற்காது. கொள்ளுதல், செல்லுதல் என்பன எல்லா வேற்றுமைகளையும் ஏற்கும். இவற்றைத் 'தல்' ஈற்றுப் பெயர்கள் என்று கொள்ளவேண்டும்; இவை 'அல்' ஈற்றுப் பெயர்களல்ல. இங்குக் காணும் தகர ஒற்றைப் பிரித்தால் அதற்குப் பொருளில்லை என்பதாலும் தல் ஈற்றுப் பெயர்களும் அல் ஈற்றுப் பெயர்களும் வேறுபட்ட நடையின என்பதாலும் இப்பெயர்களைத் 'தல்' ஈற்றனவாகவே கொள்ளவேண்டும், அல் ஈற்றனவல்ல. கொள்வது என்ற பெயர் எதிர்கால இடைநிலையும் அது ஈறும் பெற்று நிற்கிறது. கொள்கின்றது கொண்டது என நிகழ்கால இடைநிலையோடும் இறந்தகால இடைநிலையோடும் வரும் பெயர்களையும் இதனுடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். கொண்டமை என்ற பெயரிலும் கால இடைநிலை உள்ளதெனினும் எதிர்கால இடைநிலையோடு மை ஈறு சேராமையால் கொண்டது, கொண்டமை என்பன வேறு பிரிக்கப் பட்டன. அன்றியும் வினைமுதல், கால இடைநிலை அதுவென்

விகுதி என்னும் இம் மூன்றும் சேர்ந்து அமைவனவாக உள்ளன அது ஈற்றுப் பெயர்கள். ஆனால் வினைமுதல், கால இடைநிலை, பெயரெச்ச விகுதி, மை ஈறு என்னும் இந் நான்கும் சேர்ந்து அமைவனவாக உள்ளன கொண்டமை முதலிய பெயர்கள்.[1] கொண்டவன் என்பது நம் இலக்கணப் புலவர்கள் குறிப்பிடும் வினையாலணையும் பெயர். கொண்டவள், கொண்டவர், கொண்டது, கொண்டவை முதலாய பெயர்களும் இவ்வகையில் அடங்கும். இப்பெயர்கள் ஐந்து பாலையும் மூன்று காலத்தையும் ஏற்பதோடு வேற்றுமை உருபுகளையும் ஏற்கும்.

கொள் என்பது கொள்கலம் என்ற வினைத்தொகையில் பெயராக நிற்கிறது. வேறு இடங்களில் இது பெயராக நிற்ப தில்லை. மூடி, கொள்ளி, மண்வெட்டி முதலியன இகர விகுதி பெற்றுப் பெயராக நிற்கின்றன. இந்த விகுதி எப்போதும் வினையோடு தொடர்புடைய பொருளைக் குறிக்கவே பயன்படு கிறது. தொழிலைக் குறிப்பதாக வருவதில்லை. அந்த மூடி, அந்தக் கொள்ளி என்ற தொடர்களில் மூடி, கொள்ளி என்பன பெயரடைகளை ஏற்றுப் பெயர்த்தன்மை மட்டுமே கொண்ட தாகவும் சேர்ந்தாரைக் கொல்லி, பயங்கொள்ளி, பயமிலி என்பன வேற்றுமை ஏற்கும் பெயர்களைக் கொண்டு பெயர் களோடு வேற்றுமை உறவில் நின்று பெயர்த் தன்மையோடு வினைத்தன்மை கொண்டதாகவும் இருப்பதால் இவற்றை ஏனைய வற்றினின்றும் வேறுபடுத்தினேம்.

கோடல், தீனி, நிலையம் முதலிய பெயர்கள் மேற்கண்ட பெயராக்க நெறிகளில் ஒன்றுக்கு மேற்பட்ட நெறிகளை ஏற்றுள்ளன. அப்படிப்பட்ட பெயர்களைப் பொதுவாக இந்த இறுதி வகையில் அமைத்துள்ளோம்.

இனி இந்தப் பன்னிரு வகைப் பெயர்களைப் பற்றியும் விரிவாக ஆராய்ந்து பார்ப்போம். முதல் வகைக்கு உரிய பெயர்களை, அதாவது பூ, மலர், அடி முதலாய பெயர்களைப் 'பூ வகைப் பெயர்கள்' என்றும், இரண்டாம் வகைக்கு உரிய பெயர்களை, அதாவது கோள், ஊண், பாடு, சூடு என வரும் பெயர்களைக் 'கோள் வகைப் பெயர்கள்' என்றும், மூன்றும் வகைக்கு உரிய பெயர்களைக் 'கொள்கை வகைப் பெயர்கள்' என்றும் இவ்வாறே பிறவற்றையும் குறிப்போம்.

1. பூ வகைப் பெயர்கள்: வினை முதல் மட்டுமே நின்று பெயர்களை அமைப்பதும் உண்டென்று முன்பே கண்டோம். பூ, மலர், அடி, இடி, பிடி, உதை முதலாய பெயர்கள் பூ வகைப் பெயர்கள். இப் பெயர்கட்கு முன் அந்த, இந்த முதலாய

சுட்டுப் பெயரடைகளும், நல்ல, கெட்ட முதலாய குறிப்புப் பெயரெச்சங்களும் கொடுத்த, வாங்கிய முதலாய பெயரெச்சங் களும் ஒரு, இரு முதலாய எண்ணுப் பெயரடைகளும் முதலாவது, இரண்டாவது முதலாய வரிசைப் பெயரடைகளும் வரலாம். பூ வகைப் பெயர்கள் ஏனைய பெயர்களைப் போலவே வேற்றுமை உருபுகளையும் ஏற்கும். வினைமுதலே பெயராக நிற்றல், பெயரடைகளை ஏற்றல், வேற்றுமை ஏற்றல் இம் மூன்றும் பூ வகைப் பெயர்களின் பண்புகள்.

எல்லா வினை முதல்களும் இப்படிப்பட்ட பெயர்களை அமைப்பதில்லை. இன்னின்ன வினை முதல்கள்தான் இப்படிப் பட்ட பெயர்களைத் தரும் என்று கண்டுபிடிக்கவும் ஒன்றும் வழியில்லை. இலக்கண இலக்கியங்கள் வாயிலாகவும் சிறந்த தமிழ்ப் புலமை உடையோர் வாயிலாகவும் பூ வகைப் பெயர்களை அறிந்து கொள்ளலாம். வேறு வழி இப்போதைக்குத் தென்பட வில்லை.

பூத்தது, பூக்கும், பூக்கிறது என வரும் வினையின் முதல் நிலை பூ என்பது. இதுவே பெயராகி அந்தப் பூ, நல்ல பூ, நீ கொடுத்த பூ, ஒரு பூ, இரண்டாவது பூ என இவ்வாறு பெய ரடைகளை ஏற்றது. தாமரைப் பூ எனப் பெயர்த் தொகையையும் அமைத்தது. பூவை, பூவால், பூவுக்கு, பூவின், பூவினது, பூவில் எனவும் பூவே எனவும் வேற்றுமைகளை ஏற்றது. ஆனால் நடந்தது, நடக்கும், நடக்கிறது என வரும் வினையின் முதல்நிலை இவ்வாறு பெயரை அமைப்பதில்லை. பூ வகைப் பெயர்களைத் தரும் வினைகள் சிறுபான்மையின என்பது இங்குக் கவனிக்கத் தக்கது.

**2. கோள் வகைப் பெயர்கள் :** வினைமுதலின் முதல் உயிர் நீள்வதால் கோள்வகைப் பெயர்கள் அமைகின்றன என்று முன்பே கண்டோம்.

| வினை | பெயர் |
|---|---|
| சுடு | சூடு |
| படு | பாடு |
| உண் | ஊண் |
| கொள் | கோள் |
| இறு | ஈறு |

எல்லா வினைகளும் கோள் வகைப் பெயர்களைத் தருவதில்லை. அகர, ஆகார ஈற்று வினைகள் பூ வகைப் பெயர்களையோ கோள்

வகைப் பெயர்களையோ அமைப்பதில்லை. படு, கொள் என்பன துணைவினைகளாக வரும்போது பாடு, கோள் என மாறிப் பெயர்களை உருவாக்குகின்றன என்பது இங்கே குறிப்பிடத் தக்கது.

| வினை | பெயர் |
|---|---|
| கட்டுப்படு | கட்டுப்பாடு |
| வழிபடு | வழிபாடு |
| இடிபடு | இடிபாடு |
| பண்படு | பண்பாடு |
| மாறுகொள் | மாறுகோள் |
| பொருள்கொள் | பொருள்கோள் |

சாப்பாடு, கூப்பாடு என்ற இரண்டு பெயர்களும் முறையே சாப்பிடு, கூப்பிடு என்ற வினையிலிருந்து பிறந்துள்ளன. இப் பெயர்களில் உயிர் நீண்டது மட்டுமின்றி உயிர்த் தன்மையும் மாறி யிருக்கக் காண்கிறோம். *சாப்பீடு, *கூப்பீடு என்று பெயர்கள் அமைவதற்குப் பதிலாகச் சாப்பாடு, கூப்பாடு என்று அமைந்துள்ளன. இவை பற்றி இன்னும் தெளிவான செய்திகள் கிடைக்க வேண்டும். அதுவரை இந்த இரண்டு பெயர்களையும் கோள் வகைப் பெயர்களுடனேயே சேர்த்துக் கொள்ளலாம். கோள் வகைப் பெயர்களில் ஒரு உட்பிரிவை உண்டாக்கி அப் பிரிவில் இவற்றை அமைக்கலாம்.

**3.** **கொள்கை வகைப் பெயர்கள்:** இப் பெயர்கள் அம், அல், ஐ, கை, சல், சி, தல், தி, து, பு, மை, வி, வு முதலாய விகுதிகளை ஏற்று நிற்கும். ஒரே வினைமுதல் வெவ்வேறு விகுதிகளை ஏற்பதும் உண்டு. காட்டாக உயர் என்ற வினைமுதல் அம், சி, வு முதலிய விகுதிகளை ஏற்று உயரம், உயர்ச்சி, உயர்வு என வெவ்வேறு பெயர்களை அமைத்தல் காண்க. மேற்கண்ட பெயராக்க விகுதிகள் வினைமுதலோடு சேர்ந்த பின் காலப் போக்கில் பொருள் மாற்றம் ஏற்படுவதும் உண்டு. அமைதி, அமைப்பு என்பன அமை என்ற வினைமுதலடியாகப் பிறந்தனவே எனினும் இரு சொற்களும் வேறு வேறு பொருளில் நிற்றல் காண்க. இன்னின்ன வினைமுதல்கள் இன்னின்ன விகுதிகளை ஏற்கும் என்று கண்டுபிடிக்க இங்கும் வழியில்லை. இவற்றை நூல் வழியாகவும் வல்லார் வழியாகவும் கற்றுக் கொள்வதே வழியாம்.

| வினைமுதல் | பெயர் |
|---|---|
| உயர் | உயரம் |
| செய் | செயல் |
| வில் | விலை |
| படு | படுக்கை |
| மேய் | மேய்ச்சல் |
| புகழ் | புகழ்ச்சி |
| ஆறு | ஆறுதல் |
| மற | மறதி |
| குரு | குருத்து |
| படி | படிப்பு |
| பொறு | பொறுமை |
| கல் | கல்வி |
| உயர் | உயர்வு |

அளவு, அளபு, அளப்பு எனவும் உயர்வு, உயர்ச்சி எனவும் வரும் பெயர்களை நோக்கும் போது இவற்றில் உள்ள சந்திவிதிச் சிக்கல்கள் புலனாகும். பெயராக்க விகுதிகள் வினையடியோடு சேரும்போது ஏற்படும் புணர்ச்சி மாற்றங்களை இக் கட்டுரையில் ஆராயத் தொடங்கினால் அது மற்றொன்று விரித்தலாகும். சொற் பிறப்பியல் ஆய்வும் புணரியல் ஆய்வும் கொள்கை வகைப் பெயர்களை மேலும் ஆராய்ந்து விளக்கும்.

இதுவரை நாம் கண்ட பூ வகை, கோள் வகை, கொள்கை வகைப் பெயர்கள் பெயரடைகளை ஏற்கும்: வேற்றுமை உருபுகளை ஏற்கும்: பெயர்த் தொகைகளையும் அமைக்கும்.

4. **கொளல் வகைப் பெயர்கள்:** கால விகுதிகளையும் பாலிட விகுதிகளையும் ஏற்கவல்ல எல்லா வினையடிகளும் கொளல் வகைப் பெயர்களை அமைக்கும். இப் பெயர்கள் பெயரடைகளை ஏற்ப தில்லை. வேற்றுமை உருபுகளில் நான்கன் உருபை ஏற்பது பெரு வழக்கு. கொளல் வகைப் பெயர்கள் சில ககரச் சாரியை பெற்று வரும். காட்டாகக் கொடுக்கல், நடக்கல் என்பன ககரப் பேறு பெற்றமை காண்க. கொளல் வகைப் பெயர்களில் உள்ள லகரம் நீங்கினால் செயவென் எச்சம் கிடைக்கும். கொடுக்கல், நடக்கல் என்பவற்றில் லகரம் நீங்கினால் கொடுக்க நடக்க என்று, செயவென் எச்சம் அமையும். ஓடல், தேடல் என்பவற்றில் லகரம் நீங்கினால் ஓட, தேட என்று செயவென் எச்சம் அமையும். கொள், செல், சொல் முதலாய வினைகளோடு அல் விகுதி சேரும்போது ளகர லகர ஒற்றுக்கள் இரட்டுதல் பெரு வழக்கு:[2] இரட்டாமையும் உண்டு. கேள், கல், பார், நட என்னும் வாய்பாட்டு வினைகளும் ஆ, போ, சா, நோ, வே

முதலிய வினைகளும் ககரச் சாரியை பெறும் என்பது இங்குக் கவனிக்கத்தக்கது. கொள்ளுதல் வகைப் பெயர்கள் எல்லா வேற்றுமைகளையும் ஏற்கும்: கொளல் வகைப் பெயர்கள் அவ்வாறு ஏற்பதில்லை. இக் காரணம் பற்றியே இவை வேறுபடுத்தப் பட்டன.

5. **கொள்ளுகை வகைப் பெயர்கள்:** கொள்கை வகைப் பெயர்கள் பெயரடைகளை ஏற்கும்; கொள்ளுகை வகைப் பெயர்கள் பெயரடைகளை ஏற்காது. அன்றியும் முன்னவை எல்லா வேற்றுமைகளையும் ஏற்கும்; பின்னவை ஏழன் உருபை மட்டுமே ஏற்கும். காலமும் பாலிடமும் ஏற்கவல்ல எல்லா வினையடிகளும் கொள்ளுகை வகைப் பெயர்களை உருவாக்க வல்லன: ஆனால் எல்லா வினையடிகளும் கொள்கை வகைப் பெயர்களை உருவாக்குவதில்லை. பாடுகையில், ஓடுகையில், வருகையில், செல்லுகையில் என்பவற்றில் கொள்ளுகை வகைப் பெயர்கள் ஏழன் உருபோடு நிற்றல் காண்க. இப் பெயர்கள் ஏழன் உருபோடு நிற்றலே பெரு வழக்கு. வா என்ற வினையடியாகப் பிறந்த கொள்கை வகைப் பெயரும் கொள்ளுகை வகைப் பெயரும் உருவில் ஒன்று யிருத்தல் காண்க.[3] கொள்கை வகைப் பெயரின் பாற்படும் வருகையும், கொள்ளுகை வகைப் பெயரின் பாற்படும் வருகையும் உருவால் ஒன்றுபட்டனவாயினும் நடையால் வேறுபட்டன என்பதும் அவை வேறு வேறு பெயர்களே என்பதும் நன்கு மனதிற் கொள்ளத்தக்க இன்றி யமையாத செய்தி. உங்கள் வருகை நன்று என்ற தொடரில் வருகை என்பது கொள்கை வகைப் பெயர். நீங்கள் வருகையில் நான் பார்த்தேன் என்ற தொடரில் வருகை என்பது கொள்ளுகை வகைப் பெயர்.

உண்ணுகையில், உண்கையில் என்றும் செல்கையில், செல்லுகையில் என்றும் சில இடத்து உகரம் பெற்றும் பெறுதும் வருதல் இங்குக் கவனிக்கத்தக்கது. உகரம் பெற்று வருதலே இன்று பெரும்பான்மை வழக்கெனலாம்.

6. **கொள்ளுதல் வகைப் பெயர்கள் :** வினையடியும் 'தல்' விகுதியும் சேர்ந்து கொள்ளுதல் வகைப் பெயர்களை உருவாக்கு கின்றன. இப்பெயர்கள் எல்லா வேற்றுமைகளையும் ஏற்கும். ஆனால் இவை பெயரடைகளை ஏற்பதில்லை. கொள்ளுதல் வகைப் பெயர்களும் கொளல் வகைப் பெயர்களும் வேறுபட்ட நடையின என்று முன்பே கண்டோம்.

வாழுதல், வாழ்தல் எனவும் காணுதல், காண்டல் எனவும் சில இடத்து உகரம் பெற்றும் வேறு சில இடத்துப் பெறுதும்

வருதல் கவனிக்கத் தக்கது. இங்கும் உகரம் பெற்று வருதலே இக்கால வழக்கில் பெரும்பான்மை எனலாம்.

**7. கொள்வது வகைப் பெயர்கள்:** கொள்வது அல்லது கொள்ளுவது வகைப் பெயர்களில் வினையடியும் பெயராக்க விகுதியும் மட்டும் இல்லை; கால இடைநிலையும் உள்ளது. மேற் கண்ட பெயர்கள் எதிலுமே கால இடைநிலை இல்லை. கொள்ளுவது வகைப் பெயர்களில் கொண்டது, கொள்கின்றது போன்ற இறந்த கால நிகழ்காலப் பெயர்களும் அடங்கும். இங்கும் கொள்ளுவது, கொள்வது எனவும் செல்லுவது, செல்வது எனவும் சில இடத்து உகரம் பெற்றும் வேறு சில இடத்துப் பெறுதும் இப்பெயர்கள் அமைதல் கவனிக்கத்தக்கது. காலமும் பாலிடமும் ஏற்கும் எல்லா வினைகளும் இவ்வகைக்குரிய பெயர்களை அமைக்க வல்லன. இவை இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலங்கட்கும் வரும். நிகழ்கால இடைநிலையோடு அமையும் பெயர்கள் எழுத்து வழக்கில் பெரு வழக்கன்று: பேச்சு வழக்கில் அத்தகைய பெயர்கள் பெரு வழக்கின.[4]

வினையாலணையும் பெயர்களில் வரும் அது ஈற்றுப் பெயரும் இதுவும் வேறு வேறும். இங்குக் காணும் கொள்ளுவது வகைப் பெயர்கள் பன்மை ஏற்பதில்லை. வினையாலணையும் பெயர்களில் வரும் அது ஈற்றுப் பெயர் பன்மை ஏற்கும்.

அவர் வந்தது உண்மை
இங்கு வந்தது கிளிதான்
அங்கு வந்தவை கிளிகள்தாம்

முதல் தொடரில் உள்ள வந்ததென்னும் பெயர் கொள்ளுவது வகைப் பெயரில் அடங்கும். இரண்டாவது தொடரிலுள்ள வந்ததென்னும் பெயரும் மூன்ருவது தொடரிலுள்ள வந்தவை என்னும் பெயரும் வினையாலணையும் பெயர்கள். இவை பின்னர் விளக்கப் பெறும்.

**8. கொண்டமை வகைப் பெயர்கள்:** வினையடி, காலக்கிளவி, பெயரெச்ச விகுதி, மை ஈறு இவையாவும் சேர்ந்து கொண்டமை வகைப் பெயர்களை உருவாக்குகின்றன. கொண்டமை, கொள்கின்றமை என இறப்பிலும் நிகழ்விலும் கொண்டமை வகைப் பெயர்கள் அமையும்; ஆனல் எதிர்வில் அமைவதில்லை. மேற்கூறிய கொள்ளுவது வகைப் பெயர்கள் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலத்திலும் அமையும். கொண்டமை வகைப் பெயர்கள் வேற்றுமைகளை ஏற்கும்; பெயரடைகளை ஏற்காது.

**9. கொண்டவன் வகைப் பெயர்கள் :** வினையடியும் கால இடைநிலையும் அவன், அவள், அவர், அவர்கள், அது, அவை முதலாய கிளவிகளும் கொண்டவன் வகைப் பெயர்களை அமைக்கின்றன. கொள்பவன், கொள்பவை என்பவற்றில் பால் விகுதிகளை அவன், அவை என்றே கொள்ளவேண்டியுள்ளது. இக் காரணம் பற்றியே இங்குப் பால் விகுதிகளை அன், அள், அர் என்றிவ்வாறு கொள்ளாமல் அவன், அவள், அவர் என்று கொண்டோம். அன்றியும் கொண்ட + அன் என்பது கொண்டவன் என்றாயிற்று எனின் கொள்ளும் + அன் என்பது கொள்பவன் என்றாயிற்று எனல் வேண்டும். உண்மை அது வன்று. கொள்+ப்+அவன் என்பதே கொள்பவன் என்றாயிற்று. இங்கு எதிர்காலக் கிளவியை வகரம் எனக் கொண்டாலும் குறையில்லை. இரண்டு வகர அகரங்கள் தமிழில் சேர்ந்து வருவதில்லையாதலின் முன் வகரம் பகரமாகிக் *கொள்வவன் என்பது கொள்பவன் என்றாயிற்று என விளக்கம் கூறலாம்.

கொண்டவன் வகைப் பெயர்களில் இன்றியமையாத களங்கள் மூன்று என்பதும் அக் களங்களில் முறையே வினையடியும், காலக் கிளவியும், பால்காட்டும் கிளவியும் நிற்கும் என்பதும் இங்குப் பால்காட்டும் கிளவிகள் அவன், அவள், அவர், அவர்கள், அது, அவை முதலியனவே என்பதும் நன்கு நினைவிற் கொள்ளத்தக்கன.

கொண்டவை, கொள்கின்றவை, கொள்பவை என்பவற்றுக்குப் பதிலாகக் கொண்டன, கொள்கின்றன, கொள்வன எனவும் வரும். இவற்றில் வினையடியும் கால இடைநிலையும் அவை என்பதற்குப் பதிலாக 'அன' என்னும் கிளவியும் அமைந்துள்ளமை காண்க.

கொண்டவன் வகைப் பெயர்கள் வேற்றுமைகளை ஏற்கும்; ஆனல் பெயரடைகளை ஏற்காது. மேற்கண்ட பல்வகைப் பெயர்களிலும் பூவகை, கோள்வகை, கொள்கை வகைப் பெயர்கள் மட்டுமே பெயரடைகளை ஏற்கும். கொள்ளுவது வகைக்கும் கொண்டமை வகைக்கும் கொண்டவன் வகைக்கும், உரிய பெயர்களில் காலக் கிளவிகள் நிற்குமிடத்தில் எதிர்மறைக் கிளவியும் நின்று பெயர்களை உருவாக்கும். இப்படிப்பட்ட எதிர் மறைப் பெயர்கள் காலக் கிளவிகள் இல்லாப் பெயர்களில் அமைவதில்லை. கொள்ளாதது, கொள்ளாமை, கொள்ளாதவன் என வருதல் காண்க. கொள்ளாமை என அமைவதே பெரும்பான்மை; கொள்ளாதமை எனவும் சிறுபான்மை வரும். அது, அவன் என்னும் கிளவிகளுடன் 'ஆத்' என்ற கிளவியும்

மை ஈற்றுடன் 'ஆத்' என்ற கிளவியேயன்றி ஆவும் எதிர்மறைக் கிளவிகளாக வந்தன.

கொண்டமை, கொள்ளாமை, கொள்ளாதமை என்பவற்றில் நான்கு களங்களும் கொள்ளுவது, கொள்ளாதது, கொண்டவன், கொள்ளாதவன் என்பவற்றில் மூன்று களங்களும் உள்ளன என்பது கவனிக்கத்தக்கது.[5] வினையடி, காலக்கிளவி அல்லது எதிர்மறைக் கிளவி, பெயரெச்ச விகுதி, மை ஈறு என்றும் இவை சேர்ந்து முன்னவற்றை அமைக்கின்றன. வினையடி, காலக்கிளவி அல்லது எதிர்மறைக் கிளவி, அது முதலாய கிளவிகள் ஆகிய இவை சேர்ந்து கொள்ளுவது முதலாய பெயர்களை அமைக்கின்றன. கொளல்வகை முதல் கொண்டவன் வகை ஈறாக உள்ள எல்லாப் பெயர்களும் வினைத் தன்மையினையும் பெயர்த் தன்மையினையும் கொண்டு இயங்குகின்றன. பூவகை முதல் கொள்கை வகை ஈறாய மூவகைப் பெயர்களும் பெயர்த் தன்மை மட்டுமே கொண்டு இயங்குகின்றன. அவர் ஊருக்குப் போதற்கு நான் பணம் கொடுத்தேன் என்ற தொடரிலும் அவருடைய வருகையால் நான் மகிழ்ந்தேன் என்ற தொடரிலும் போதல், வருகை என்ற பெயர்கள் கொண்டுள்ள நடையை நோக்கின் இந்த உண்மை விளங்கும்.

**10. கொள்வகைப் பெயர்கள் :** கொள்வகைப் பெயர்கள் பூ வகைப் பெயரினின்றும் மாறுபட்டன. கொள் வகைப் பெயர்கள் வினைத்தொகையை அமைப்பன. பூவகைப் பெயர்கள் ஏனைய தொகைகளை அமைக்கும். ஆனால் அவை வினைத் தொகைகளை அமைப்பன அல்ல. கேள், கல், பார், நட முதலிய வாய்பாட்டுக்குரிய வினைகள் பெரும்பாலும் கொள்வகைப் பெயர்களை அமைப்பதில்லை.[6] அன்றியும் கொள்வகைப் பெயர்கள் வினைத் தன்மையும் பெயர்த் தன்மையும் உடையன. பூவகைப் பெயர்கள் பெயர்த் தன்மை மட்டுமே உடையன. யானறி நல்வினை என்ற தொடரிலும், பாம்புபோகுநெறி, புலிவாழ் காடு, புலிகொல் யானை முதலிய தொடர்களிலும் அறி, போகு, வாழ், கொல் என்பன எழுவாய் ஏற்றல் முதலிய வினைத் தன்மையோடு தொகைகளை அமைத்துள்ளமை காண்க.

மலர்கண் என்ற தொகையிலுள்ள மலர் கொள்வகைப் பெயர்; மலர்க்கண் என்ற தொகையிலுள்ள மலர் பூவகைப் பெயர். மலர்கண் என்பது வினைத்தொகை. மலர்க்கண் (மலர் போன்ற கண்) என்பது உவமத் தொகை. இவ்வாறே அலைகடல், அலைக்கடல் என்பவற்றையும் சொல்பொருள்,

சொற்பொருள் என்பவற்றையும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

கொள்வகைப் பெயர்கள் பெயரடைகளையோ, வேற்றுமைகளையோ ஏற்பதில்லை என்பதும் இவை வினைத்தொகையை அமைப்பதற்கு மட்டுமே பெயரடைகளாகப் பயன்படுகின்றன என்பதும் இங்குக் குறிக்கத்தக்க இன்றியமையாத செய்தியாகும்.

**11.** மூடி வகைப் பெயர்கள்: வினையடியும் இகர விகுதியும் சேர்ந்து மூடிவகைப் பெயர்கள் அமைகின்றன. மூடி, கொள்ளி, நொண்டி முதலியனவும் ஒலிபெருக்கி, வழிகாட்டி, மண்வெட்டி, நகம்வெட்டி, மரங்கொத்தி, அம்பலத்தாடி, தொட்டாற்சுருங்கி, பங்காளி, விருந்தாளி, தொலைபேசி, தொலைநோக்கி முதலியனவும் மூடிவகைப் பெயர்களே. இவற்றுள்ளும் மூடி, கொள்ளி, நொண்டி என்பன பெயர்த் தன்மை மட்டுமே கொண்டுள்ளன என்றும் ஒலிபெருக்கி முதலியவை பெயர்த் தன்மையோடு வினைத்தன்மையும் கொண்டுள்ளன என்றும் முன்பே குறிப்பிட்டோம். தொட்டால்சுருங்கி என்பதில் சுருங்கு என்ற சொல்லின் வினைத்தன்மை தெளிவாக விளங்குகிறது.[7] மூடிவகைப் பெயர்களில் பெரும்பாலன மரபுத்தொடர்களாகவும் மரபுச் சொற்களாகவும் ஆகிவிட்டன. அண்மையில் உருவாக்கப் பெற்ற தொலைநோக்கி, தொலைபேசி, வழிகாட்டி, ஒலிபெருக்கி என்பனவும் இப்போது மரபுத் தொடர் நிலைக்கு வந்துவிட்டன எனலாம்.

கரண்டி, தோண்டி, வாரி என்பனவெல்லாம் வரலாற்று நோக்கில் ஆய்ந்து பார்த்தால் வினையடியும் இகர விகுதியும் சேர்ந்து பிறந்தன என்று விளங்கும். இவையெல்லாம் அறவே வினைத்தன்மையை இழந்து பெயர்களாகி விட்டன.

**12.** கோடல்வகைப் பெயர்கள்: ஒன்றுக்கு மேற்பட்ட பெயராக்க நெறிகளை மேற்கொண்ட பெயர்கள் இப் பிரிவில் அடங்கும் என்று முன்பே குறிப்பிட்டோம். கோடல் என்ற பெயரில் முதலுயிர் நீண்டதோடன்றித் தல் விகுதியும் சேர்ந்துள்ளமை காண்க. இவ்வாறே தீனி என்பதிலும் முதலுயிர் நீண்டு இகர விகுதி சேர்ந்து நிற்றல் காண்க. நிலையம், விடுதலை, கெடுதலை, ஆறுதலை, தேறுதலை, பிணக்கம் முதலாய பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

இவையன்றியும் படிப்பினை, விற்பனை, வருமானம், பெறுமானம், வேண்டுகோள், தள்ளுபடி, செல்லுபடி, வரும்படி

முதலாய பெயர்களையெல்லாம் இப்போது கோடல்வகைப் பெயர்களிலேயே அடக்கிக் கொள்வோம். இனை, அனை, மானம், கோள், படி முதலியன பெயராக்க விகுதிகள் போல் இயங்குகின்றன. கோடல்வகைப் பெயர்களை மேலும் ஆராய்ந்து வகைப் படுத்தவேண்டும். சாப்பாடு, கூப்பாடு என்பவற்றைக் கோள் வகைப் பெயர்களில் அடக்கலாம் என்று அங்குக் குறிப்பிட்டோம். இவற்றை அங்கு அடக்கிக் கொள்ளாமல் கோடல் வகைப் பெயர்களோடு கொண்டாலும் குறையில்லை. எவ்வாறு கொள்ளினும் இவை மேலும் ஆராயத்தக்கன.

சொல்லமைப்பினையும் சொல் நடையினையும் அடிப்படையாகக் கொண்டு வினைதரு பெயர்களைப் பன்னிரண்டு வகையாகப் பிரித்துள்ளோம்.[8] இவற்றுள் பன்னிரண்டாம் வகை மட்டும் பல்வேறு வகையான பெயர்களைக் கொண்டுள்ளது. பன்னிரண்டாம் வகைப் பெயர்களை மேலும் ஆராய்ந்து வகைப்படுத்த வேண்டும் என்பது மீண்டும் வற்புறுத்தத்தக்கது. நம் தமிழறிஞர்கட்டு இந்தப் பன்னிரு வகைப் பெயர்களும் தெரியுமெனினும் இதுவரை இவற்றை யாரும் தெளிவாகப் பாகுபடுத்தி வழங்கவில்லை. வினைதரு பெயர்களைப் பற்றி மேலும் ஆராய விரும்புவோர்க்கு இக் கட்டுரை உறுதுணை புரியும் என்று நம்புகிறோம்.

## குறிப்பு

1 கொள்—ந்த்—அது என்பதில் மூன்று களன்களும் கொள்—ந்த்—அ—மை என்பதில் நான்கு களன்களும் இருப்பதை நோக்குக.

| | | |
|---|---|---|
| கொள்— | ந்த்— | அது |
| கொள்— | வ்— | அது |

| | | | |
|---|---|---|---|
| கொள்— | ந்த்— | அ— | மை |
| கொள்— | இன்ற்— | அ— | மை |

2. இறந்த காலத்தில் ந்த் இடைநிலையை ஏற்பனவாக உள்ள கொள், செல் முதலாய ளகர, லகர ஈற்று வினைகள் கொள்ளல், செல்லல் என ளகர, லகர ஒற்றுகள் இரட்டியும் கொளல், செலல் என இரட்டாதும் வரும். இறந்த காலத்தில் த்த் இடைநிலையை ஏற்பனவாக உள்ள கேள், கல் முதலாய ளகர லகர ஈற்று வினைகட்கு இக் கூற்று பொருந்தாது. அவை ககரச்சாரியை பெற்றுக் கேட்கல், கற்கல் என வரவேண்டும்.

3 உங்கள் வருகைக்காக நான் காத்திருந்தேன் என்பதிலுள்ள வருகை கொள்கை வகைப் பெயர். அவர் இங்கு வருகையில் உங்களைப் பார்த்தார் என்பதிலுள்ள வருகை கொள்ளுகை வகைப் பெயர், உங்கள் வருகை

என்பதில் வருகை என்ற பெயர் பெயரடையை ஏற்றும் அவர் இங்கு வருகையில் என்பதில் வருகை என்ற பெயர் வினையடை பெற்றும் வந்தமை காண்க.

4 'அவரு சொல்றது சரிதான்' என்ற பேச்சு வழக்குத் தொடரையும் அவர் சொல்வது சரிதான் என்ற எழுத்து வழக்குத் தொடரையும் கவனிக்க.

5

| | | | |
|---|---|---|---|
| கொள் | ந்த் | அ | மை |
| கொள் | ஆ | அ | மை |
| கொள் | ஆத் | அ | மை |

| | | |
|---|---|---|
| கொள் | வ் | அது |
| கொள் | ஆத் | அது |
| கொள் | ந்த் | அவன் |
| கொள் | ஆத் | அவன் |

வினையடியும் பிற விகுதிகளும் நான்கு களங்களிலும் மூன்று களங்களிலும் நிற்கும் முறைமை மேற்காட்டிய படங்களில் விளங்கும்.

6 தமிழிலுள்ள வினைச் சொற்கள் அவை ஏற்கும் கால இடைநிலைகளின் அடிப்படையில் பன்னிரண்டு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவற்றிலுள்ள ஒவ்வொரு வகையையும் வாய்பாடு என்று குறிப்பர். இறந்த காலத்தில் ட்ட் பெறும் வினைகள் கேள் வாய்பாட்டுக்கும் ற்ற் பெறும் வினைகள் கல் வாய்பாட்டுக்கும் த்த் பெறும் வினைகள் பார் வாய்பாட்டுக்கும் உரியன. இறந்த காலத்தில் ந்த் பெற்று நிகழ்வு எதிர்வில் முறையே க்கிற்/க்கின்ற், ப்ப் பெறும் வினைகள் நட வாய்பாட்டுக்கு உரியன.

7 தொட்டால் என்ற வினையெச்சம் சுருங்கு என்ற வினையைக் கொண்டு முடிதல் காண்க.

8 சொல்லாக்க முறையில் அமைந்த பெயர்கள் சொற்பெருக்க முறையில் அமைந்த பெயர்கள் ஆகிய இருவகையனவும் இங்குள்ள வினைத்தரு பெயர்களில் அடங்கியுள்ளன.

# 6

# குறிப்பு வினை

குறிப்பு வினையைப் பற்றி இதுவரை ஏராளமான ஆய்வுகள் நடந்துள்ளன.[1] அந்த ஆய்வுகள் எல்லாவற்றையும் இங்கு எடுத்துரைப்பதும் மறுப்பதும் ஒப்புவதும் இக் கட்டுரையின் வேலையல்ல. குறிப்புவினை என்பதை எப்படித்தான் வரையறுப்பது? அப்படி ஒன்று தமிழ் மொழிக்குத் தேவைதானா? இந்த இரு வினாக்கட்கு மட்டும் இங்கு விடை காண்போம்.

**இருவகை வினை :** வினைகளைத் தெரிநிலை, குறிப்பு என இரண்டாகப் பிரித்தனர் தமிழிலக்கணப் புலவர்கள். காலங் காட்டுவது தெரிநிலை என்றும் காலத்தைக் குறிப்பாகக் காட்டுவது குறிப்பு என்றும் கூறினர். காலத்தைக் குறிப்பாகக் காட்டுவது குறிப்பு வினை என்ற கருத்தில் தெளிவில்லை. இந்த இலக்கணத்தைக் கொண்டு நாம் குறிப்பு வினையைத் தெரிந்துகொள்ள இயலாது. வேறு எப்படித் தெரிநிலை, குறிப்பை உணர்ந்து கொள்வது?

**தெரிநிலை வினை :** தெரிநிலை வினையின் அமைப்பை முதலிற் பார்ப்போம்.

(1) வினையடி—காலம்—பால் இடவிகுதி

| | | | |
|---|---|---|---|
| செய் | —த் | —ஆன் | >செய்தான் |
| ஓடு | —இன் | —ஆன் | >ஓடினான் |

(2) வினையடி—எதிர் மறை—பால் இட விகுதி

| | | | |
|---|---|---|---|
| செய் | —ஆ | —ஆன் | >செய்யான் |
| ஓடு | —ஆ | —அது | >ஓடாது |

மேற்காட்டிய அமைப்புகளில் வருவன எல்லாம் தெரிநிலை வினைகளே. இவை பெயரெச்சமாகவும் வினையெச்சமாகவும்

செய்த, செய்கின்ற முதலிய வாய்பாடுகளில் வரும். தெரிநிலை வினைகளைப்பற்றி இனி ஐயம் எழாது.

குறிப்பு வினை : குறிப்பு வினையின் அமைப்பைப் பார்ப்போம்.

குறிப்பு வினையடி—பால் இட விகுதி

| | | |
|---|---|---|
| நல் | —அன் | > நல்லன் |
| வல் | —அன் | > வல்லன் |
| இனி | —அன் | > இனியன் |
| எளி | —அன் | > எளியன் |

பால் இட விகுதிகள் பற்றி விளக்கமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். இங்குப் பாலிட விகுதிகள் என்று குறிக்கப்படுவன வினைக்குரிய விகுதிகள் மட்டுமேயாம். அரசி, அழகி, எழிலி என்பவற்றிலுள்ள இகர விகுதி பெண்பாலைக் குறிப்பதால் பால் விகுதியே எனினும், அது பெயர்க்கு மட்டுமே உரிய விகுதி யாதலால் அரசி, அழகி என்பன எவ்வாற்றானும் குறிப்பு வினையாகமாட்டா. அவை பெண்பாற் பெயர்கள். அன், ஆன், அள், ஆள் முதலிய வினைவிகுதிகளைக் கொண்டுவருவன மட்டுமே வினைகளாம்.

நல் என்ற குறிப்பு வினையடி தன்மை முன்னிலை படர்க்கையில் வருமாறு காண்க.

| | |
|---|---|
| நான் | நல்லென்/நல்லேன் |
| நாம் | நல்லெம்/நல்லேம் |
| நாங்கள் | ,, ,, |
| நீ | நல்லை |
| நீர் | நல்லீர் |
| நீங்கள் | நல்லீர்கள்(?) |
| அவன் | நல்லன் |
| அவள் | நல்லள் |
| அவர் | நல்லர் |
| அது | நன்று |
| அவை | நல்ல |

நல் என்ற குறிப்பு வினையடி தெரிநிலை வினையடி போலவே மூன்றிடமும் ஐம்பாலும் ஏற்று வந்தது, தெரிநிலை வினையடி கால இடைநிலைகளையும் எதிர்மறை இடைநிலையையும் ஏற்கும். ஆனால் குறிப்பு வினையடி அவற்றை ஏற்பதில்லை.

குறிப்பு வினைகளுள்ளும் சில உட்பிரிவுகள் உள்ளன. அல், இல் என்ற இரண்டு வினைகளுக்கும் அன்றி, இன்றி, அல்லாமல், இல்லாமல் ஆகிய வினையெச்ச வடிவங்களும் அல்லாத இல்லாத என்னும் பெயரெச்ச வடிவங்களும் உண்டு.[3] உடை என்ற வினை செயப்படு பொருள் ஏற்று வரும். இது கால இடைநிலை ஏற்காமல் செயப்படு பொருள் ஏற்று வரும்.

இல் என்ற வினையும் செயப்படு பொருள் ஏற்று வருதல் உண்டு. அவர் அன்புடையர் என்பதில் அன்பு என்பது செயப்படு பொருளாய் நிற்பதுபோல் அவர் அன்பிலர் என்பதிலும் அன்பு செயப்படு பொருளாய் நிற்கிறது. இங்கு இல் என்ற வினை செயப்படு பொருள் ஏற்று வந்தமை காண்க. இல் என்ற வினை உண்டு, உடை, இரு, உள் ஆகிய வினைகட்கு உரிய எதிர்மறை வினை என்பது குறிப்பிடத்தக்கது. உண்டு என்ற சொல் 'இல்' என்பதன் மறையாகவும் 'இரு' என்பதன் ஈடாகவும் இயங்குகிறது. 'உரி' என்ற குறிப்பு வினையடி எப்போதும் நான்கன் உருபைத் தொடர்ந்து நிற்கும். மேற்கண்ட அல், இல், உடை, உள், உரி ஆகிய கிளவிகள் ஏனைய குறிப்பு வினைகளினின்றும் சிறிது மாறுபட்டன எனலாம். ஒப்புப் பொருளில் வரும் அனே (அல்லது அன்) என் கிளவியையும் மேற்கண்ட கிளவிகளோடு சேர்த்துக் கொள்ளலாம். இந்த ஆறு கிளவிகளுள் அல், இல் என்னும் இரண்டும் அன்மையும் இன்மையும் கருதி நின்றன. 'உள்' என்பது உண்மை அல்லது இருப்பு கருதியது. 'உடை' என்பது உடைமையும் 'உரி, என்பது உரிமையும் 'அனே' என்பது ஒப்பும் கருதி நிற்பன. எஞ்சிய குறிப்பு வினைகள் யாவும் அன்மை, இன்மை, உண்மை. உடைமை, உரிமை, ஒப்பு ஆகிய இப் பொருள்களில்தான் வருகின்றன என்பது உணர்ந்து மகிழத்தக்கது.

இவையன்றிக் குறிப்பு வினையடியாக வருவன யாவை? அன், அள் முதலிய பாலிட விகுதிகளை ஏற்கும் எல்லாக் கிளவிகளுமே குறிப்பு வினையடிகள் தாம். அவற்றுள்ளும் சில இன்சாரியை ஏற்றும் சில அவ்வாறு ஏற்காமலும் வருகின்றன. இனியன் எளியன் என்பன பண்படியாகப் பிறந்து இன்சாரியை பெறாது குறிப்பு வினையாக நிற்கின்றன. அன்பினன், பண்பினன் என்பன பண்படியாகப் பிறந்து இன்சாரியை பெற்றுக் குறிப்பு வினைகளாக நிற்கின்றன. அன்பினன் என்பது குறிப்புவினை, ஆனால் அன்பன் என்பது குறிப்புவினையல்ல. அன்பு என்ற சொல் இன்சாரியை பெற்றபின் பாலிட விகுதிகளைத் தடையின்றி ஏற்கும். அவ்வாறு ஏற்கும்போதுதான் அது குறிப்பு வினை

யாகும். அரசன், அரசி, தோழன், தோழி, மகன், மகள், அன்பன், அன்பர், கண், கண்கள் என்பனவெல்லாம் பெயர்களே யன்றிக் குறிப்பு வினைகளாகா.

தெரிநிலை வினைகள் அன்சாரியை பெறுமேயன்றி இன் சாரியை பெறுவதில்லை: குறிப்பு வினைகள் இன்சாரியை பெறுமேயன்றி அன்சாரியை பெறுவதில்லை. தெரிநிலை வினை களுள் 'இன்' என் கிளவியை இறந்த கால இடை நிலையாகக் கொண்ட வினைகள் 'இன்' என்ற காலக்கிளவிக்குப்பின் சாரியை பெறுவதில்லை. இவையெல்லாம் கூர்ந்து கவனிக்கத்தக்கன.

அன்பு என்பது பெயர். அன்பினன், அன்பினள், அன்பினர் என்பன குறிப்பு வினைகள். செவிடு என்பது பெயர். செவிடன், செவிடி, செவிடர் என்பனவும் பெயர்களே—இவை குறிப்பு வினைகளல்ல.

குறிப்பு வினை என்றால் என்ன என்பது இப்போது விளங்கி யிருக்கும்.

பகுதி—பாலிட விகுதி என்ற அமைப்புக்கு உட்பட்டனதாம் குறிப்பு வினையாகும்: ஏனையவை குறிப்பு வினையல்ல.

(1) தெரிநிலை வினைகளில் இன்றியமையாத களங்கள் மூன்று. முதற்களத்தில் பகுதியும் இரண்டாங்களத்தில் காலம் அல்லது எதிர்மறை இடைநிலையும் மூன்றாங் களத்தில் பாலிட விகுதியும் நிற்கும்.

| பகுதி | காலம், எதிர்மறை | பாலிட விகுதி |
|---|---|---|
| செய் | த்<br>த்+அன் | ஆன்<br>அன் |
| பாடு | இன் | ஆன்/அன் |

குறிப்பு வினைகளில் இன்றியமையாத களங்கள் இரண்டு இன்றியமையாத உறுப்புக்கள் இரண்டு. முதற் களத்தில் ~~பாலிட~~ பகுதியும், இரண்டாம் களத்தில் விகுதியும் நிற்கும் (காலமும் எதிர் மறையும் இல்லை).

| பகுதி | பாலிட விகுதி |
|---|---|
| உடை | அன் |
| நல் | அன் |
| அன்பு, காடு } இன் | அன் |

(2) தெரிநிலை வினைகள் ஏவல் ஏற்கும். குறிப்பு வினைகள் ஏவல் ஏற்பதில்லை.

(3) தெரிநிலை வினைகள் சாரியை பெறும்போது அன்சாரியை பெறும்: இன்சாரியை பெறாது. குறிப்பு வினைகள் சாரியை பெறும்போது இன்சாரியை பெறும்: அன்சாரியை பெறாது.

வினையாலணையும் பெயர்கள்: குறிப்பு வினைக் குழப்பம் இத்தோடு தீரவில்லை. இன்னும் வினையாலணையும் பெயர்களைப் பற்றியும் விளக்கம் வேண்டும். தெரிநிலை வினையில் உள்ள வந்தவன் சென்றவன் போன்ற வினையாலணையும் பெயர்கட்கு இணையாகக் குறிப்பு வினையிலும் வினையாலணையும் பெயர்கள் உள்ளன.

| | தெரிநிலை | குறிப்பு |
|---|---|---|
| வினை | செய்தான்/செய்தனன் | நல்லன் |
| வினையாலணையும் பெயர் | செய்தவன் | நல்லவன் |

| | தெரிநிலை | குறிப்பு |
|---|---|---|
| வினை | செய்தது/(செய்தன்று) | நன்று |
| வினையாலணையும் பெயர் | செய்தது | நல்லது |

மேற்காட்டிய படங்களிலிருந்து ஒரு உண்மை பளிச்செனை விளங்கவேண்டும். தெரிநிலை வினையைப் பொறுத்தமட்டில் வினை, வினையாலணையும் பெயர் இரண்டுமே இன்றும் செந்தமிழ் வழக்கில் உள்ளன. ஆனால் குறிப்பு வினையில் குறிப்பு வினையாலணையும் பெயர் வழக்கில் உள்ளதே தவிர குறிப்புவினை வழக்கில் இல்லை. இதனால்தானோ என்னவோ குறிப்புவினை பல ஆய்வாளர்களுடைய ஆய்வுக்கு இலக்காகி நின்றது.

தெரிநிலை வினையில் செய்தது என்ற வடிவமே வினையாகவும் வினையாலணையும் பெயராகவும் நிற்பதுபோல் குறிப்பு வினையில் நாட்டினன், ஊரினன் என்பன வினையாகவும் வினையாலணையும் பெயராகவும் நிற்கின்றன.[3]

| | தெரிநிலை | குறிப்பு |
|---|---|---|
| வினை | செய்தது<br>வந்தது<br>போனது | நாட்டினன்<br>ஊரினன்<br>அன்பினன்<br>பண்பினன் |
| வினையாலணையும் பெயர் | செய்தது<br>வந்தது<br>போனது | நாட்டினன்<br>ஊரினன்<br>அன்பினன்<br>பண்பினன் |

தமிழில் குறிப்பு வினைக்கு உள்ள இடத்தை எவ்வகையிலும் மறுக்க இயலாது. பயனிலைப் பகுதியில் ஏனைய வினைகள் தோன்றி நிற்பது போலவே குறிப்பு வினைகளும் நிற்கும். குறிப்பு வினையைப்பற்றி நாம் இங்குக் கூறிய எல்லாச் செய்திகளையும்

நம் இலக்கண வல்லுநர்கள் தொகுத்து ஓரிடத்துக் கூறவில்லையே தவிர இந்தச் செய்திகளைப் பெரும்பாலும் அவர்கள் அனைவரும் உணர்ந்திருந்தார்கள் என்றே கூறலாம். காலப் போக்கில் மொழியில் வியத்தகு மாற்றங்கள் நிகழ்வதும் மாற்றங்கள் நடந்து முடிந்தபின் சில உண்மைகள் எளிதில் விளங்காமல் மறைந்து கிடப்பதும் வரலாற்றில் காணும் எளிய செய்திகள். மறைந்து கிடக்கும் உண்மைகளை உணர்ந்து மற்றவர்க்கும் உணர்த்துவதுதானே ஆய்வாளர்கட்கு மகிழ்ச்சி தரும் பணி!

## குறிப்பு

1 இக்கட்டுரையை எழுதி முடித்து இரண்டாண்டுகள் ஆனபிறகு அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் உயர்நிலை ஆய்வுக் கழகத்தினர் நடத்திய தமிழிலக்கணக் கொள்கை பற்றிய கருத்தரங்கத்தின் கட்டுரைத் தொகுப்பில் டாக்டர் கா. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் குறிப்பு வினை பற்றி எழுதி வழங்கியுள்ள கட்டுரையைப் படித்து மகிழ்ந்தேன். குறிப்பு வினை பற்றிய ஆய்வில் இவரது கட்டுரைக்கு மிக முக்கியமான இடம் உண்டு. இவர் கொள்கையோடு நான் உடன்படுகிறேன்.

2 இன்னும் அல்லா, இல்லா ஆகிய பெயரெச்சங்களும் அல்லாது, இல்லாது ஆகிய வினையெச்சங்களும் கொள்க.

3 பழந்தமிழில் வினைமுற்றே வினையாலணையும் பெயராகவும் வரலாம். எனவே ஒரு குறிப்பு வினைமுற்று குறிப்பு வினையாலணையும் பெயராகவும் வரலாம் என்பது போதரும்.

# 7

# குறிப்புப் பெயரெச்சம்

(செந்தமிழில் இன்றைய வழக்குப்படி இருவகைப் பெயரெச்சங்கள் காணக்கிடக்கின்றன. வந்த பையன், சென்ற பெண் முதலிய தொடர்களிலுள்ள பெயரெச்சங்கள் காலங்காட்டி நிற்கின்றன. நல்ல பையன், நல்ல பெண் என்பனவற்றில் உள்ள பெயரெச்சம் காலம் காட்டவில்லை. வந்த, சென்ற என்பன காலம் காட்டும் பெயரெச்சம் எனவும் நல்ல, தீய முதலியன காலங்காட்டாத பெயரெச்சம் எனவும் கொள்ளலாம். இவற்றையே நம் இலக்கணப் புலவர்கள் தெரிநிலைப் பெயரெச்சம் என்றும் குறிப்புப் பெயரெச்சம் என்றும் கூறுவர்.)

தெரிநிலைப் பெயரெச்சத்தில் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்று காலங்கட்கும் ஏற்ப மூன்றுவகை எச்சங்கள் அமையும். வந்த யானை, வருகின்ற யானை, வரும் யானை எனவரும் தொடர்களில் இறப்புப் பெயரெச்சம், நிகழ்வுப் பெயரெச்சம், எதிர்வுப் பெயரெச்சம் ஆகிய மூன்றும் வந்தன. அன்றியும் ஓடாக் குதிரை, ஓடாத குதிரை எனவரும் எதிர்மறைப் பெயரெச்சமும் மேற்கூறிய தெரிநிலைப் பெயரெச்சங்களோடு சேர்த்து எண்ணத் தக்கவொன்ருகும். எனவே தெரிநிலைப் பெயரெச்சம் இறப்பு, நிகழ்வு, எதிர்வு, எதிர்மறை என்று நான்காகப் பிரிக்கத் தக்கதாம். தெரிநிலைப் பெயரெச்சத்திற்கும் அதன்பின் வரும் பெயர்க்கும் தொடரியல் அடிப்படையில் பல்வேறு உறவு நிலைகள் உள்ளன.[1]

குறிப்புப் பெயரெச்சங்கள் கால இடை நிலைகளைப் பெறுவதில்லை. பல்வேறு வகையான தொடரியல் உறவு நிலைகளை ஏற்பதுமில்லை. குறிப்புப் பெயரெச்சங்களின் அமைப்பையும் நடப்பையும் அடிப்படையாகக் கொண்டு அவற்றை இங்கு

வகைப்படுத்தி உள்ளோம். இந்தப் பெயரெச்சங்களைப் பெயரிலிருந்து வருவித்துக் காட்டுவர் ஒரு சாரார் : குறிப்பு வினையிலிருந்து வருவித்துக் காட்டுவர் இன்னொரு சாரார். குறிப்பு வினையிலிருந்து வருவித்துக் குறிப்புப் பெயரெச்சம் என இவற்றைக் கொள்வது மிகவும் பொருத்தமாக உள்ளது. மாற்றிலக்கணவியலார் கொள்கைக்கும் இது மிகவும் உடன்பாடான கருத்து. குறிப்புப் பெயரெச்சத்தை வகைப் படுத்துவதே இக்கட்டுரையில் நமக்கு இன்றியமையாத நோக்கம். கீழ்க்காணும் எச்சங்கள் வகைக்கு ஒன்றாகக் கொடுக்கப் பட்டுள்ளன.

1. நல்ல
2. பெரிய
3. சிறந்த
4. அழகான
5. அன்புள்ள
6. மேலே
7. மேற்கத்தி(ய)
8. முன்னைய
9. மாதத்திய
10. அழகிய
11. தூய
12. அந்த
13. எப்படிப்பட்ட
14. இளம்
15. அரும்
16. சிறு
17. ஒரு
18. ஏனைய
    அ. வட
    ஆ. செம்
    இ. கீழ்

1. நல்லவென் வகை : இவ்வகையில் வேர்ச் சொல்லும், அகரவிகுதியுமே உள்ளன. நல்ல, அன்ன, இன்ன முதலாய சொற்கள் இவ்வகையனவாம்.

2. பெரியவென் வகை : இவ்வகைக்கு உரிய பெயரெச்சங்களில் வேர்ச்செல்லும் இய என்ற விகுதியும் உள்ளன. சிறிய, இனிய, கொடிய, அரிய, எளிய, வலிய, தண்ணிய, ஒள்ளிய, வெள்ளிய, செவ்விய முதலிய பெயரெச்சங்கள் இவ்வகையில்

அடங்கும். ஓடிய, பாடிய எனவரும் தெரிநிலை எச்சங்களிலும் இய என்ற இறுதியைக் காண்கிறோம். வண்ணனை இலக்கணக் கொள்கைப்படி ஓடிய என்பதில் உள்ள இய இறுதியும் பெரிய என்பதிலுள்ள இய இறுதியும் வேறு வேறானவை. வரலாற்று நோக்கில் இவை தொடர்புடையனவாக இருக்கலாம்.[2] இது மேலும் ஆராய்தற்குரிய செய்தி. வல்—இய என்பது வலிய என்றும் மெல்—இய என்பது மெல்லிய என்றும் ஆகிறது. புணர்ச்சி விதியில் இந்த வேறுபாட்டுக்குக் காரணம் புலப்படவில்லை.

| | | | |
|---|---|---|---|
| வெள் — | இ | > | வெளி |
| வெள் — | இ | > | வெள்ளி |
| எள் — | இய | > | எளிய |
| தெள் — | இய | > | தெள்ளிய |

வெளி, எளிய என்பவற்றில் ஒற்றிரட்டாமைக்கும் வெள்ளி, தெள்ளிய என்பவற்றில் ஒற்று இரட்டியமைக்கும் சரியான விளக்கம் கூற வேண்டும். இவை எல்லாம் நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டிய செய்திகள்.[3]

3. **சிறந்தவென் வகை:** இவ்வகைக்கு உரிய பெயரெச்சங்களில் கால இடைநிலைகளைக் காணலாம். ஆனால் அவை காலம் காட்டுவதில்லை. இவ்வகை எச்சங்களிற்காணும் கால இடைநிலைகள் இறந்த கால இடைநிலைகளாகவே இருப்பது கவனிக்கத்தக்கது. இந்த வகையைச் சார்ந்த குறிப்புப் பெயரெச்சங்கள் ஏனைய காலங்களோடும் எதிர்மறையோடும் உறழ இடந்தருவதில்லை. அப்படி உறழ இடந்தருமானால் அவை தெரிநிலைப் பெயரெச்சங்களாகக் கொள்ளத்தக்கனவாம். உயர்ந்த குணம் என்ற தொடரைப் போல ஏனைய காலங்களோடும் எதிர்மறையோடும் உயர்கின்ற குணம், உயரும் குணம், உயராத குணம் என்று தொடர்கள் அமையுமெனினும் அவை உயர்ந்த குணம் என்பதோடு ஒப்பவைத்து எண்ணத்தக்கனவாக இல்லை. சிறந்த பண்பு, நீண்ட நேரம் என்பனவற்றையும் ஒப்புநோக்குக. உயர்ந்த குணம், நீண்ட நேரம் என்பனவற்றின் எதிர்மறை தாழ்ந்த குணம், குறைந்த நேரம் என வரும். தெரிநிலைப் பெயரெச்சங்கள் முக்கால இடை நிலைகளையும் எதிர்மறை இடைநிலைகளையும் ஏற்று நான்கு வகையாக நடக்கும். குறிப்புப் பெயரெச்சம் அவ்வாறு நடக்காது.

| | தெரிநிலைப் பெயரெச்சம் | குறிப்புப் பெயரெச்சம் |
|---|---|---|
| 1. | செய்—த்—அ | |
| 2. | செய்—கின்று—அ. | நல்—அ |

3. செய்—உம்
4. செய்—ஆத்—அ

செய்கின்ற என்பதற்குப் பதில் செய்கிற எனவும் செய்யாத என்பதற்குப் பதில் செய்யா எனவும் வரும் என்பது இங்கு நினைவு கொள்ளத்தக்கது. தெரிநிலைப் பெயரெச்சம் மூன்று கால இடைநிலைகளையும் எதிர்மறை இடைநிலையையும் பெற்று நான்கு வகையாக வருவதையும், குறிப்புப் பெயரெச்சம் வேர்ச் சொல்லும் பெயரெச்ச விகுதியும் பெற்று ஒரே வகையாக நிற்பதையும் மேலே உள்ள எடுத்துக் காட்டுகளில் காணலாம். குறிப்புப் பெயரெச்சங்களை அவை கொண்ட விகுதியின் அடிப் படையில்தான் இக்கட்டுரையில் வகைப் படுத்தியுள்ளோம் என்பது இங்கு மனங்கொளத்தக்கது.

நீண்டநேரம், குறுகிய புத்தி, கெட்டகுணம், அடுத்த பக்கம், முந்திய பக்கம், இளகிய மனம், உரத்த குரல், போன ஆண்டு, சிவந்த நிறம், பழுத்த உடல், முதலிய தொடர் களில் வரும் எச்சங்கள் யாவும் சிறந்தவென் வகையைச் சாரும். இவற்றில் உள்ள ந்த், த்த், இ முதலியவற்றை வரலாற்று நோக்கில் இறந்த கால இடைநிலைகளோடு தொடர்புடையன வாகக் கொள்ளலாம்; ஆனால் இன்றைய வழக்குப்படி அவை காலங்காட்டுவதில்லை. எனவே வண்ணனை நோக்கில் நீண்ட, குறுகிய என்பவை குறிப்புப் பெயரெச்சங்களாகக் கொள்ளத் தக்கனவேயாம். நீண்ட, குறுகிய என்பவற்றை நீள்—ந்த்—அ, குறுகு—இ—அ என்று பிரிப்பது வரலாற்று மொழியியலுக்கு உதவும். வண்ணனை நெறியிலும் அப்படிப் பிரிக்க எண்ணினால் ந்த்,இ என்பவற்றை ஒருவகைச் சாரியையாகக்கொள்ளவேண்டும். உயர்ந்த என்பதை வண்ணனை நெறியில் உயர்—ந்த என்று கொண்டு ந்த என்பதைக் குறிப்புப் பெயரெச்ச விகுதியாகக் கொள்வது ஒரு முறை. உயர்—ந்த்—அ என்று கொண்டு ந்த் என்பதைச் சாரியையாகவும் அ என்பதைப் பெயரெச்ச விகுதி யாகவும் கொள்வது இன்னொரு முறை.

| தெரிநிலைப் பெயரெச்சம் | குறிப்புப் பெயரெச்சம் |
|---|---|
| நடந்த | உயர்ந்த |
| கொடுத்த | அடுத்த |
| ஓடிய | போதிய |
| (வரும்) | (அரும்) |

பொருள் நோக்கிற்கு முதன்மை தராமல் சொல்லமைப்பை மட்டும் நோக்கினால் தெரிநிலைப் பெயரெச்சத்தின் அதே

அமைப்பைக் குறிப்புப்பெயரெச்சத்திலும் காணலாம். வண்ணனை வழக்கில் மேற்கூறிய இரு நெறிகளில் (1. உயர்—ந்த 2. உயர்—ந்த்–அ) எதை ஏற்பது சரி? இது மேலும் ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டிய செய்திகளில் ஒன்று.

**4. அழகான என்னும் வகை :** குறிப்பிட்ட சில பண்புப் பெயர்களும் ஆன என்ற கிளவியும் சேர்ந்து இவ்வகைப் பெயரெச்சங்களை அமைக்கின்றன. அழகான, சிவப்பான, நீளமான, உயரமான, வட்டமான, புளிப்பான, மிகுதியான, பொதுவான என வரும். ஆனால் அறிவான, குணமான, கற்பான என வருவதில்லை. அவை அறிவுள்ள, குணமுள்ள, கற்புள்ள என வருமேயன்றி மேற்காட்டியவாறு அறிவான, குணமான என வருவதில்லை.

ஆன என்ற கிளவியை எல்லாப் பண்புப் பெயர்களும் ஏற்பதில்லை என்பதும் வண்ணம், வடிவு, அளவு, சுவை முதலிய பொருள்களைக் குறித்து நிற்கும் சில குறிப்பிட்ட பண்புப் பெயர்கள்தான் ஆன என்ற கிளவியை ஏற்கும் என்பதும் இங்கு நன்கு மனத்திற் கொள்ளவேண்டிய செய்தியாம்.

அரசனான அசோகன், வீரனான செங்கோடன் என்பன மேலோட்டமாகப் பார்த்தால் அழகான பெண் என்ற தொடரைப் போலத் தோன்றுகின்றன; ஆனால் அவை வேறு அமைப்பினை உடையன. எனவே அவை அழகான என்னும் வகைக்கு உரியனவல்ல.[4]

**5. அன்புள்ள என்னும் வகை :** குறிப்பிட்ட சில பண்புப் பெயர்களும் உள்ள என்னும் கிளவியும் இவ்வகைப் பெயரெச்சங்களை அமைக்கின்றன. உள்ள என்னும் கிளவிக்குப் பதிலாக உடைய என்னும் கிளவியும் வரும். கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளைப் பார்த்தால் இது விளங்கும்.

| | | |
|---|---|---|
| அன்புள்ள | அன்புடைய | [(?) அன்பான] |
| அறிவுள்ள | அறிவுடைய | [*அறிவான] |
| அழகுள்ள | அழகுடைய | [அழகான] |
| திறமையுள்ள | திறமையுடைய | [திறமையான] |
| கற்புள்ள | கற்புடைய | [*கற்பான] |
| வீரமுள்ள | வீரமுடைய | [(?) வீரமான] |

சில பண்புப் பெயர்கள் உள்ள, உடைய, ஆன என்ற மூன்று கிளவிகளையும் ஏற்கின்றன. எ.டு. அழகுள்ள, அழகுடைய, அழகான. வேறு சில பண்புப் பெயர்கள் ஆன

என்ற கிளவியை மட்டும் ஏற்கின்றன. எ. டு. வட்டமான. இன்னும் சிலப் பண்புப் பெயர்கள் உள்ள, உடைய என்ற கிளவிகளை மட்டுமே ஏற்கின்றன. எ. டு. அறிவுள்ள, அறிவுடைய. எந்தப் பெயர் எந்தக் கிளவியை ஏற்கும் என எப்படி முடிவு செய்வது? இந்தச் சிக்கலுக்கு இப்போது நாம் இரண்டு வகையான தீர்வுகள் வழங்கலாம்.

(அ) அன்புள்ள, அறிவுடைய, அழகான முதலியவற்றைச் சொற்றொடர்களிலிருந்து வருவித்துக் காட்டுவது. கீழ்க்காணும் தொடர்கள் விளக்கம் அளிக்கும்.

கண்ணன் அன்புள்ளவன் → அன்புள்ள கண்ணன்
சாந்தா அறிவுடையவள் → அறிவுடைய சாந்தா
அமுதா அழகானவள் → அழகான அமுதா

இவ்வாறு குறிப்பு வினைமுற்றுகளிலிருந்து எச்சங்களை வருவித்துக் கொள்ளலாம். முற்று நிலையில் அன்புள்ளவன், அன்புடையவன், அன்பானவன் என மூன்றுமே வருமானால் அன்புள்ள, அன்புடைய, அன்பான என எச்ச நிலையிலும் மூன்றும் வரும்.

(ஆ) அன்பு, அறிவு, அழகு முதலிய சொற்களை அகர வரிசையில் அகராதியில் தரும்போது அன்பு [+உள்ள, + உடைய, + ஆன], அறிவு [+உள்ள, + உடைய], அழகு [+உள்ள, + உடைய, + ஆன] என்று இன்னின்ன பெயர்கள் இன்னின்ன கிளவிகளை ஏற்கும் என்று காட்டலாம். அப்படிக் காட்டுவதன் மூலம் அன்புள்ள, அன்புடைய, அன்பான முதலிய எச்சங்கள் எப்படி அமைந்துள்ளன என்பதையும் சுருக்கமாக விளக்கி விடலாம். இந்த இரண்டு வகையான தீர்வுகளும் இப்போதைய பயன்பாட்டுக்கு வழங்கப் பெற்றனவேயன்றி இவை சிறந்தன என்று முடிந்த முடிபாகக் கொள்வதற்கில்லை.

**6. மேலை என்னும் வகை:** இவ்வகை எச்சங்கள் ஐ விகுதியை ஏற்று அமைகின்றன. கீழைத்தெரு, இற்றைப் பொழுது, பண்டைக்காலம் என்பன இவ்வகை எச்சங்களைக் கொண்டு வந்தன. இவ்வகை எச்சங்கள் திசைப் பெயர்களிலிருந்தும் காலப் பெயர்களிலிருந்தும் கிடைக்கின்றன என்பது கவனிக்கத்தக்கது.

**7. மேற்கத்தி(ய) என்னும் வகை:** திசைப் பெயர்களோடும் அங்கு, இங்கு, எங்கு என்பவற்றோடும் அத்தி(ய)

குறிப்புப் பெயரெச்சம்

என்ற விகுதி சேர்வதால் இவ்வகை எச்சங்கள் உருவாகின்றன. கிழக்கு+அத்திய என்பது கிழக்கத்திய எனவும் மேற்கு+அத்திய என்பது மேற்கத்திய எனவும் தெற்கு+அத்திய என்பது தெற்கத்திய எனவும் வடக்கு+அத்திய என்பது வடக்கத்திய எனவும் வரும்.

வரலாற்றிலக்கண நெறியில் பார்த்தால் மேற்கு—அம்—இய என்பது மேற்கத்திய என உருவாகியிருப்பதாகத் தோன்றுகிறது. போன வாரத்திய, போன மாதத்திய எனவரும் தொடர்கள் வாரம்—இய எனவும் மாதம்—இய எனவும் பிரிக்க இடம் தந்து மேற்கு—அம்—இய என்ற பிரிப்போடு ஒப்ப நின்று நம் கருத்துக்கு அரணாக நிற்பது கவனிக்கத்தக்கது. மரப்பெயர்கள் எச்சநிலை பெறும்போது அம் விகுதி பெறுவதையும் [ஆல்—அம்—பழம்] நேரிய, கூரிய, அழகிய முதலிய எச்சங்கள் இய விகுதி பெறுவதையும் இவண் ஒப்புநோக்குக.

| | | | | |
|---|---|---|---|---|
| மேற்கு | — | அம் | > | *மேற்கம் |
| *மேற்கம் | — | இய | > | மேற்கத்திய |

காலம் என்ற சொல் இயவிகுதி பெற்றுக் காலத்திய என வருவதுண்டு. மேற்கத்திய என்ற சொல்லுக்கும் மேற்கு என்ற சொல்லுக்கும் இடையில் மேற்கம் என்றொரு சொல் இருந்ததாகக் கருத்தளவையாற் கொள்கிறோம்.

ஒ. நோ.

| | | | | |
|---|---|---|---|---|
| குன்று | — | அம் | > | குன்றம் |
| மன்று | — | அம் | > | மன்றம் |
| நோக்கு | — | அம் | > | நோக்கம் |
| மேற்கு | — | அம் | > | *மேற்கம் |

குன்று முதலிய பெயர்கள் அம் ஏற்று மீண்டும் பெயர்களாக நிற்பது போல மேற்கு என்பது அம் ஏற்றுப் பெயராக நின்றிருக்கிறது. *மேற்கம் என்பதை ஆலம் என்பதோடு (ஆல்—அம்) ஒப்ப வைத்து எண்ணுவதே பொருத்தமாகத் தெரிகிறது.

ஒ. நோ.

| | | | | |
|---|---|---|---|---|
| காலம் | — | இய | > | காலத்திய |
| வாரம் | — | இய | > | வாரத்திய |
| மாதம் | — | இய | > | மாதத்திய |
| *மேற்கம் | — | இய | > | மேற்கத்திய |
| *கிழக்கம் | — | இய | > | கிழக்கத்திய |

மேற்கத்திய, கிழக்கத்திய என்பவை போலவே அங்கத்திய என்றும் வழங்குவர். இங்கத்திய, எங்கத்திய என்பனவும் வழக்கில் உள்ளன. பேச்சு வழக்கில் மேற்கத்திய என்பதனை மேற்குத்தி, மேற்கத்தி என வழங்குவர். பிற திசைப் பெயர்களோடு வருவனவற்றையும் சிறிது மாறுபட வழங்குவர். அங்கத்திய என்பதனை அங்குத்திய என்றும் இவ்வாறு இங்குத்திய எங்குத்திய எனவும் வழங்குவர். இவற்றின் வரலாறு மேலும் ஆராயத்தக்கது. எழுத்து வழக்கில் மேற்கத்திய முதலிய வடிவங்கள் பயின்று வருவதில்லை எனினும் இவை நல்ல செந்தமிழ்ச் சொற்கள் என்பதை மறுத்தற்கியலாது.

8. **முன்னைய என்னும் வகை:** முன், பின் முதலாய சொற்களோடு ஐய என்னும் விகுதி சேர்வதால் இவ்வகை எச்சங்கள் உருவாகின்றன. முன், பின், முந்து, நேற்று, இன்று முதலிய காலச் சொற்களே இவ்வகை எச்சங்களின் பகுதியாக நிற்பது கவனிக்கத்தக்கது.

முன்னைய, பின்னைய, முந்தைய, நேற்றைய, இன்றைய, அன்றைய, பண்டைய, (பல)நாளைய, அப்போதைய, இப்போதைய, எப்போதைய என வருவன முன்னைய என்னும் வகையில் அடங்கும். காலச் சொற்களே யன்றிச் சிறுபான்மை இடச் சொற்களும் பகுதியாக வரும். ஆண்டைய, ஈண்டைய, யாண்டைய எனவும், மேலைய, கீழைய எனவும் வருதல் காண்க.[5]

9. **மாதத்திய என்னும் வகை:** அம்மீற்றுக் காலப் பெயர்களும் இய என்னும் விகுதியும் சேர்ந்து இவ்வகை எச்சங்கள் உருவாகின்றன. இய என்னும் விகுதி நிற்கும் இடத்தில் ஐய (அய) என்னும் விகுதியும் நிற்கலாம். போன மாதத்திய, போன மாதத்தைய இரண்டுமே ஒப்புதல் பெற்ற வழக்குகள்தான். இவை ஐய (அய) விகுதி பெறும்போது முன்னைய என்னும் வகையில் அடங்கும்.

(போன) மாதத்திய, வாரத்திய, வருடத்திய (அந்தக்) காலத்திய எனவரும். அம்மீற்றுப் பெயர்கள் வேற்றுமை விகுதியோடு சேருங்கால் அம் கெட்டு அத்துப் பெறுவது போலவே இங்கும் மாதம் முதலிய பெயர்கள் அத்துக் பெற்றன. இங்கு இய என்னும் விகுதியை ஆறன் உருபு எனக் கொள்ளலாமா என்ற வினா எழுவது இயல்பு. இப்போது விடை கூற இயலவில்லை.

**10.** அழகிய என்னும் வகை: சில பண்புப் பெயர்கள் இய என்னும் விகுதியை ஏற்பதால் இவ்வகை எச்சங்கள் பிறக்கின்றன. அழகிய, நேரிய, வளவிய, நடிய எனவரும். வளம்—இய என்பது வளவிய என அமைந்துள்ளமை கவனிக்கத் தக்கது. வளம்—இய என்பது வளத்திய என்ருகாமையால் இந்தத் தனிவகை தேவையாயிற்று. இல்லையேல் இவற்றையும் மேலே மாதத்திய வகையோடு சேர்த்து விடலாம்.

நடு—இய என்பது நடிய என்ருனமை கவனிக்கத்தக்கதாம்.[6] நடு என்பது பெயராக வரும் என்பது கருதத்தக்கது. நடுவில் என இல் உருபு ஏற்றுப் பெயராக வந்தமை காண்க.

**11.** தூய என்னும் வகை: இவ்வகையில் வேர்ச் சொல்லும் 'ய' விகுதியும் உள்ளன. 'ய' விகுதியை 'அ' விகுதி என்று கொள்ளுதல் இயலாத காரியமல்ல. ஆனுல் செவ்விய, செய்ய முதலிய கிளவிகளை ஒப்பு நோக்கின் செவ்விய என்பது செய்ய என்ருயிற்று எனக் கொள்வது பொருத்தமாகத் தோன்றுகிறது. எனவே இங்குள்ள விகுதியை யகரமாகக் கொள்வதே பொருத்தம்.

தூய, செய்ய, வெய்ய, தீய, சேய, அணிய என்பன இவ்வகையைச் சார்ந்தனவாம்.

**12.** அந்த என்னும் வகை: அந்த, இந்த, எந்த என்னும் சுட்டெச்சமும் வினுவெச்சமும் இவ்வகையில் அடங்கும். அவ், இவ், எவ் என்ற அடிச் சொற்களும் ந்த என்னும் விகுதியும் மேற்கூறிய எச்சங்களை உருவாக்குகின்றன.

**13.** அப்படிப்பட்ட என்னும் வகை: அப்படிப்பட்ட, இப்படிப்பட்ட, எப்படிப்பட்ட என்பன இவ்வகையைச் சாரும். அப்படி, இப்படி என்பனவற்ருேடு பட்ட என்ற சொல் சேர்ந்து இவ்வெச்சங்களை உருவாக்குகின்றன.

அப்படி, இப்படி, எப்படி என்ற பெயர்கள் வினை தழுவு கிளவிகள். இவற்றை வினையெச்சம் எனக் கொள்வது பொருந்தாது. இந்தக் கிளவிகளே பட்ட என்ற சொல்லை ஏற்றுப் பெயரெச்ச நிலைக்கு வருகின்றன.

**14.** இளம் என்னும் வகை: இவ்வகை எச்சங்கள் மிகச் சில. இவை வரலாற்று நோக்கில் அம் விகுதியே என்று முடிவு செய்யப்படலாம். இப்போது அப்படி முடிவுகூறச் சான்றுகள் போதாது.

இளம், பழம் என்பன இவ்வகையைச் சாரும். அஃமீற்றுக் கிளவிகள் யாவும் பெயராகவே இருக்க இவை மட்டும் எச்சமாக இருப்பது கவனிக்கத்தக்கது.

**15.** அரும் என்னும் வகை : வேர்ச் சொல்லும் உம் விகுதியும் சேர்வதால் இவ்வகை எச்சங்கள் பிறக்கின்றன.

எ. கா.

ஆர் — உம் > அரும்
கார் — உம் > கரும்
பேர் — உம் > பெரும்
கொடு— உம் > கொடும்
கடு — உம் > கடும்
நெடு — உம் > நெடும்

ஆர்—உம் என்பது அரும் எனவும் ஆர்—இய என்பது அரிய எனவும் மாறும்போது கூர்—இய என்பது மட்டும் கூரிய என்று நிற்பது ஏன்? நேர்—இய என்பதும் இப்படியே நேரிய என்று நிற்கிறதே ஏன்? இவை மேலும் சிந்திக்கத்தக்கன.

**16.** சிறு என்னும் வகை : இவ்வகை எச்சங்களில் வேர்ச் சொல்லும் உகரமும் காணப்படுகின்றன.

சீற்/சிற் — உ > சிறு
ஊற்/உற் — உ > உறு

இவை மேலும் ஆராயத்தக்கன. இவ்வகை எச்சங்கள் மிக மிகச் சில.

**17.** ஒரு என்னும் வகை : ஒரு, இரு, மூ முதலாய எண்ணெச்சங்களும், அனைத்து, எல்லா முதலிய எண்ணியல் எச்சங்களும் இவ்வகையில் அடங்கும். ஒரு, இரு என்பவற்றை யன்றி ஓர், ஈர் என்பனவும் உள்ளன. ஓர் — உ > ஒரு என்றும் ஈர் – உ > இரு என்றும் கொள்ளலாம். அனைத்து, எல்லா முதலியவை ஆய்வுக்குரியன.

**18.** ஏனைய என்னும் வகை : ஏனைய என்ற பெயரெச்சமும்; அனைய, இனைய முதலியவும்; வட, குட, குண, மேல், தென் முதலியவும்; செம், வெம், நல், வெள், தாள் முதலியவும்; கீழ், கார், ஆர், பேர் முதலியவும்; இனைய பிறவும் இவ்வகையில் அடங்கும்.

குறிப்புப் பெயரெச்சங்கள் மிகவும் சிக்கலான வரலாற்றைத் தம்முள் கொண்டுள்ளன. இவை மேலும் தொடர்ந்து ஆராயத்தக்கன.

## குறிப்பு

1 இந்த உறவுகள் 'தெரிநிலைப் பெயரெச்சம்' என்ற கட்டுரையில் விளக்கப் பெறும்

2 இப்போதைய நிலையில் இது வெறும் ஊகமே தவிர உண்மை என்று கொள்ள இயலாது. இந்த ஊகம் தவறாகவும் இருக்கலாம். எதிர்கால ஆய்வுதான் இது பற்றி நமக்குத் தெளிவு வழங்க வேண்டும்.

3 வரலாற்று மொழியியல் வளரும்போது இத்தகைய சிக்கல்கட்குத் தீர்வு பிறக்கும். வரலாற்று மொழியியல் புறக்கணிக்கப்பட்டு விட்டால் இத்தகைய சிக்கல்கள் சிக்கல்களாகக்கூடத் தோன்றாது.

4 அரசனான அசோகன் என்பதில் அரசன் என்பது பண்புப் பெயரல்ல என்பதும் அழகான பெண் என்பதில் அழகு என்பது பண்புப் பெயர் என்பதும் இங்குக் கவனிக்கத்தக்கது.

5 பேச்சு வழக்கில் அங்கைய, அங்கிய, இங்கைய, இங்கிய, எங்கைய, எங்கிய எனவும் வரும்.

6 நடு—இய என்பது *நடுவிய என அமைய வேண்டுமென எதிர்பார்க்கிறோம். நடிய என அமைந்ததற்குக் காரணம் விளங்கவில்லை.

# 8

# தெரிநிலைப் பெயரெச்சம்

செய்யும், செய்த, செய்யா(த) ஆகிய வாய்பாட்டுக் கிளவிகளை இங்குப் பெயரெச்சம் என்ற சொல்லால் குறிக்கிறோம். இவற்றைத் தொல்காப்பியர் பெயரெஞ்சுகிளவி என்ற சொல்லால் குறிக்கிறார். பெயரெஞ்சு கிளவியைப்பற்றித் தொல்காப்பியர் என்ன சொல்கிறார் என்று கண்டு விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

பெயரெஞ்சு கிளவியைப்பற்றித் தொல்காப்பியர் கூறும் செய்திகள் என்னவென்று முதலிற் காண்போம்.

(1) பெயரெஞ்சு கிளவிகள் செய்யும், செய்த என்னும் இருவகை வாய்பாட்டில் வரும்.[1]

எ. டு. உணரும் கிளவி (தொல். கிளவி. 57 : 8)
வானுறையும்மதி (புறம். 22 : 10)
கிளந்த கிளவி (தொல். எச்சம். 67 : 2)
காதலர் அழுத கண்ணீர் (புறம். 356 : 5)

(2) செய்யும், செய்த என்னும் வாய்பாட்டுக் கிளவிகள் உயர்திணைப் பெயரோடும் அஃறிணைப் பெயரோடும் முடியும். எனவே இவை உயர்திணை அஃறிணை ஆகிய இரு திணைக்கும் பொதுவாம்.[2]

எ. டு. விரவும் பொருள் (தொல். அகம். 48 : 1)
கடக்கும் குட்டுவன் (பதிற். 29 : 13)
பூத்த நெய்தல் (பதிற். 13 : 3)
ஈன்றதாய் (பதிற். 20 : 27)

(3) பெயரெஞ்சு கிளவிகள் யாவும் பெயர் கொண்டு முடிவன. பெயரெஞ்சு கிளவிகட்கும் அவை ஏற்கின்ற பெயர் கட்கும் உள்ள தொடரியல் உறவுகளை (Syntactic Relations) ஆறு வகையாகப் பிரிக்கலாம்.[3]

(அ) பெயரெச்சம்—இடம் (நிலம்)
எ. டு. அட்டகுறிசி (புறம். 237 : 7)

(ஆ) பெயரெச்சம்—செயப்படுபொருள் (பொருள்)
எ. டு. கிளந்த கிளவி (தொல். எச்சம். 67 : 2)

(இ) பெயரெச்சம்—காலம்.
எ. டு. பிறந்த நாள் (தொல். புறத். 30 : 8)

(ஈ) பெயரெச்சம்—கருவி
எ. டு. தாங்கும் வேல் (தொல். புறத். 17 : 7)

(உ) பெயரெச்சம்—வினைமுதல்
எ. டு. அட்டவேந்தன் (தொல். புறத். 14 : 10)

(ஊ) பெயரெச்சம்–வினை
எ. டு. போயின போக்கு

(4) செய்யுமென் கிளவி வினைமுற்றாக வரும்போது பலர் பாற் படர்க்கைப் பெயரையும் தன்மை முன்னிலைப் பெயர்களையும் எழுவாயாக ஏற்பதில்லை. ஆனால் அது பெயரெஞ்சு கிளவியாக வரும்போது மேல் விலக்கிய பெயர்களையும் எழுவாயாக ஏற்கும்.[4]

எ. டு. புலவர்பாடும் புகழ் (புறம். 27 : 7)
நீ ஆளும் நாடு
யான்வாழும் ஊர் (புறம். 191 : 7)

(5) எதிர்மறைப் பெயரெஞ்சு கிளவிகட்கும் செய்யும், செய்த என்னும் உடன்பாட்டுப் பெயரெஞ்சு கிளவிகட்குக் கூறிய இலக்கணம் பொருந்தும். அதாவது எதிர்மறைப் பெயரெஞ்சு கிளவிகள் இருதிணைப் பெயர்களையும் ஏற்கும். மேற்காட்டிய அறுவகை உறவு நிலைகளிலும் வரும்.[5]

எ. டு. காதல் கொள்ளா......மகளிர் (புறம். 73 : 12—13)
குன்றாச் சிறப்பு (தொல். புறத். 7 : 11)

கொள்ளா, குன்றா என்ற பெயரெஞ்சு கிளவிகள் மகளிர், சிறப்பு என்ற உயர்திணைப் பெயரோடும் அஃறிணைப் பெய ரோடும் முறையே முடிந்தன. முற்கூறிய அறுவகை உறவு நிலைகளிலும் எதிர்மறைப் பெயரெஞ்சு கிளவிகள் வருமென் பதற்குக் காட்டுகள் தனித்தனியே தரவேண்டியதில்லை. அங்குக்

கொடுத்த காட்டுகளிலுள்ள பெயரெச்சங்களை எதிர்மறை யாக்கிக் கண்டு கொள்ளலாம். அவை அடாக்குழிசி, கிளவாக் கிளவி, பிறவாநாள், தாங்காவேல், அடாவேந்தன், போகாப் போக்கு எனவரும்.

(6) பெயரெஞ்சு கிளவிக்கும் அது கொண்டு முடியும் பெயருக்கும் இடையில் பிறகிளவிகள் வரலாம். அவ்வாறு வரும் போது பொருள் மயக்கம் ஏற்படாமல் காக்கவேண்டும்.[6]

எ. டு. காதல் கொள்ளாப் பல்லிருங் கூந்தல் மகளிர்
(புறம். 73 : 12—13)

இங்குக் கொள்ளா என்ற பெயரெஞ்சு கிளவிக்கும் அது கொண்டு முடியும் மகளிர் என்ற பெயருக்கும் இடையில் பிறகிளவிகள் வந்தன எனினும் பொருள் மயக்கம் ஏற்படவில்லை.

வல்லமெறிந்த நல்லிளங் கோசர் தந்தை மல்லல் யானைப் பெருவழுதி என்ற தொடரில் எறிந்த என்ற பெயரெஞ்சு கிளவி பெருவழுதி என்ற பெயரையும் தழுவலாம்; கோசர் என்ற பெயரையும் தழுவலாம். ஆகவே வல்லம் எறிந்தது கோசரா வழுதியா என்று பொருள் மயக்கம் ஏற்பட்டு விடுகிறது. காதல் கொள்ளாப் பல்லிருங் கூந்தல் மகளிர் என்ற தொடரில் இப்படிப்பட்ட மயக்கத்திற்கு இடமில்லை.

(7) செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவியிலுள்ள உகரம் அது ஏறிநிற்கும் மெய்யோடு கெடுவதும் உண்டு.[7]

எ. டு. உலகவாம் பேரறிவாளன் திரு (குறள். 215)

இந்தச் செய்திகளையெல்லாம் மனத்துட்கொண்டு நாம் பெயரெஞ்சு கிளவிக்கு விளக்கம் காணவேண்டும். வினை, எழுவாய், செயப்படுபொருள், நிலன், காலம், கருவி இன்னதற்கு என்னும் வாய்பாட்டுக்கிளவி, இது பயன் என வரும் கிளவி ஆகிய எட்டு உறுப்புக்களும் வினைக்கு முன்னால் வரலாம்.[8] எல்லா வினைகளும் இந்த எட்டு உறுப்புக்களையும் ஏற்பதில்லை. சில வினைகள் சில உறுப்புக்களை ஏற்கும். சில வினைகள் சில உறுப்புக்களை ஏற்பதில்லை.[9] இந்த எட்டு உறுப்புக்களில் இன்ன தற்கு, இது பயன் என்னும் இரண்டு தவிர ஏனைய ஆறும் பெயரெச்சத்திற்கு முடிப்புச் சொல்லாக வரும். இவை தவிர வேறு சிலவும் பெயரெச்சத்திற்கு முடிப்புச் சொல்லாக வருமெனினும் வழக்குப் பயிற்சியும் தெளிவும் கருதித் தொல் காப்பியர் ஆறு உறுப்புக்களை மட்டும் கூறினார் போலும். தொல் காப்பியரே தம் நூலில் 'ஐந்தும் கலந்த மயக்கம்'[10] என்று

ஒரு தொடரை அமைத்திருக்கிறார். இதில் கலந்த என்ற எச்சத்திற்கும் மயக்கம் என்ற பெயருக்கும் உள்ள உறவுமுறை தொல்காப்பியர் கூறிய அறுவகை உறவுகளில் அடங்காததாக உள்ளது. கலந்த என்ற எச்சமும் மயக்கம் என்ற பெயரும் பெயரெச்சம்—வினைவு என்ற உறவு நிலையில் நிற்கின்றன.

பெயரெச்சங்கள் பெயர் கொண்டு முடியும் என்பது எல்லோருக்கும் தெரிந்த செய்தி. பாடிய கண்ணன் என்ற தொடரும் பாடிய பாட்டு என்ற தொடரும் பெயரெச்சத் தொடர்களே யென்றாலும் அவற்றை நாம் ஒரே முறையில் புரிந்து கொள்வதில்லை; வேறு வேறு முறையில் புரிந்து கொள்கிறோம். பாடிய கண்ணன் என்ற தொடரில் உள்ள கண்ணன் என்பது பாடு என்ற வினையின் எழுவாய் என்றும் பாடிய பாட்டு என்ற தொடரில் உள்ள பாட்டு என்பது பாடு என்ற வினையின் செயப்படுபொருள் என்றும் நமக்குத் தெளிவாக விளங்குகிறது. பாடிய கண்ணன் என்ற தொடர் கண்ணன் பாடினான் என்ற முற்றுத் தொடரிலிருந்தும் பாடிய பாட்டு என்ற தொடர் (யாரோ) பாட்டுப் பாடினார் என்ற முற்றுத் தொடரிலிருந்தும் வருவிக்கப் பெறுகின்றன. பாடிய கண்ணன் என்பதில் உள்ள எச்சமும் பெயரும் பெயரெச்சம்—எழுவாய் என்ற உறவு நிலையிலும் பாடிய பாட்டு என்பதிலுள்ள எச்சமும் பெயரும் பெயரெச்சம்—செயப்படுபொருள் என்ற உறவு நிலையிலும் நிற்கின்றன. ஒரு சிறந்த இலக்கண நூல் இத்தகைய உறவுநிலைகளை விளக்கவேண்டும்.

தொல்காப்பியப் பெருமகனார் இத்தகைய இலக்கண உறவுகளைப்பற்றி நன்கு உணர்ந்து, பெயரெச்சத்துக்கும் பெயருக்கும் உள்ள உறவுநிலைகளை ஆறாகப் பிரித்து விளக்கிச் சென்றிருக்கிறார். இங்குத் தெய்வச்சிலையார் ஏனைய உரையாசிரியர்களை விடவும் தொல்காப்பியரை நன்கு புரிந்துகொண்டு உரை எழுதியுள்ளார்.

முற்றுவினைக்கு முன்னின்று அவ்வினையைத் தழுவுகிற நிலன், செயப்படுபொருள், காலம், கருவி, எழுவாய், வினை ஆகிய உறுப்புகள் அம்முற்று வினையிலிருந்து பிறந்த பெயரெச்சத்திற்கு முடிப்புச் சொல்லாக வரும். முற்றுவினைக்கு முன்வரும் எட்டு உறுப்புக்களும் பெயரெச்சத்தின் முடிப்புச் சொல்லாக வருவதில்லை போலும். அவர் காலத்துப் பயின்று வந்த முடிப்புச் சொற்களை மட்டும் குறித்துச் செல்கிறார் தொல்காப்பியர், இன்னதற்கு, இது பயன் என்னும் இரண்டும் முடிப்புச் சொல்லாக அவர் காலத்துப் பயின்று வாராமையான்

அவ்விரண்டையும் விடுத்து, ஏனைய ஆறு உறுப்புகளை மட்டும் பெயரெச்ச முடிப்புச் சொற்களென்று குறித்துள்ளார் தொல்காப்பியர். கீழ்க்காணும் காட்டுகள் இந்தச் செய்தியை நன்கு விளக்கும்.

1. சாத்தன் பாட்டுப் பாடினான் ⟶
 சாத்தன் பாடிய பாட்டு

2. யானை புலியைக் கொன்றது ⟶
 புலியைக் கொன்ற யானை

3. புலி யானையைக் கொன்றது ⟶
 புலி கொன்ற யானை

4. சிங்கம் குகையில் இருந்தது ⟶
 சிங்கம் இருந்த குகை

5. அவன் ஒருநாள் வந்தான் ⟶
 அவன் வந்த நாள்

6. அவன் புலியை வேலால் தாக்கினான் ⟶
 அவன் புலியைத் தாக்கின வேல்

7. அரசர் புலவருக்குப் பரிசு கொடுத்தார் ⟶
 அரசர் பரிசு கொடுத்த புலவர்

8. அவன் கூலிக்கு வேலை செய்தான் ⟶
 அவன் வேலை செய்த கூலி

இறுதி இரண்டு பெயர்த்தொடர்கட்கும் தொல்காப்பிய விதி இடமளிக்கவில்லை. அரசர், பரிசு கொடுத்த புலவர், அவன் வேலை செய்த கூலி என்பன போன்ற தொடர்கள் தொல்காப்பியர் காலத்தில் வழுவாகவோ அல்லது அருகிய வழக்காகவோ இருந்திருக்கலாம். இப்போதும் அவை ஏனைய ஆறு பெயர்த் தொடர்களைப் போல அவ்வளவு வழக்கு வலிமையும் இலக்கண அமைவும் உடையதாகத் தோன்றவில்லை. ஆனால் சேனாவரையரும் வேறுசில உரையாசிரியர்களும் ஆடை கொடுத்த பார்ப்பான், ஆடையொலித்த கூலி ஆகிய எடுத்துக்காட்டுகளைக் கொடுத்து இவையும் கொள்க என்று கூறிச் செல்கின்றனர். பெயரெச்சத் தொடரில் இன்னதற்கு என்னும் வாய்பாட்டுக் கிளவியும் இது பயன் என்பதும் முடிப்புச் சொல்லாக வரலாம் என்ற கருத்தில் சேனாவரையர் முதலிய உரையாசிரியர்கள் அக் காட்டுகளைத் தந்துள்ளனர்.

இவையன்றியும் இலையுதிர்ந்த மரம், நீர் வழியுங்கண் என்பன போன்ற பெயரெச்சத் தொடர்களையும் நாம்

காண்கிறோம். இங்கு இன்னதின் (இன்னதினின்று) என்னும் வாய்பாட்டுக் கிளவி பெயரெச்சத்தின் முடிப்புச் சொல்லாக வந்துள்ளது.

மரத்தினின்று இலை உதிர்ந்தது —>
இலை யுதிர்ந்த மரம்
கண்ணினின்று நீர் வழியும் —>
நீர் வழியுங் கண்

இவற்றைத் தொல்காப்பியனார் 'பெயரெச்சம்—இடம்' என்ற உறவு நிலையிலேயே அடக்கிக் கொண்டார் போலும். சேனாவரையர் இதில் விழிப்பாக இருந்து பழமுதிர்ந்த கோடு, பழமுதிருங்கோடு என்ற காட்டுகளைக் காட்டிச் செல்கிறார். கல்லாடனார் மற்றிந் நோய் தீரும் மருந்தருளாய் என்று ஒரு எடுத்துக்காட்டினைத் தருகிறார். இதில் 'இதனால்' என்னும் வாய்பாட்டுக் காரணக் கிளவி பெயரெச்சத்தின் முடிப்புச் சொல்லாக வந்துள்ளது.

இம் மருந்தினால் இந் நோய் தீரும் —>
இந் நோய் தீரும் மருந்து.

'பெயரெச்சம்—காரணம்' எனவரும் இந்த உறவு நிலையைத் தொல்காப்பியர் 'பெயரெச்சம்—கருவி' என்ற உறவுநிலையில் அடக்கிக் கொண்டார் போலும். சேனாவரையர் நின்முகங் காணும் மருந்து என்றொரு எடுத்துக் காட்டினைத் தருகிறார். சேனாவரையர் இதனைப் 'பெயரெச்சம்—வினை' என்ற உறவு நிலையில் அடக்க முயல்கிறார். அது அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை. காணும் மருந்து என்ற தொடரில் உள்ள எச்சத்திற்கும் பெயருக்கும் உள்ள உறவு நிலையை இப்போது என்னவென்று கூற இயலவில்லை.

தொல்காப்பியரை நன்கு புரிந்துகொண்ட தெய்வச் சிலையார் 'வினையே செய்வது...' என்ற நூற்பாவுக்குச் சரியான ஒரு விளக்கவுரை தருகிறார். அதில் 'முதல் நிலை' என்பதை அவர் 'காரகம் என்கிறார்.[11] அதன் வாயிலாகத் தொழில் முதனிலை என்பது வினைக்கு முன் வரும் பெயர்களைக் குறிப்பதென்ற உண்மையையும் அவர் உணர்த்துகிறார். 'வினையே செய்வது...' என்ற நூற்பாவை நன்கு விளங்கிக் கொண்டாலன்றி 'நிலனும் பொருளும்...' என்ற நூற்பாவை விளக்க இயலாது.

கீழ்க்காணும் தொடர்களை ஆராய்ந்து பார்ப்போம்.

9. பாண்டியன் கோவலனை மதுரையில் கொன்றான் ⟶
(அ) கோவலனை மதுரையில் கொன்ற பாண்டியன்
(ஆ) பாண்டியன் மதுரையில் கொன்ற கோவலன்
(இ) பாண்டியன் கோவலனைக் கொன்ற மதுரை

முற்றுத் தொடர் 9இல் மூன்று பெயர்கள் உள்ளன. அம் மூன்று பெயர்களும் ஏதாவது ஒரு வகையில் 'கொல்' என்ற வினையொடு தொடர்புடையன இத்தகைய தொடர்பைத்தான் தொடரியல் உறவுநிலை அல்லது இலக்கண உறவுநிலை என்கிறோம். இந்த மூன்று பெயர்களும் கொன்ற என்ற பெயரெச்சத்திற்கு முடிப்புச் சொல்லாக வரலாம். முறையே பாண்டியன், கோவலன், மதுரை என்பன பெயர்த் தொடர்கள் (அ), (ஆ), (இ) மூன்றிலும் கொன்ற என்ற எச்சத்திற்கு முடிப்புச் சொல்லாக வந்தமை காண்க. பெயரெச்சத்திற்கு முடிப்புச் சொல்லாக வரும் பெயர்கள் தருதொடரில் (Source sentence) வினைக்கு முன் நிற்பதையும் வருதொடர்களில் (derived phrases) வினைக்குப் பின் நிற்பதையும் நோக்குக. முற்றுத் தொடர்களில் வினைக்கு முன் நின்ற பெயர்கள்தாம் பெயரெச்சத் தொடர்களில் பெயரெச்சத்தின் பின் நிற்கின்றன என்பது இப்போது விளங்கும். இஃதன்றியும் முற்றுத் தொடரில் வினை முற்றுக்கும் பெயருக்கும் உள்ள அதே உறவு நிலைகள் பெயரெச்சத் தொடரில் பெயரெச்சத்திற்கும் பெயருக்கு மிடையே காணப்படுகின்றன என்பதும் இங்கு நாம் உணரத்தக்க ஒன்றும். முற்றுத் தொடரில் பெயர்கள் வினைக்கு முன்னும் பெயரெச்சத் தொடரில் அவை பெயரெச்ச வினைக்குப் பின்னும் வருவதால் பெயர்கட்கும் வினைக்குமுள்ள உறவு நிலைகளில் மாற்ற மேற்படுவதில்லை. பையன் வந்தான் என்ற முற்றுத் தொடரில் பையன் என்ற பெயர் வந்தான் என்ற வினைக்கு எழுவாய் உறவில் நிற்கிறது. இந்த முற்றுத் தொடரிலிருந்து கிடைக்கின்ற வந்த பையன் என்ற எச்சத் தொடரிலும் பையன் என்பது எழுவாய் உறவில் தான் நிற்கிறது.

நான் இக்கட்டுரையில் வலியுறுத்திக் கூற விரும்புவன வருமாறு: 'வினையே செய்வது...' என்ற நூற்பாவில் தொல்காப்பியர் முற்று வினைக்கும் அதற்கு முன் நிற்கும் பெயர் கட்கும் உள்ள உறவுநிலைகளைப் பற்றித்தான் பேசுகிறாரே தவிர வினை நிகழ்ச்சிக்கு உள்ள காரணங்களைப் பற்றிப் பேசவில்லை. உலகில் நிகழும் வினை நிகழ்ச்சிகட்குரிய காரணங்களைக் கண்டு பிடித்துச் சொல்வது ஒரு இலக்கணப் புலவனுடைய கடமை யல்ல. அன்றியும் வினை, செய்வது முதலாய் எட்டும்

வினைக்குக் காரணம் என்று கொண்டால் வினையே அந்த வினைக்குக் காரணம் என்றாகும். வினையே அந்த வினைக்குக் காரணம் என்பது பொருட் சிறப்பில்லாத கூற்றாக முடியும். இலக்கணப் புலவன் ஒரு முற்றுத் தொடரில் உள்ள வினைக்கும் பெயர்கட்கும் உள்ள தொடரியல் உறவுகளை எடுத்து விளக்க வேண்டியது அவனுக்குக் கடமையாகும். தொல்காப்பியப் பெருந்தகையார் இந்தக் கடமையைத்தான் 'வினையே செய்வது...' என்ற நூற்பாவில் மிகச் சிறப்பாகச் செய்து முடித்திருக்கிறார். இங்குக் காணும் எட்டு உறுப்புக்களில், முற்றுத் தொடரின் முற்று வினை பெயரெச்சமாக மாறும்போது, முதல் ஆறு உறுப்புகள் மட்டுமே பெயரெச்சத்தின் முடிப்புச் சொல்லாக வரலாம் என்பது தொல்காப்பியர் கருத்து. இந்தச் செய்தியைத் தான் 'நிலனும் பொருளும்...' என்ற நூற்பா நமக்குத் தெரிவிக்கிறது.

'வினையே செய்வது...' என்ற நூற்பாவும் 'நிலனும் பொருளும்...' என்ற நூற்பாவும் தம்முள் மிகவும் நெருங்கிய தொடர்புடையன. இரண்டு நூற்பாக்களுமே பெயர்கட்கும் வினைக்குமுள்ள தொடரியல் உறவுகளை விளக்குவனவாக அமைந்துள்ளன. வினை முற்றுவினையாக இருப்பினும் எச்ச வினையாக மாறினும் வினைக்கும் பெயர்கட்கும் உள்ள உறவு நிலைகள் மாறுவதில்லை. இந்த உண்மைகளையெல்லாம் நன்கு உணர்ந்து தெய்வச்சிலையார் தெளிவாக விளக்கிச் செல்கிறார். சேனாவரையரும் பெயர் தெரியாத பழைய உரையாசிரியர் ஒருவரும் இக்கருத்தினை நெருங்கியிருக்கின்றனர் எனலாம்.

பெயரெச்சத்திற்கும் பெயருக்கும் உள்ள தொடரியல் உறவுகளைத் தொல்காப்பியர் முற்ற முடிய எடுத்துக் கூறவில்லை யானாலும் இந்த இலக்கணப் பெரும்புலவர் பல நூற்றாண்டுகட்கு முன்பே கண்டு கூறிய செய்திகள் புத்துலக மொழியியலறிவுக்குப் பொருத்தமானவையாகவும் போற்றத் தக்கவையாகவும் உள்ளன.

'மறைந்து கிடக்கின்ற பல உண்மைகளைக் கண்டறிய இயலாமல் நம்மை இருளில் விட்டிருக்கின்ற தொல்காப்பியக் கருவூலத்தில் இந்தச் செய்திகள் எல்லாம் உள்ளன எனினும் அவை வெளிப்படையாகவும் முறையாகவும் கூறப்படவில்லை என்பது உண்மைதான். விரைந்து வளர்ந்து வரும்மொழியியல் நாம் தொல்காப்பியப் பெருந்தகையின் நுண்மாண் நுழைபுலனை நன்கு உணர்ந்து கொள்ளப் பெரிதும் உதவுகிறது. மொழியியல் உலகில் வளர்ந்து வரும் புத்தம் புதிய மாற்றிலக்கணக்

கொள்கையை உணர்ந்து அந்த அடிப்படையில் இப்போது தொல்காப்பியத்தைக் கற்பது நமக்குப் பெரு மகிழ்ச்சி அளிப்பதாக உள்ளது'.[12]

## குறிப்பு

1 தொல், வினை. 37
2 தொல். வினை. 25
3 தொல் வினை. 37
4 தொல். வினை. 38
5 தொல். வினை. 39
6 தொல். வினை. 40
7 தொல். வினை. 41
8 தொல். வேற்றுமை மயங். 29
9 தொல். வேற்றுமை மயங். 30
10 தொல் மரபு 91
11 டாக்டர் பி. சா.. சுப்பிரமணிய சாத்திரியார் இக்கருத்தைத் தெளிவாக்குஇரா். (தொல்காப்பியம், சொல்லதிகாரப், ஆங்கில விளக்கம் அண்ணாமலை நகர், 1945. பக். 126 அடிக்குறிப்பு-3)
12 பேர். ச. அகத்தியலிங்கனாரின் ஜெனரேடிவ் க்ராமர் ஆப் தமிழ் (A Generative Grammar of Tamil) பக். ix.

# 9

# சொல்லாக்கமும் சொற்பெருக்கமும்

1. **சொல்லாக்கம் :** வேர்ச் சொற்களோடு விகுதிகளைச் சேர்த்தும் ஒன்றுக்கு மேற்பட்ட சொற்களைச் சேர்த்துத் தொகைகளை அமைத்தும் எல்லா மொழியிலும் சொற்கள் மேலும் மேலும் ஆக்கப்படுகின்றன. சொற்களை ஆக்குவதில் காலந்தோறும் மக்கள் பல்வேறு உத்திகளைக் கையாண்டிருக்கிறார்கள். காலப் போக்கில் சில சொல்லாக்க உத்திகள் அறவே மறக்கப்பட்டிருந்தாலும் வியப்பில்லை.

1. 1. **பொருள் விரிவு பெறுதல் :** மலர், அடி, பூ முதலிய சொற்கள் பெயராகவும் வினையாகவும் வருகின்றன. இவை ஓட்டம், நோக்கம், ஆட்டம் என்பன போலப் பெயர் விகுதி எதுவும் பெறுமலே பெயராகவும் தம்மியல்பில் வினையாகவும் நிற்கின்றன. இங்கும் சூனியத்தை (Zero) வினையாக அமைத்து அதைப் பெயர் விகுதி என்று கூறலாம். இந்தக் கொள்கை அவ்வளவு சிறப்புடையதன்று.

மேற்காட்டிய சொற்கள் இலக்கண நெறியில் அவை சொற்ளெடரில் பயன்படுகின்ற முறையில் மாற்றம் பெற்று அதனல் பொருள் விரிவுபெற்றன. மலர் என்பது பெயராக வருங்கால் ஒரு சொல் என்றும் வினையாக வருங்கால் வேருெரு சொல் என்றும் கருதினுல் சொற்களின் பயன்பாட்டில் ஏற்படுகிற மாற்றமும்சொல்லாக்க உத்திகளில் ஒன்ருக அடங்கிவிடும்.

இதையன்றி வேறு வகையால் பொருள் விரிவு ஏற்படுதலும் உண்டு. மணியினுள் உள்ள ஓர் உறுப்பினை நாக்கு என்றும் கொம்புபோல உள்ள ஓர் இசைக் கருவியைக் கொம்பு என்றும்

குடத்தில் கழுத்துபோல உள்ள ஒரு பகுதியைக் கழுத்து என்றும் குறிப்பது நம் எல்லோருக்கும் நன்கு தெரிந்த வழக்குகள்.[1] நாக்கு, கொம்பு, கழுத்து ஆகிய சொற்கள் பொருள் விரிவுபெற்று ஒப்புடைய பொருள்களையும் குறிக்கத் தொடங்கின. இப்படி ஒரே சொல் ஒப்புடைய இரு பொருள்களைக் குறிக்கும்போது அப்பொருள்களிடையே உள்ள ஒப்புமை மறக்கப்படுவதும் மாறிவிடுவதும் உண்டு. அங்நிலையில் இச்சொற்கள் உருவால் ஒப்புமையுடைய—ஆனால் உண்மையில் எவ்விதத் தொடர்பும் இல்லாத இரு வேறு சொற்கள் என்று கொள்ளப்படலாம்.

வேந்தர்கள் மணியும் முத்தும் பதித்து அழகுபடச் சூடிக் கொண்ட முடிக்கும், முடிக்கப்படுகின்ற முடி அல்லது முடிச்சுக்கும் இன்று மேலோட்டமாகப் பார்க்கும்போது நமக்கு அவற்றுள் ஏதும் தொடர்பு இல்லையென்றே சொல்லத் தோன்றுகிறது. இப்படித் தொடர்பு மறைந்த நிலையில் அவை உருவொத்த வேறு சொற்களாக நமக்குத் தோன்றுகின்றன. இப்படிச் சொற்கள் பிரிந்து பெருகும் முறை உன்னிப்பாகக் கவனிக்கத்தக்கது.

முடி என்பது முடித்தல் என்ற தொழிலையும், முடிக்கப்பட்ட தலைமுடியையும், உச்சியையும், தலையையும், தலையில் அணியும் மணிமுடியையும் குறிப்பது. இப்பொருள்கள் யாவும் தொடர்புடையன என்பது இப்போது தெளிவாகும். முடி என்ற சொல் பொருள் விரிவுபெற்று வேறுவேறு சொற்களாகப் பிரிந்து வளர்ந்துள்ளமை காண்க.[2]

1. 2. உருவு திரிதல்: உயிரொலி நீண்டும் உயிர்கள் மாறியும் மெய்கள் இரட்டித்தும் மெய்கள் மாறியும் சொற்களின் உருவில் தோன்றும் திரிபுகள் புதிய சொற்களை உருவாக்குவதுண்டு.

எ. டு. உண், ஊண் : உயிரொலி நீட்சி
தொடை, துடை : உயிர் மாற்றம்
வெளி, வெள்ளி : மெய் இரட்டு
அளபு, அளவு : மெய் மாற்றம்

உருவில் இவ்வாறு ஒன்றும் பலவுமாகத் திரிபுகள் தோன்றிப் புதிய சொற்களைப் பிறப்பிக்கும் நிலை ஒரு புறம் இருக்க, இப்படித் திரிபுகள் தோன்றியபின்னும் பொருள் மாற்றம் நேராமலே ஒரு சொல் நிலையிலேயே உள்ள சொற்களையும் மொழியில் காண்கிறோம். மெல்ல, மெள்ள எனவும் வெயில், வெய்யில் எனவும் வரும் சொற்களைப் பார்த்தால் இந்த உண்மை விளங்கும்.

**1. 3. விகுதிகள் சேர்தல்:** ஒரு சொல்லோடு ஒன்றும் பலவுமாக விகுதிகள் சேர்ந்து, புதிய சொற்கள் பிறப்பது பெரும்பான்மை. எண்ணம், நோக்கம் முதலிய சொற்களில் அம் விகுதியும் விலை, கொலை முதலிய சொற்களில் ஐ விகுதியும் சேர்ந்து சொற்கள் உருவாகியுள்ளன. விடுதலை, கெடுதலை முதலிய சொற்களில் தல், ஐ முதலிய இரண்டு விகுதிகள் ஒருங்கு சேர்ந்துள்ளன.

விகுதிகள் சேர்ந்தும் பொருள் மாற்றம் ஏற்படாமல் சொற்கள் ஒரு சொல் நிலையிலேயே நிற்பதும் உண்டு. நோக்கு, நோக்கம் எனவும் குன்று, குன்றம் எனவும் வான், வானம் எனவும் கான், கானம் எனவும் அமைந்துள்ள சொற்களை ஆராய்ந்து பார்த்தால் மேற்கூறிய உண்மை விளங்கும்.

**1. 4. சொற்றொகைகள்:** பட்டறிவு, பகுத்தறிவு என்பன பட்டறி, பகுத்தறி என்ற கூட்டு வினைகளோடு—வு விகுதி சேர்ந்து பிறந்தன. கருங்கல், செங்கல் என்பன கரும் செம் என்ற அடைகள் கல் என்ற சொல்லோடு சேர்ந்து பிறந்தன.

**1. 5. இரண்டு உண்மைகள்:** இவையன்றியும் பல்வேறு வகையற் சொல்லாக்கங்கட்கு மொழியில் இடமேற்படுகின்றன. மேற்கண்ட உண்மைகளை நுணுக்கமாக ஆராய்ந்து பார்த்தால் நமக்கு இரண்டு இன்றியமையாத உண்மைகள் புலப்படுகின்றன. ஒன்று, சொற்களில் சிலவற்றிலேனும் அடிப்படையிலேயே ஒருவிதப் பிரிநிலைப்போக்கு இருக்கிறது. இதனுல்தான் மலர், அடி போன்ற சொற்கள் பெயராகவும் வினையாகவும் இயங்க இடமேற்பட்டது. இதனை மேலும் விளக்கமாகப் பிறிதோரிடத்தில் பேசுவோம். இரண்டு, சொற்களில் உருவில் மாற்ற மேற்பட்டு நாளடைவில் பொருள் மாற்றமும் ஏற்படுகிறது. குன்று, குன்றம் என்பன ஒரே பொருளில் நிற்பதும் எண்ணு எண்ணம் என்பது பொருள் மாற்றம் பெற்றிருப்பதும் இந்த உண்மையைப் புலப்படுத்துகின்றன.

படு என்ற சொல் தோன்று, மறை என்று இரு பொருளிலும் வரும்.

வலி என்ற சொல் வலிமையில்லாத நிலையில் அனுபவிக்கும் துன்பத்தையும் துன்பத்தைத் தாங்கி அதனுல் எய்திய வலிமையையும் குறிக்கும்.

மல் என்ற சொல் வலிமையைக் குறிக்கும் வல் என்ற சொல்லோடும் மென்மையைக் குறிக்கும் மெல் என்ற சொல்லோடும் தொடர்புடையது.

தண் என்ற சொல் தண்ணீர் என்பதில் தண்மை என்ற பொருளையும் தணல் என்பதில் வெம்மை என்ற பொருளையும் கொண்டுள்ளது.

கீழ்க்காணும் வரிசைச் சொற்கள் தம்முள் தொடர்புடையனவாக இருந்து பிரிந்துள்ளன.

1. நீர், நெருப்பு
2. ஏறு, இறங்கு
3. வாழ், வாடு
4. கேள், கிள

சொற்களில் அடிப்படையிலேயே பிரிநிலைப் போக்கு இருக்கிறதென்பதும் இந்தப் போக்கும் சொல்லாக்கத்துக்கு மிக உறுதுணை என்பதும் நம் கவனத்தை ஈர்க்கின்ற உண்மைகள்.

வளையல், வளையம், வளைவு முதலியன வளை என்ற சொல்லும் அல், அம், வு முதலிய விகுதிகளும் சேர்ந்து பிறந்தனவே என்றாலும் இவை வெவ்வேறு பொருளைக் குறிக்கலாயின. உருமாற்றம் ஏற்பட்ட பிறகு பொருள் மாற்றமும் ஏற்படுகிறது.

சொல்லாக்கம் என்பது மொழியில் காலந்தோறும் தொடர்ந்து தேவைக்கேற்ப நிகழும் நிகழ்ச்சி. சொல்லாக்கத்தில் பயன்படும் விகுதிகளைப் பிரித்துப் பார்க்கலாமே தவிர இவை இவை இன்னின்ன பெயர்களோடு அல்லது வினைகளோடு இன்னின்ன பொருளில் வரும் என்று முன்னறிந்து கூறமுடியாது. விளக்கமாகச் சொன்னால் செய் என்ற வினை ஐம்பால் மூவிடங்களிலும் வரும் என்று கூறுவது போலச் சொல்லாக்க நெறியில் திட்டவட்டமாக எந்தெந்தச் சொல்லோடு எந்தெந்த விகுதிகள் சேர்ந்து எத்தனைப் புதிய சொற்கள் பிறக்கும் என்று கூற முடியாது.

சொல்லாக்க ஆராய்ச்சியில் சொற்கள் எப்படியெல்லாம் அமைந்துள்ளன என்று கண்டு விளக்கலாம். புதிய சொற்களைத் தேவையானபோது உருவாக்கவும் இந்த ஆய்வு உதவலாம். ஆனால் இந்த ஆராய்ச்சி இலக்கண ஆராய்ச்சியினின்று வேறுபட்டதென்பதும் வரலாற்றுப் போக்கில் அமைவது என்பதும் இங்கு மனதிற் கொள்ளவேண்டிய செய்திகள்.

ஒரு மொழியின் இலக்கண அமைப்பைத் தெரிந்துகொள்ள விரும்பும் மாணவன் ஒருவனுக்குச் சொல்லாராய்ச்சி பயன்படாது; தேவையுமில்லை. சொல்லாராய்ச்சிப் போக்கில் சொற்களை வேறு வேறாகப் பிரித்து ஆராய்ந்தாலும் சொற்களைத்

திரட்டி அகராதி அமைக்கும்போது பெயர், வினை, முதலிய சொற்களை அகராதியில் கொடுத்தாக வேண்டும். அகராதியில் உள்ள சொற்களைக் கொண்டு மொழியைப் பயன்படுத்தி நம் கருத்தைச் சொற்றொடர்களால் வெளிப்படுத்த நமக்கு அமைந்துள்ள இயல்பான திறனை விளக்கிக் காட்டுவதே இலக்கணம். இத்தகைய இலக்கணத்தில் சொல்லாக்க விதிமுறைகளை அமைப்பது பொருத்தமில்லாத பயனற்ற வேலை. சொல்லாக்கம் என்பது ஒரு தனிக்கலை—ஒரு தனி ஆராய்ச்சி.

2. **சொற் பெருக்கம்:** செய் என்ற வினையை மூன்று காலத்தோடும் ஐம்பால் மூவிடங்களோடும் உறழ்ந்தால்

| | | | |
|---|---|---|---|
| செய்தேன் | செய்கிறேன் | செய்வேன் | |
| செய்தோம் | செய்கிறோம் | செய்வோம் | (நாம்) |
| செய்தோம் | செய்கிறோம் | செய்வோம் | (நாங்கள்) |
| செய்தாய் | செய்கிறாய் | செய்வாய் | |
| செய்தீர் | செய்கிறீர் | செய்வீர் | |
| செய்தீர்கள் | செய்கிறீர்கள் | செய்வீர்கள் | (சிறப்பொருமை) |
| செய்தீர்கள் | செய்கிறீர்கள் | செய்வீர்கள் | (பன்மை) |
| செய்தான் | செய்கிறான் | செய்வான் | |
| செய்தாள் | செய்கிறாள் | செய்வாள் | |
| செய்தார் | செய்கிறார் | செய்வார் | |
| செய்தார்கள் | செய்கிறார்கள் | செய்வார்கள் | |
| செய்தது | செய்கிறது | செய்யும் | |
| செய்தன | செய்கின்றன | செய்யும் | |

என்றிவ்வாறு 39 வினைவடிவங்கள் கிடைக்கின்றன. இப்படி வாய்பாட்டு முறையில் திட்டவட்டமாகச் சொற்கள் உருவாக்கப் படுவதனைச் சொற்பெருக்கம் என்கிறோம்.

சொற்பெருக்கத்தைப்பற்றி எந்த இலக்கணமும் தெளிவாக விளக்கிக் கூறவேண்டும். அடிச்சொற்கள் விகுதிகள், விதிகள் இவற்றின் துணைகொண்டு வாய்பாட்டு முறையில் வரும் சொற்களை நாம் எளிதில் உருவாக்கிக் கொள்ளலாம்.

சொல்லாக்க நெறியில் எழுந்த சொற்களை நாம் அப்படியே கற்றுக் கொள்கிறோம். அந்த மொழியில் ஒருவனுக்கு உள்ள அறிவின் ஆழத்துக்கேற்ப அவன் அச் சொற்களை விளங்கிக் கொள்கிறான். ஆனால் சொற்பெருக்க நெறியில் அமையும்

சொற்களை அவற்றின் ஆழத்தில் உள்ள விதி முறைகளை உணர்ந்து கொண்டு நாமே உருவாக்குகிறோம்.

செய் என்ற வினையடியிலிருந்து சொற்பெருக்க முறையில் எத்துணைச் சொற்களை உருவாக்கலாம் என்று திட்டவட்டமாகக் கூறலாம். இதே அளவு சொற்களை மற்ற எல்லா வினைகளிலிருந்தும் உருவாக்கிக் காட்டலாம். ஆனால் செய் என்ற வினையடியிலிருந்து சொல்லாக்க முறையில் அமைந்துள்ள சொற்களை நாம் அப்படியே கற்றுக்கொள்ளலாமே தவிர விதிமுறைகளை மட்டும் மனத்திற்கொண்டு அவற்றைச் சரியாக உருவாக்க இயலாது. அன்றியும் இதிலிருந்து சொல்லாக்க முறையில் பிறக்கும் அதே அளவு சொற்கள் மற்ற எல்லா வினைகளிலிருந்தும் கிடைக்குமென எதிர்பார்க்க இயலாது. உதாரணமாக நோக்கு என்ற சொல்லில் அம் சேர்ந்து நோக்கம் என்ற சொல் தோன்றியுள்ளது. ஆனால் இதே அம் விகுதி செய் வினையோடு சேர்வதில்லை. மீண்டும் உறுதியாகவும் தெளிவாகவும் சொன்னால், சொல்லாக்க முறையில் அமைந்த சொற்களை நாம் உள்ளது உள்ளபடியே கற்றுக்கொண்டு பிறகு அம் மொழியில் நமக்கு உள்ள வரலாற்றியல் அறிவுக்கேற்ப அவற்றை விளங்கிக் கொள்ளலாமே தவிர, விதிமுறைகளை மட்டும் மனதில் கொண்டு அவற்றை நம்மால் முறையாக உருவாக்க இயலாது. ஆனால் சொற்பெருக்க முறையில் வரும் சொற்களையெல்லாம் முறையாக விதிமுறைகளை மனதிற்கொண்டு உருவாக்கமுடியும். இலக்கணத்தில் சொற்பெருக்க முறையை விளக்குவது மிகவும் இன்றியமையாதது; சொல்லாக்க முறையை விளக்க முயல்வது தெளிவில்லாத—முற்றுப் பெறாத ஒரு முயற்சி.[3]

சொல்லாக்கவியல் என்பதை இலக்கணத்தோடு சேர்க்காமல் ஒரு தனிக் கலையாகக் கொண்டு சொற்கள் எப்படியெல்லாம் தோன்றி வாழ்வுபெறுகின்றன என்று ஆராய்வது மிகவும் வரவேற்கத்தக்கது.

## குறிப்பு

1 இவ்வாறு பொருள் விரிவு பெற்ற பெயர்கள் நம் இலக்கண மரபுப்படி ஆகு பெயர் என்று குறிக்கப்படுகின்றன.

2 (1) முடி 'முடித்தல்'
(2) முடி 'முடிச்சு'
(3) முடி 'தலைமுடி'
(4) முடி 'உச்சி'
(5) முடி 'தலை'
(6) முடி 'தலையில் அணியும் மணிமுடி'

இவற்றில் இடையிலுள்ள நான்கும் மொழியில் மறைந்து போனால் முடித் தலுக்கும் மணிமுடிக்கும் உள்ள பொருள் தொடர்பும் விளங்காமல் போய்விடு மல்லவா? அந்த நிலையில் முடித்தலைக் குறிக்கும் முடியும் மணிமுடியைக் குறிக்கும் முடியும் உருவொத்த வேறு சொற்களாக ஆய்விடும்.

3 சொல்லாக்க முறைகளை விளக்க விதிகளை அமைத்துக்காட்டுவது இயலாத காரியமல்ல, அப்படி அமைக்கப் பெறும் விதிகள், மனித நினைவாற்றலின் எல்லைக்கு உட்படாதனவாகவும் சிக்கல் நிறைந்தனவாகவும் இருக்குமென்று தெரிகிறது.

# 10

# ஆக என்பது ஒரு வேற்றுமையா?

வேற்றுமை என்றவுடனே நமக்குப் பழகிப்போன எட்டு வேற்றுமைகளும் நினைவுக்கு வருகின்றன. வேற்றுமை உருபுகளை நினைக்கும்போது ஐ, ஆல், கு, இன், அது, கண் முதலிய உருபுகளும் உடைய, மேல், கீழ் முதலாய சொல்லுருபுகளும் நம் மனக் கண்முன் வந்து நிற்கின்றன. ஆக என்பது நாம் இலக்கண நூல்களிற் கற்றறிந்த வேற்றுமை உருபுகளிலோ சொல்லுருபுகளிலோ அடக்கப் பெறவில்லை. என்றாலும் இன்று வழங்கும் செந்தமிழில் ஆக என்ற சொல் ஒரு சில குறிப்பிட்ட தொடர்களில் பயின்று வரும் முறை 'ஆக என்பது ஒரு வேற்றுமையா?' என்று வினா எழுப்ப இடமளிக்கிறது.

1. கண்ணன் பாட்டுப் பாடினான்
2. கண்ணன் தான் எழுதிய பாட்டைப் பாடினான்
3. கண்ணன் பேனாவால் எழுதினான்
4. வளவன் வீடு சென்றான்
5. வளவன் வீட்டுக்குச் சென்றான்
6. வளவன் சென்னையில் இருந்தான்

மேற்காணும் தொடரன்கள் அனைத்திலும் வேற்றுமைத் தொடர்களைக் காண்கிறோம். கண்ணன், வளவன் என்ற பெயர்கள் முதல் வேற்றுமையிலும், பாட்டு, பேனா, வீடு, சென்னை என்ற பெயர்கள் முறையே இரண்டு மூன்று, நான்கு, ஏழு ஆகிய வேற்றுமைகளிலும் வந்துள்ளன.

7. கண்ணன் அன்போடு பேசினான்
8. கண்ணன் அன்பாகப் பேசினான்

9. வளவன் கோபத்தில் இருக்கிறன்
10. வளவன் கோபமாக இருக்கிறன்

தொடரன்கள் 7, 8 இரண்டும் ஒரு பொருளன. அவ்வாறே தொடரன் 9, 10 இரண்டும் ஒரு பொருளன. இவற்றில் அன்போடு என்பது மூன்றும் வேற்றுமை என்றும், கோபத்தில் என்பது ஏழாம் வேற்றுமை என்றும் கூறுவது பொதுவாக நம் எல்லோருக்கும் ஒத்த முடிபே. ஆனல் மேற்காட்டிய தொடர்களில் உள்ள ஆக என்பதை மட்டும் நாம் இதுவரை வேற்றுமை என்று கொள்ளவில்லை. வேற்றுமை உருபுகள் செய்யும் அதே பணியைச் செய்கின்ற ஆகவென் கிளவியை வேற்றுமை உருபு என்றே சொல்லுருபு என்றே ஏன் கொள்ளக்கூடாது?

இப்போது எழுந்துள்ள இந்த வினவுக்குத் தெளிவாக விடைகாண வேண்டுமானல் வேற்றுமை என்றல் என்ன என்று நாம் முதலில் விளக்கிக்கொள்ள வேண்டும்.

**வேற்றுமை என்றல் என்ன?** வேற்றுமை என்றல் என்ன என்பதற்கும் இரண்டு வகையாக விடையளிக்கலாம். பெயர்க்குத் தொடரியலிலுள்ள நிலைகளை வேறுபடுத்துவது அல்லது மாற்றுவது வேற்றுமை என்பது ஒரு விடை.[1] இதையே விளக்கமாகக் கூறினல்,

11. கண்ணன் பார்த்தான்

என்ற தொடரிலுள்ள கண்ணன் என்ற பெயர் எழுவாய் நிலையில் உள்ளது. இந்தப் பெயரோடு ஐ உருபைச் சேர்த்தவுடன்

12. கண்ணனைப் பார்த்தான்

என அமையும் தொடரில் கண்ணன் என்ற பெயர் செயப்படு பொருள் நிலைக்கு மாறுகிறது. அதாவது ஐ உருபு கண்ணன் என்ற பெயரை எழுவாய் நிலையிலிருந்து செயப்படுபொருள் நிலைக்கு மாற்றுகிறது. தமிழிலுள்ள உம், ஏ போன்ற கிளவிகள் இப்படிப் பெயருக்குத் தொடரியலில் உள்ள உறவு நிலைகளை மாற்றுவதில்லை.

13. கண்ணன் வந்தான்
14. கண்ணனும் வந்தான்
15. கண்ணனே வந்தான்

தொடரண்கள் 14, 15இல் முறையே உம், ஏ ஆகிய கிளவிகள் சேர்ந்தபோதும் கண்ணன் என்ற பெயர்க்கு உள்ள எழுவாய்

நிலை மாறவில்லை. தமிழிலக்கண அறிஞர்கள் ஐ என் கிளவியை வேற்றுமை உருபில் சேர்த்ததற்கும் உம், ஏ ஆகிய கிளவிகளை வேற்றுமை உருபுகளில் சேர்க்காமல் வேறுபடுத்தியதற்கும் உள்ள இலக்கண அடிப்படை இதுதான் என்று தோன்றுகிறது. இந்த விளக்கம் தமிழிலுள்ள வேற்றுமைகட்கெல்லாம் பொருந்தும்.

இனி இரண்டாவது வகை விடையையும் பார்ப்போம். தொடர்களில் பெயருக்கும் வினைக்கும் உள்ள இலக்கண உறவுகளை வேறுபடுத்திக் காட்டுவது வேற்றுமை என்பது இரண்டாவது வகை விடை.

தொடரியலில் விளக்கப் பெறும் இலக்கண உறவுகள் யாவும் தொடர்புடைய வினையை அடிப்படையாகக்கொண்டே விளக்கப் பெறுகின்றன. இந்தக் கருத்தைச் சற்று விளக்கமாகப் பார்ப்போம்.

16. வளவன் பாண்டியனைப் பார்த்தான்
17. காவலர்கள் மாணவர்களைத் தடியால் தாக்கினார்கள்

தொடரன் 16இல் பார் என்ற வினைக்கு வளவன் எழுவாய் உறவிலும் பாண்டியன் செயப்படுபொருள் உறவிலும் வந்துள்ளன. தொடரன் 17இல் தாக்கு என்ற வினைக்குக் காவலர்கள் எழுவாய் உறவிலும் மாணவர்கள் செயப்படு பொருள் உறவிலும் தடி கருவி உறவிலும் வந்துள்ளன. இவற்றில் எழுவாய், செயப்படுபொருள், கருவி ஆகிய கோட்பாடுகள் வினையை அடிப்படையாகக் கொண்டே எழுந்துள்ளன என்பதும் இவ்வாறு ஒரு தொடரனில் அல்லது தொடரில் உள்ள பெயர்கட்கும் தொடர்புடைய வினைக்கும் உள்ள உறவுகளே வேற்றுமை என்பதும், இந்த உறவுகளை வேறுபடுத்துவனவே வேற்றுமை உருபுகள் என்பதும் இங்குக் கவனிக்கத்தக்க செய்திகள்.

18. புலி யானையைக் கொன்றது
19. யானை புலியைக் கொன்றது

தொடரன் 18இல் கொல் என்ற வினைக்குப் புலி என்ற பெயர் எழுவாய் உறவில் நிற்கிறது. அதே பெயர் தொடரன் 19இல் ஐ என்றஉருபை ஏற்றுச் செயப்படுபொருள் உறவில் நிற்கிறது. கொல் என்ற வினைக்கும் புலி என்ற பெயர்க்கும் தொடரன்கள் 18, 19 இரண்டிலும் உள்ள உறவு நிலை மாற்றங்களை ஐ என்ற உருபுதான் வெளிப்படுத்தி நிற்கிறது. தொடர்களில் பெயருக்கும்

வினைக்கும் உள்ள இலக்கண உறவுகளை வேறுபடுத்திக்காட்டுவது வேற்றுமை என்ற இந்த விடையும் தமிழில் உள்ள வேற்றுமை கட்கெல்லாம் பொருந்தும்.

முதல் விடையில் தொடர்களில் பெயர்கட்கு உள்ள நிலை அல்லது இடத்துக்கு முதன்மை தரப்பட்டது. இரண்டாவது விடையில் தொடர்களில் பெயர்கட்குத் தொடர்புடைய வினையோடு உள்ள இலக்கண உறவுக்கு முதன்மை தரப் பட்டது. பெயர்களின் நிலையும் உறவும் வினையை அடிப்படை யாகக் கொண்டே உறுதி செய்யப்படுகின்றன என்பதும், தொடரியலில் பெயர்களின் நிலையை விளக்குவது பெயர்கட்கும் வினைக்கும் உள்ள உறவை விளக்குவதில் நுண்மையாக அடங்கு மாதலால் இரண்டாவது விடை சிறந்ததாகக் கொள்ளத்தக்க தென்பதும், வேற்றுமையைப் பற்றி நன்கு விளங்கிக் கொள்ள இந்த இருவகை விளக்கங்களும் மிகவும் துணை நிற்பன என்பதும் இங்கு வலியுறுத்த வேண்டிய செய்திகள்.

இந்த விளக்கங்களை மனதுட்கொண்டு ஆக என்பது ஒரு வேற்றுமையா என்று ஆராய்வது பொருத்தம்.

20. அவர் என்னிடம் அன்பாகப் பழகினர்
21. அவர் என்னிடம் அன்போடு பழகினர்

தொடரன் 21இல் ஒடு என்பதன் பணி என்னவோ அதே பணி யைத்தான் தொடரன் 20இல் ஆக என்பதும் கொண்டுள்ளது. அதாவது அன்பு என்ற பெயருக்கும் பழகு என்ற வினைக்கும் உள்ள உறவு நிலையைத்தான் ஆக, ஒடு என்ற இரண்டு கிளவி களும் காட்டி நிற்கின்றன. ஆகவே இந்த இரண்டு கிளவிகளையுமே வேற்றுமைக் கிளவிகளாகக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது.

22. செங்குட்டுவன் அரசனானன்
23. இளங்கோ துறவியாக ஆனர்

தொடரன் 22இல் அரசன் என்ற பெயருக்கும் ஆ என்ற வினைக்கும், ஏனைய இடங்களிலெல்லாம் வினைக்கும் பெயர்க்கும் இலக்கண உறவு இருப்பதுபோல், ஏதோ ஒரு இலக்கண உறவு இருக்கிறது. அந்த இலக்கண உறவைத்தான் தொடரன் 23இல் ஆக என்னும் கிளவி தாங்கி நிற்கிறது. தொடரன் 20இலும் ஆக என்னும் கிளவி பொது வகையால் ஏறத்தாழ இதே உறவு நிலையைத்தான் தாங்கி நிற்கிறதெனலாம். அந்த இலக்கண உறவு என்ன?

ஆக என்னும் கிளவி தாங்கி நிற்கும் இலக்கண உறவு :

24. வளவன் அரசனாக இருக்கிறான்
25. வளவன் கோபமாக இருக்கிறான்
26. வளவன் அன்பாகப் பழகுகிறான்

தொடரன் 24இல் வளவன் இருக்கின்ற நிலை அரசநிலை என்பது உணர்த்தப்பட்டது. தொடரன் 25இல் வளவன் இருக்கின்ற நிலை கோபநிலை என்பது உணர்த்தப்பட்டது. தொடரன் 26இல் வளவன் பழகுகிறநிலை அன்பு நிலை என்பது உணர்த்தப் பட்டது. மேற்கண்ட தொடரன்களில் உள்ள வினைக்கும் அரசன், கோபம், அன்பு முதலிய பெயர்கட்கும் உள்ள இலக்கண உறவினை 'நிலை' என்று சொல்வது பொருத்தம்.

27. வளவன் விட்டில் இருந்தான்
28. பன்றி குழியில் விழுந்தது

தொடரன் 27இல் வளவன் இருந்த இடம் வீடு என்பதும் தொடரன் 28இல் பன்றி விழுந்த இடம் குழி என்பதும் உணர்த்தப்பட்டது. தொடரன் 27, 28இல் உள்ள வினைக்கும் வீடு, குழி ஆகிய பெயர்கட்கும் உள்ள இலக்கண உறவு 'இடம்' என்பது எல்லோர்க்கும் தெரிந்த ஒன்று. இப்படிப்பட்ட இலக்கண உறவுகளைப் 'பொருள்' என்ற சொல்லால் குறித்துச் சென்றனர் நம் இலக்கண ஆசிரியர்கள்.

இல் உருபு இடப்பொருளில் வந்ததுபோல் ஆக என்னும் கிளவி நிலைப்பொருளில் வந்தது எனலாம்.

29. பாண்டியன் காலையில் வந்தான்
30. வளவன் மாலையில் வந்தான்

தொடரன் 29, 30இல் இல் உருபு காலப் பொருளில் வந்தது. காலத்தைத் தமிழிலக்கண அறிஞர்கள் இடத்தில் அடக்கிக் கொண்டனர்.[2] காலப் பொருளை இடப்பொருளில் அடக்கிக் கொண்ட மரபினை ஒட்டி ஆக என்னும் கிளவிக்கு உரிய நிலைப் பொருளையும் இடப் பொருளில் அடக்கிக் கொள்வது மிகவும் பொருத்தம் என்று தோன்றுகிறது. இந்தக் கருத்து ஒப்புக் கொள்ளப்பட்டால் ஆக என்னும் கிளவியைக் கண், கால்... முதலிய சொல்லுருபுகளோடு சேர்த்துக்கொண்டு இதனை ஏழாம் வேற்றுமை என்றே குறிக்கலாம். இல்லையேல் இதனை ஒரு தனி வேற்றுமையாகக் கொள்ளவேண்டும். ஏழாம் வேற்றுமையாகக் கொள்வதே பொருத்தமாகத் தெரிகிறது.

வேற்றுமை என்று கொள்வதற்குத் தடை உண்டா? ஆக என்னும் கிளவியை வேற்றுமை என்று கொள்வதற்குச் சிலதடைகளும் எழும்பக் கூடும். வேற்றுமை உருபுகளையும் சொல்லுருபுகளையும் அம் ஈற்றுப் பெயர்களோடு சேர்க்கும்போது அப் பெயர்கள் அத்துச் சாரியை பெறுகின்றன; ஆக என்னும் கிளவியை அப்பெயர்களோடு சேர்க்கும்போது அவை அத்துச் சாரியை பெறவில்லை. எனவே ஆக என்னும் கிளவி வேற்றுமையல்ல என்று ஒரு தடை எழும்பலாம்.

வேற்றுமை உருபுகளையும் சொல்லுருபுகளையும் சேர்க்கும் போது அம்மீற்றுப் பெயர்கள் அத்துச் சாரியை பெறுவது பெரும்பான்மையே எனினும் காலத்தொடு என்பது காலமொடு என்றும் நலத்துக்குரியார் என்பது நலக்குரியார் என்றும் பழந்தமிழிலேயே சான்றோர்களால் ஆளப்பட்டுள்ளன.[3] அன்றியும் விளிவேற்றுமை ஏற்கும்போது அம்மீற்றுப் பெயர்கள் சாரியை பெறுவதில்லை.[4] எனவே மேற்கண்ட தடை ஆக என்னும் கிளவியை வேற்றுமையிலிருந்து விலக்க இயலாது.

ஆக என்பது ஆ என்ற வினையிலிருந்து பிறந்த செயவென் எச்சம். எனவே ஆக என்னும் கிளவி வேற்றுமையல்ல என்று இன்னொரு தடை எழும்பலாம்.

தொடரன்கள் 24, 25, 26இல் உள்ள அரசனாக, கோபமாக, அன்பாக ஆகிய சொற்களில் காணும் ஆக என்னும் கிளவி வரலாற்றுப் போக்கில் ஆ என்னும் வினையின் செயவென் எச்சமே என்றாலும் ஆ என்னும் வினையோடு தனக்கிருந்த பொருள் தொடர்பை இன்று அறவே இழந்து விட்டது. இன்றைய நிலையில் இந்த ஆக என்னும் கிளவியை ஆ என்னும் வினையினது செயவென் எச்சமாகக் கொள்வது பொருந்தாது. அன்றியும், உடைமைப் பொருளில் வரும் உடைய் என்னும் கிளவியும் நீக்கப் பொருளில் வரும் இருந்து, நின்று என்னும் கிளவிகளும் முறையே உடை, இரு, நில் ஆகிய வினைகளிலிருந்து பிறந்தன எனினும், அவற்றை வேற்றுமைக் கிளவிகளாகக் கொண்டு சொல்லுருபு என ஏற்றுக்கொண்டது தமிழ் இலக்கண மரபு. அவ்வாறே ஆக என்னும் கிளவியையும் வேற்றுமைக் கிளவியாகக் கொண்டு சொல்லுருபாக ஏற்றுக் கொள்வது பொருந்தும்.

மேலும் ஒரு சான்று: மாற்றிலக்கணத் தொடரியல் நெறியில் நம் கருத்துக்கு அரணாக இன்னும் ஒரு சான்று கிடைக்கிறது.

31. கண்ணன் பாடம் படித்தான்
32. கண்ணன் கல்லால் நாயை அடித்தான்
33. கண்ணன் வேகமாக வந்தான்

தொடரன்கள் 31, 32 இரண்டையும்

34. கண்ணன் படித்த பாடம்
35. கண்ணன் நாயை அடித்த கல்

என்று பெயர்த் தொடராக மாற்றலாம். அதே முறையில் தொடரன் 33ஐயும்

36. கண்ணன் வந்த வேகம்

என்று பெயர்த் தொடராக மாற்றலாம். மேற்காட்டிய பெயர்த் தொடர்களில் உள்ள தொடரியல் ஒப்புமை ஆக வென் கிளவி வேற்றுமைக் கிளவியே என்ற கருத்துக்கு அரணாகிறது.

இதுகாறும் கூறியவற்றான் ஆக வென்னும் கிளவி ஒரு வேற்றுமைக் கிளவியாகக் கொள்ளத்தக்கதே என்பதும், அது நிலைப் பொருளில் வரும் என்பதும், அதனை ஏழாம் வேற்றுமையில் அடக்கி அக்கிளவியை ஒரு சொல்லுருபாகக் கொள்வது பொருந்தும் என்பதும் தெளிவு பெறும்.

## குறிப்பு

1 பேராசிரியர் ச. அகத்தியலிங்கனார் அவர்கள் வேற்றுமை பற்றிய ஏனைய விளக்கங்களோடு இதனையும் சேர்த்து வேற்றுமைக்கு விளக்கம் கூறுவர்.

2 காலமாகிய இடம் என்பர் நச்சினார்க்கினியரும். தொல். சொல். நச். 82 உரை பார்க்க.

3 திருக்குறள் 149.

4 டாக்டர் அ. தாமோதரன் அவர்களும் இச் செய்தியைத் தம் கட்டுரை யொன்றில் குறிப்பிட்டுள்ளார். ('விளிப்பெயர் விளக்கம்.' ஆய்வு மலர், கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை, பழைய மாணவர் மன்ற ஆண்டு வெளியீடு, தொகுதி 1.)

# 11

# ஆரும் வேற்றுமை அதுவும் உடையவும்

**1. ஆரும் வேற்றுமையின் தனி இயல்பு:** வேற்றுமை என்பது பெயர்க்கும் வினைக்கும் உள்ள தொடரியல் உறவு. ஆரும் வேற்றுமை தவிர ஏனைய வேற்றுமைகள் யாவும் ஆழ்ந்து நோக்கின் வினைகொண்டு முடியவல்லன என்பது புலனாகும்.' ஆரும் வேற்றுமை மட்டும் பெயர் கொண்டே முடிகிறது. இது இவ்வேற்றுமையின் தனி இயல்பு.

**2.** தொடரியல் நோக்கில் அது, உடைய என்ற இரண்டு கிளவிகளையும் நுணுகி ஆராய்ந்து பார்த்தால் அது என்ற உருபு ஒன்றன் பால் விகுதியிலிருந்து வந்தது என்பதும், உடைய என்ற சொல்லுருபு உடை என்ற வினையிலிருந்து பிறந்த பெயரெச்சத்திலிருந்து வந்தது என்பதும் தெளிவாக விளங்கும்.

**2. 1.** முதலில் அது என்ற உருபை ஆராய்ந்து பார்ப்போம். இம்மோதிரம் எனது என்ற முற்றுத் தொடரைப் பெயர்த் தொடராக்கினால் எனது மோதிரம் என்ற தொடர் கிடைக்கும். கீழ்க்காணும் காட்டுகளை நோக்குக.

(1) இம்மோதிரம் உனது > உனது மோதிரம்
(2) இந்நாடு நமது > நமது நாடு
(3) இக்குதிரை அரசரது > அரசரது குதிரை

மேற்காணும் தொடர்களில் எழுவாய் அஃறிணையாக இருப்பதை நோக்குக. *இந்த மனிதன் எனது என்றோ *இந்த ஆசிரியர் எனது என்றோ தொடர்கள் அமைவதில்லை. எனவே எனது மனிதன், எனது ஆசிரியர் என்பன வழுவாகக் கருதப்பட்டன. இதனால்தான் அது உருபின் பின் உயர்திணைப் பெயர்கள்

யில்லாத வகையில் விதி செய்து செல்கிறார் தொல்காப்பியர்.[2] மேற்காட்டிய தொடர்களில் உள்ள எழுவாய், ஒன்றன்பாலில் இருப்பதும் கவனிக்கத்தக்கது. பலவின்பாலில் எழுவாய் அமைந்தால் பயனிலையிலும் பலவின்பால் விகுதி அமைவது பொதுவான நியதி. அங்கும் ஒன்றன்பால் விகுதியே வருவதும் உண்டு. பலவின்பால் விகுதிபெற்ற பயனிலைகளைப் பற்றியும்காண்போம்,

(4) இம் மனைகள் என > என மனைகள்

(5) இத் தாள்கள் என > என தாள்கள்

பலவின்பால் குறிப்பு வினைமுற்றே பெயரெச்சமாக மாறி என என்று நிற்கிறது. இவ் வழக்கு சிறுபான்மையது. என தாள்கள் எய்பதில் உள்ள அகரம் பலவின்பால் விகுதி. இக் காரணம் பற்றியே ஆறன் உருபைக் குறிப்பிடும்போது நன்னூலார் பன்மைப் பெயர் தொடருமிடத்து அகரம் உருபாம் என்கிறார்[3].

2. 1. 1. யாது, தீது என்பவற்றோடு அது உருபு இயல்பாகச் சேருவதில்லை. முன்னமே யாது, தீது என்பவற்றில் ஒன்றன்பால் விகுதி இருப்பதனால் ஒன்றன்பால் விகுதியாகிய 'அது' அவற்றின்மேல் சேர இயலவில்லை. அது என்பது ஒன்றன்பால் விகுதி என்பதும் அதுவே ஆறன் உருபாகத் திகழ்கிறது என்பதும் இதனாலும் வலுப்பெறும்.

2. 2. இனி உடைய என்பது உடை என்ற வினையிலிருந்து வந்ததுதானா என்று பார்ப்போம். இந்தப் புத்தகம் என்னுடையது என்ற முற்றுத்தொடரைப் பெயர்த்தொடராக்கினால் என்னுடைய புத்தகம் என்ற பெயர்த்தொடர் கிடைக்கும். இந்த முற்றுத் தொடரில் இந்தப் புத்தகம் என்பது எழுவாய் என்பதும் என்னுடையது என்பது பயனிலைஎன்பதும் நாம் எல்லோரும் ஒப்புக் கொள்கின்ற தெளிவான செய்திகள். என்னுடையது என்பதை ஒருசேர வினை என்று கொள்வதா? அல்லது உடையது என்பதை மட்டும் வினை என்று கொள்வதா? உடையது என்பதை மட்டும் வினை என்று கொண்டால் என் என்பது என்ன? இங்குச் சிறிது சிக்கல் எழத்தான் செய்கிறது. காலப்போக்கில் மொழியில் ஏற்பட்டுள்ள சிறு குழப்பத்தை இங்குக் காண முடிகிறது.

2. 2. 1. கீழ்க்காணும் தொடரன்களை நம் ஆய்வோடு தொடர்பு படுத்தி மேலும் ஆராய்ந்து பார்ப்போம்.

(6) இந்தப் புத்தகம் அவர் கொடுத்தது

(7) இந்தப் புத்தகம் அவர் உடையது

இந்த இரண்டு முற்றுத் தொடர்களையும் ஒப்புநோக்குக. முதல் முற்றுத்தொடரிலிருந்து அவர் கொடுத்த புத்தகம் என்ற பெயர்த் தொடரை உருவாக்கலாம். அதே முறையில் அடுத்த முற்றுத் தொடரிலிருந்து அவர் உடைய புத்தகம் என்ற முற்றுத்தொடரை உருவாக்கலாம். காலப்போக்கில் அவர், உடைய என்ற இரண்டு சொற்களுக்கும் இடையில் இருந்த ஒலி இடைவெளி நீங்கிவிடவே அவருடைய என்ற சொல் உருவாகி யிருக்கிறது. சிக்கல் இத்தோடு தீர்ந்து விடவில்லை. என்னுடைய புத்தகம் என்பதற்குப் பதிலாக *நான் உடைய புத்தகம் என்றும் இந்தப் புத்தகம் என்னுடையது என்பதற்குப் பதிலாக *இந்தப் புத்தகம் நான் உடையது என்றும் தமிழில் தொடர்கள் அமைந்திருந்தால் இங்கு நாம் காணும் சிக்கல் எளிதாகத் தீர்ந்துவிடும். என்னுடைய புத்தகம், உன்னுடைய வீடு என வரும் தொடர்களை எப்படி விளக்குவது?

**2. 2. 2.** அருளுடைய அண்ணல், அண்ணலுடைய அருள் என்ற இரண்டு தொடர்களையும் ஒப்புநோக்கிப் பாருங்கள். முதல் தொடர் அண்ணல் அருளுடையர் என்ற முற்றுத் தொடரிலிருந்தும் அடுத்தது அருள் அண்ணலுடையது என்ற முற்றுத் தொடரிலிருந்தும் பிறந்தன என்பது தெளிவாகும். அருளுடையர் என்பதனை மேலும் ஆராய்ந்து பார்த்தால் அது அருளினை உடையர் என்பதன் சுருக்கம் என்பது விளக்கமாகும். எனவே அருளுடைய அண்ணல் என்பது அருளினை உடைய அண்ணல் என்பதன் சுருக்கம். கீழ்க்காணும் தொடர்களை ஆராய்ந்து பாருங்கள்.

(8) அண்ணல் புத்தகம்/ புத்தகத்தைக் கொடுத்தார்—அந்த அண்ணல் ⟶ புத்தகம்/புத்தகத்தைக் கொடுத்த அண்ணல்

(9) அண்ணல் அருள் அருளினை உடையர்—அந்த அண்ணல் ⟶ அருள்/அருளினை உடைய அண்ணல்

(10) அண்ணல் புத்தகம்/புத்தகத்தைக் கொடுத்தார் — அந்தப் புத்தகம் ⟶ அண்ணல் கொடுத்த புத்தகம்

(11) அண்ணல் அருள்/அருளினை உடையர் — அந்த அருள் ⟶ அண்ணல் உடைய அருள்

பெயர்+(ஐ)+உடைய என அமைந்த தொடரும், பெயர்+உடைய என அமைந்த தொடரும் காலப்போக்கில் மயங்கி யிருக்கின்றன. இதனால்தான் அருளுடைய தம்பி என்ற தொடர் இருபொருள் தருகிறது. மேற்காட்டிய மயங்கு நிலையை இந்தத் தொடரில் தெளிவாகக் காணலாம்.

(12) அருளினை உடைய தம்பி —> அருளுடைய தம்பி

(13) அருள் (என்பாரின்) உடைய தம்பி —> அருளுடைய தம்பி

இவை முறையே

(14) தம்பி அருளினை உடையன்
(15) அருள் தம்பியை உடையர்

என்ற தொடர்களிலிருந்து கிடைத்திருக்கின்றன. தென்னாடுடைய சிவன் என்பதும் இவ்வாறே இருபொருள் பயப்பதாம்.

(16) தென்னாடு சிவனை உடையது — சிவன் —> தென்னாடுடைய சிவன்

(17) சிவன் தென்னாடு உடையன் — சிவன் —> தென்னாடுடைய சிவன்

இத்தகைய மயக்கம் ஏற்படக் காரணம் என்ன? (1) உடை என்ற வினை காலங் காட்டவில்லை. ஆனால் இது காலங் காட்டுகிற தெரிநிலை வினைகளில் உள்ள செயப்பாட்டு வினைகளைப் போலச் செயப்படுபொருள் ஏற்கிறது. இந்த வினை ஏனைய வினைகளைப் போலல்லாமல் பெரிதும் மாறுபட்ட இயல் உடையதாக இருக்கிறது. (2) இரண்டாம் வேற்றுமை எங்கெங்கு விரிந்து நிற்கும் எங்கெங்குத் தொக்கு நிற்கும் என்று திட்டவட்டமாக வரையறை செய்ய இயலவில்லை. இதனால் செயப்படு பொருளாக நிற்கும் பெயருக்கும் எழுவாயாக நிற்கும் பெயருக்கும் இடையே உடைமை மயக்கம் ஏற்படுகிறது. தென்னாடுடைய சிவன், அருளுடைய தம்பி என்பன போன்ற தொடர்களில் மேற்கூறிய இரண்டு காரணங்களின் அடிப்படையில்தான் கவர்பொருள் விளைந்திருக்கும் என்று தோன்றுகிறது.

கீழ்க்காணும் தொடரன்கள் நமது கருத்துக்கு அரணாகி மேலும் நம் கருத்தைத் தெளிவு படுத்துகின்றன.

(18) நாடு அரசன் உடையது
(19) பசு பால் தருவது
(20) திருக்குறள் வள்ளுவர் எழுதியது

பால் தருவது என்பது பாலைத் தருவது என்பதன் சுருக்கம். அதாவது பால் தருவது என்பது செயப்படுபொருள்+வினையாலணையும் பெயர். ஆனால் வள்ளுவர் எழுதியது என்பது எழுவாய் + வினையாலணையும் பெயர். இதேபோல் அரசன்

உடையது என்ற தொடரை நோக்கினுல் அது செயப்படு பொருள்+வினையாலணையும் பெயர் என்று கொள்ளவும் இடந் தருகிறது; எழுவாய் + வினையாலணையும் பெயர் என்று கொள்ளவும் இடந் தருகிறது. அதாவது நாடு அரசன் உடையது என்ற முற்றுத்தொடர் நாடு அரசனை உடையது என்றோ அல்லது நாடு அரசனுடையது என்றோ பொருள்படலாம். காலப் போக்கில் பெயர்+(ஐ)+உடைய என்பதும், பெயர்+உடைய என்பதும், மேலே நாம் விளக்கியபடி, தம்முள் மயங்கிவிட்டன. இதன் விளைவாக யான்+உடைய என்பது என்+(ஐ)+உடைய என்று மாறியிருக்கலாம். 'தாமுடைமை'[4] என்ற தொடரும் தென்னுடுடைய என்ற தொடரும் நம் கருத்துக்கு ஒரு வகையில் அரண் செய்கின்றன. 'காடுடைய சுடலை'[5], 'தோடுடைய செவி'[6] என்பனவும் இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

2. 2. 3. பண்புப் பெயர்களின் பின்வரும் உடைய என் கிளவியை உள்ள என்ற சொல்லால் ஈடு செய்யலாம். அதாவது அன்புடைய என்பதில் 'உடைய'வுக்குப் பதிலாக 'உள்ள' என்ற சொல்லை அமைத்தால் அன்புள்ள என்பது கிடைக்கிறது. அண்ணலுடைய என்பதில் இவ்வாறு ஈடு செய்ய இயலாது. இந்த வேறுபாட்டை மையமாகக் கொண்டு உடைய என்ற சொல் இரண்டாகப் பிரிந்திருக்கலாம்.[7] ஒன்று பெய ரெச்சக் கிளவிபோல வினையாற்றவும் இன்னொன்று வேற்றுமை உருபு போலப் பணியாற்றுகிறது.

3. 'அது'வும் 'உடைய'வும் இக்காலத்து ஆறும் வேற்றுமைப் பொருளனவாக இயங்குகின்றன என்பது தெளிவான உண்மை. இவை இரண்டும் வளர்ந்த நெறியை இக் கட்டுரை ஓரளவு தெளிவுபடுத்தும்.

## குறிப்பு

1 எல்லைப் பொருளில் வரும் இன் வேற்றுமையும் அது வேற்றுமையும் பெயர் கொண்டே முடியுமென்றும் நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமை யும் பெயர் அல்லது வினைகொண்டு முடியும் என்றும் ஏனைய வேற்றுமைகள் வினை கொண்டே முடியுமென்றும் கூறுவர் நன்னுலார். (நன் - 318)

ஆறும் வேற்றுமை தவிர ஏனைய வேற்றுமைகள் யாவும் வினை கொண்டு முடிய வல்லன என்பதும் ஆறும் வேற்றுமை மட்டும் பெயர் கொண்டே முடியும் என்பதும் இங்குக் கவனிக்கத்தக்க செய்திகள்.

2 'அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம் வருமே' (தொல்- சொல். 94)

3 நன்னூல் 300.

4 திருக்குறள் 228.

5, 6. திருஞானசம்பந்தர் தேவாரம், பதிகம் 1.

7 (அ) அரசன் படையை உடையான்—அந்தப் படை → அரசன் உடைய படை

(ஆ) படை அரசன் (ஐ) உடையது — அந்தப் படை → அரசன் (ஐ) உடைய படை

(இ) படை அரசன் உடையது — அந்தப் படை → அரசனுடைய படை

இம் மூன்று தொடர்களையும் ஒப்புநோக்கிப் பாருங்கள். மூன்றாவது தொடர் முதல் தொடரின் மறு வடிவமே. முதல் இரு தொடர்களிலும் உடைமை மயக்கம் இருப்பதை நோக்குக. புலி கொன்ற யானை என்பதில் எழுவாய் வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் மயங்குவதுபோல இங்கும் மயங்கி நிற்கிறது. இதன் விளைவாக அன்புடைய தம்பி என்பதிலுள்ள 'உடைய'வும் தம்பியுடைய அன்பு என்பதிலுள்ள 'உடைய'வும் வேறு வேறாகப் பிரிந்தன. முன்னதில் உடைய என்பதை உள்ள என்ற சொல்லால் ஈடு செய்யலாம்: பின்னதில் அது என்ற சொல்லால் ஈடு செய்யலாம். முறை மாறி ஈடு செய்ய இயலாது.

12

# ‘ஏ’ என்ற இடைச்சொல்

1. 1. **சொல்லியலும் பாகுபாடும் :** எழுத்துக்கள் தனித்தும், தொடர்ந்தும் பொருள் தருமாயின் அதனைச் சொல் என்று கூறுகிறோம்.[1] தனித்த எழுத்துக்களே சொல்லாக வருங்கால் அவற்றை ‘ஓரெழுத் தொருமொழி’ என்று தமிழிலக்கணங்கள் கூறுகின்றன. அவை ஆ (பசு), ஈ (ஈ என்னும் உயிரினம்) முதலியன. ஓரெழுத்து ஒரு மொழிகளுள் சிறப்புடையன நாற்பத்திரண்டு என்று நன்னூலார் கணக்கிடுகிறார்.[2] இங்ஙனம் அமையும் ஓரெழுத்தொருமொழிகளுள் ஏகார இடைச் சொல் லுக்கும் ஓர் இடந்தருவதில் தவறில்லை.

தமிழ் மொழியிலுள்ள சொற்களை நம் முன்னோர் நான்கு வகையினவாகப் பிரித்துள்ளனர். அவை பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பன. இந்நால் வகையுள் ‘ஏ’ என்ற சொல் மூன்றாவது வகையில் அடங்கும்.

1. 2. **இடைச்சொல் :** இடைச் சொல்லின் இலக்கணம் கூற வந்த தொல்காப்பியர்

> ‘இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
> நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே’[3]

என்று கூறிச் செல்கிறார். இடைச்சொற்கள் தமக்கென்று ஒரு தனி இயல்பில்லாமல் பெயரோடும் வினையோடும் சேர்ந்தே இயங்கும் எனக் கூறுகிறார். தமக்கென்று ஒரு தனி இயல் பில்லாத இடைச்சொற்கள் தாம் சார்ந்த சார்புக்கும் சூழலுக்கும் ஏற்ப ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களை உணர்த்தும். இவ்வகையிற் பார்த்தால் ‘ஏ’ என்ற சொல் எவ்வெப் பொருளில்

வரும்? இவ்வினவுக்கு விடை காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

**1. 3. தொல்காப்பியர் கூறும் 'ஏ' இடைச்சொல்:** தொல்காப்பியர் காலத்தில் இந்த ஏகார இடைச்சொல் தேற்றம், வினா, பிரிநிலை, எண், ஈற்றசை ஆகிய ஐந்து பொருள்களில் வழங்கப் பெற்றதாகத் தெரிகிறது.

'தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே'

—தொல். இடை. 9

இங்கு ஈற்றசை என்பது கவனிக்கற்பாற்று. ஈற்றசை என்பது ஒரு தனிப்பட்ட பொருளல்ல. இந்த ஏகாரம் பயன்படும் முறைகளில் இதுவும் ஒரு முறை என்றே ஆசிரியர் குறிக்கிறார். ஏகார இடைச் சொல் பயன்படும் முறைகளைக் கணக்கிட்டுத் தெளிவாக 'இவ்வைந்து ஏகாரம்மே' என்று கூறுகின்றார். இந்த நூற்பாவினுள்ளேயே எண்ணேகாரமும் (வினாவே—எண்ணே) ஈற்றசை ஏகாரமும் (...ஏகாரம்மே) அமைந்திருப்பது நன்கு கவனிக்கத்தக்கது.

**1. 4. நன்னூலார் கூறும் ஏ இடைச்சொல்:** நன்னூலார் காலத்தில் ஏகார இடைச்சொல் பயன்பட்ட முறையில் பெரிய மாற்றம் ஒன்றும் ஏற்பட்டுவிட்டதாகத் தெரியவில்லை. எனினும் இசைநிறை என்ற ஒன்றைச் சேர்த்து ஏகாரம் ஆறு என்று கணக்கிடுகிறார்.

'பிரிநிலை வினாஎண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை எனஆறு ஏகா ரம்மே'

—நன்னூல் 423

இங்கும் இசைநிறை என்பது ஏகாரம் பயன்பட்ட முறையே யன்றிப் பொருளல்ல. இசைநிறையாக ஏகாரம் பயன் பட்டது—இசையை நிறைக்க ஏகாரம் பயன்பட்டது. இங்ஙனம் இசைநிறையாகப் பயன்படுவதும், ஈற்றசையாகப் பயன்படுவதும் பெரும்பாலும் செய்யுளில்தான் என்பதை நாம் கருத்திற் கொள்ளவேண்டும்.

**1. 5. இசைநிறையும் ஈற்றசையும்:** ஏகாரம் இசைநிறையாக வரினும் ஈற்றசையாக வரினும் ஒரு சொல்லின் இறுதியில் இயைந்து நிற்குமேயன்றி முதலிலோ இடையிலோ நிற்பதில்லை.

யான்+ஏ>யானே என இறுதியில் நின்றது. இங்ஙனம் இறுதியில் நிற்பதனால் அஃது ஈற்றசை என்ற குறியீட்டைப் பெற்றிருக்கிறது.

இங்ஙனமன்றிச் செய்யுளின் இறுதியில் நிற்பது 'ஈற்றசை' எனக் கூறுவோமானால் செய்யுளின் இடையில் சொல்லில் இறுதியில் நிற்கும் ஏகாரத்தை வேறு குறியீடு தந்து குறிக்க வேண்டும்.

ஏகாரம் எங்கு நிற்பினும் சொல்லின் ஈற்றில் நிற்குமாதலாலும், செய்யுளில் இறுதியில் நிற்கும் ஏகார ஈற்றசைச் சொல்லும், செய்யுளின் இடையிலோ, முதலிலோ நிற்கும் ஏகார ஈற்றசைச் சொல்லும் ஈற்றசையேயன்றிப் பிறிதன்றாதலானும், ஈற்றசை ஒன்றையே இசைநிறை என்று மீண்டும் கூற வேண்டா ஆதலானும் தொல்காப்பியர் ஈற்றசை கூறி இசை நிறையைக் கூறாது விடுத்தார் போலும்.

செய்யுள் ஓசை குறைந்த வழி ஓசை நிறைக்க மட்டுமே வரும் ஏகாரத்துக்குச் சிறப்பிடம் கொடுக்க எண்ணியோ என்னவோ நன்னூலார் இசைநிறையையும் சேர்த்துள்ளார். இசைநிறை ஏகாரமும் சொல்லின் இறுதியில் மட்டுமே நிற்றலான் ஈற்றசை ஏகாரத்துள் அதனை அடக்குவது தவறாகாது.

1. 6. புதியன புகுதலும் வழுவல: "அவனே கொண்டான் என்பது ஒரோவழி அவன் கொள்கிலன் என எதிர்மறைப் பொருள்தரின் அது செம்பொருளன்றி வலிந்து கொள்ளப் படுதலின் 'புதியன புகுதலும் வழுவல' என்பதன்பாற் படுத்துக."[4]

ஏகாரத்துக்கு எதிர்மறைப் பொருள் உண்டெனக் காட்ட வந்த உரைகாரர் "எதிர்மறைப் பொருள் தரின்.........'புதியன புகுதலும் வழுவல' என்பதன்பாற் படுத்துக" என்று கூறிச் செல்கிறார்.

1. 7. இக்காலத்தில் 'ஏ' இடைச்சொல்: இக்காலத்தில் ஏகார இடைச்சொல் பலவகைப் பொருண்மையில் இயங்குகிறது. தொல்காப்பியரும், நன்னூலாரும் கூறிய பிரிவுகளுக்குள் இக்கால ஏகாரத்தை அடக்கிவிட முடியாது. வளர்ந்துவரும் மொழியில் பல்வேறு மாற்றங்கள் ஏற்படுகின்றன. அத்தகைய மாற்றங்களில் இதுவும் ஒன்று.

1. எதிர்மறை
2. கருதல்
3. தேற்றம்
4. விலக்கு
5. மிகை.
6. முற்று
7. புறக்கணிப்பு
8. முடிப்பு
9. யாப்புறவு (கண்டிப்பு)
10. தொடர்ச்சி
11. கவர்ச்சி
12. விருப்பு
13. துணிவு
14. கையறவு
15. எதிர்ப்பு
16. ஒப்புதற் குறிப்பு
17. ஒப்புமை நோக்கு
18. ஒருமை நாட்டம்
19. கழிந்ததற் கிரங்கல்
20. எய்துவதஞ்சல்
21. எடுத்துமொழிதல்

இப்படிப் பல்வேறு பொருண்மையில் இப்போது ஏகார இடைச்சொல் பயன்பட்டு வருகிறது. பின்வரும் எடுத்துக் காட்டுகளால் இவ்வுண்மை தெளிவாகும்.

பேச்சு வழக்கில் உள்ள ஏகாரப் பொருண்மை இன்னும் பலவாக இருக்கலாம். இலக்கிய வழக்கில் அல்லது எழுத்து வழக்கில் உள்ள ஏகாரத்தை மட்டும் இங்குக் காண்போம்.

**1. 8. ஏகார இடைச் சொல்லின் பொருண்மைகள்:** 'ஏ' இடைச்சொல் பயன்படும் முறையை விளக்க இயன்றவரையில் சூழலையும் விளக்கி எடுத்துக்காட்டுகள் தரப்படுகின்றன. இங்குக் குறித்த இருபத்தொன்றிலும் அடங்காத பொருண்மை களும் இருக்கலாம். தெளிவாக விளங்கிய மட்டும் இயன்றவரை வகுத்துப் பெயரிட்டுக் கொடுக்கப்படுகின்றன.

**1. 8. 1. எதிர்மறை:** ஈகையே அறியாத இவறன்மாலையர் ஒருவரைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பவர் இவறன்மாலையரை எண்ணி

'அவர் வாரிவாரிக் கொடுப்பாரே' என்றவழி அவர் சிறிதும் கொடார் என்ற பொருளில் நிற்றலின் எதிர்மறையாயிற்று.

1. 8. 2. கருதல் : நாள்தோறும் காலையில் உங்கள் வீட்டுக்கு வந்து செல்பவர் இன்றும் வருவார் என்று கருதி நண்பர் ஒருவர்.

'அவர் இன்று இங்கு வருவாரே' என்றவழி அவர் எப்போதும் போல் இங்கு இன்றும் வருவார் என்று கருதுவதைக் குறித்து நிற்றலின் இது கருதலாயிற்று.

1. 8. 3. தேற்றம் : பொய் சொல்லாத ஒருவனை நோக்கி 'நீ பொய்தானே சொல்கிறாய்?' என்று கேட்டவழி அவன் பொய் சொல்லவில்லை என்பதை நன்கு உணர்ந்த ஒருவன்,

'இவன் பொய் சொல்லவே இல்லை' என்ற வழி, பொய் சொல்லாமை தேற்றமாதலின் இவ்வேகாரம் தேற்றமாயிற்று.

இந்த நூல் ஐம்பதே பக்கங்கள் என்பன போல்வனவும் தேற்றத்தின்பாற் படும்.

'அவனே கொண்டான் என்பது துணிதற் பொருள்தரின் தேற்றம்' என்றார் நன்னூல் விருத்தியுரைகாரர்.

1. 8. 4. விலக்கு : 'அவரே போகட்டும்' என்ற வழிப் பிறர் போகவேண்டா அவரே போகட்டும் என்று பொருள் பயத்தலின் இது விலக்காயிற்று. அவரே போகட்டும் என்று மற்றவரை விலக்குதல் காண்க.

1. 8. 5. மிகை : 'இதன் பொருள் ஆசிரியர்க்கே தெரியாது' என்றவழி மிகைப்படுத்திக் கூறிய குறிப்புக் காணப்படுதலின் இது மிகை. 'பாம்பைக் கண்டால் படையே நடுங்கும்' என்பதும் அது.

1. 8. 6. முற்று : எல்லோருக்கும் வெறுப்பளிக்கும்படி நடக்கும் ஒருவனை நோக்கி உன் போக்கு ஊருக்கே பிடிக்கவில்லை, என்ற வழி ஊரிலுள்ளார் அனைவரும் உன் போக்கை வெறுக்கிறார்கள் என முற்றுப் பொருள் பயத்தலின் முற்றாயிற்று. வீடே பொலிவிழந்தது என்ற வழி வீடு முற்றும் பொலிவிழந்தது எனப் பொருள்தரின் இதுவும் முற்றாம்.

1. 8. 7. புறக்கணிப்பு : தன் நண்பர் தன்னை விட்டுப் பிரிந்து போவதைப் பற்றிக் கவலைப்படாத ஒருவன் 'அவர்

போனால் போகட்டுமே' என்ற வழி நண்பர் போதல் புறக்கணிக் கப்படுதலின் புறக்கணிப்பாயிற்று.

1. 8. 8. முடிப்பு : தன் குழந்தை கேட்கின்ற ஒன்றைத் தர மறுக்கின்ற தந்தையிடம் 'குழந்தைக்கு நீங்கள் கொடுக்கத்தானே வேண்டும்', என்று பிறர் கூறிய வழி 'நீங்கள் கொடுக்கத்தான் வேண்டும். இது முடிந்த முடிபு' என்பதுபட நிற்றலின் இது முடிப்பாயிற்று.

1. 8. 9. யாப்புறவு (கண்டிப்பு) : புதிய நண்பர் ஒருவரைத் தன் ஊர்க்கு வற்புறுத்தி அழைத்த ஒருவன் தன் தந்தையிடம் 'இவரை வந்தாலே வந்தது என்று பிடித்து அழைத்தபின் இவர் வந்தார்' என்ற வழி ஏகாரம் யாப்புறவுப் பொருண்மைத்து. 'நீங்கள் வந்தாலே வந்தது' என்றவழி கண்டிப்பாக வரவேண்டும் என்பதுபட நிற்றலின் யாப்புறவு.

1. 8. 10. தொடர்ச்சி : தொடர்ந்து வாய்மூடி இருக்கும் ஒருவனை 'இவன் பேசாமலே இருக்கிறான்' என்புழித் தொடர்ச்சிப் பொருண்மை அமைதலின் இது தொடர்ச்சி.

1. 8. 11. கவர்ச்சி : 'இந்தச் சிறு பையன் இவ்வளவு படித் திருக்கிறானே' என்புழித் தன் மனம் சிறுவன் செய்கையால் கவரப்பட்டமை தோன்றலின் இது கவர்ச்சி.

1. 8. 12. விருப்பு: தனது நண்பர் நாடோறும் இரண்டு திருக்குறள் படிக்க வேண்டும் என்று விரும்பும் ஒருவர் 'நீங்கள் நாள்தோறும் இரண்டு குறள் படிக்கலாமே!' என்புழி விருப்பம் வெளிப்படுதலின் இது விருப்பாயிற்று.

1. 8. 13. துணிவு : தன் பகைவனைத் தாக்கித் தோற் கடிக்கத் தயாராகித் துணிந்து நிற்கும் ஒருவன், 'அவன் இப்போது இங்கு வரட்டுமே!' என்புழி ஏகாரம் துணிவுப் பொருண்மை பயத்தலால் இது துணிவு.

1. 8. 14. கையறவு : தனக்கெதிரில் ஒருவர் மரணப் படுக்கையில் இருந்து உயிர் நீங்கும் சமயத்தில் இதைக் கண்டு கையற்ற நிலையில் 'உயிர் போகிறதே' என்புழிக் கையறவு தோன்ற நிற்றலின் இது கையறவு.

1. 8. 15. எதிர்ப்பு : இதைச் செய்வாயா? என்று வேண்டிய ஒருவனிடம், 'முடியவே முடியாது' என்று மற்றவன் கூறியவழி ஏகாரம் எதிர்ப்புணர்ச்சி தோன்ற நிற்றலின் இஃது எதிர்ப்பு.

1. 8. 16. ஒப்புதற் குறிப்பு : அவர்தானே இங்கிருக்கிறார் என்ற வழிக் கேட்கப்பட்டார். 'ஆம்' என்று ஒப்ப வேண்டும் என்ற குறிப்பு இருப்பின் அஃது ஒப்புதற் குறிப்பு.

1. 8. 17. ஒப்புமை நோக்கு: 'இந்தச் சிறுவன் இவ்வளவு படித்தால் பெரியவர் எவ்வளவு படிக்கலாம்!' என்ற கருத்தொடு 'இந்தச் சிறுவனே இவ்வளவு படிக்கிறான்' என்புழி ஏகாரம் ஒப்புமை நோக்கு.

ஐந்து வயதிலேயே இவனுக்கு இவ்வளவு அறிவிருக்கிறது என்பதும் அது.

1. 8. 18. ஒருமை நாட்டம் : குழந்தை விளக்கையே பார்க்கிறது என்றவழி ஏகாரம் ஒருமை நாட்டத்தை நன்கு புலப்படுத்தி நிற்றலின் இங்கு அஃது ஒருமை நாட்டம்.

1. 8. 19. கழிந்ததற் கிரங்கல்: அவர் இந்தப் போட்டியில் தோற்றுப்போய் விட்டாரே; அவர்க்குப் பைத்தியம் பிடித்து விட்டதே; நான் அந்தக் குழந்தையை அடித்துவிட்டேனே—என இவ்வாறு வருவன கழிந்ததற் கிரங்கற் பொருண்மைத்து.

1. 8. 20. எய்துவ தஞ்சல்: மழையில் நனைந்தால் காய்ச்சல் வருமே; நெருப்பைத் தொட்டால் சுட்டுவிடுமே; இரவில் தனியாக விட்டால் குழந்தை பயந்துவிடுமே – என்பன போல்வன எய்துவதஞ்சல்.

1. 8. 21. எடுத்து மொழிதல் : தனக்குத் தெரியும் என்பதை எடுத்துச் சொல்ல எண்ணிய ஒருவன் எனக்கு இது தெரியுமே என்ற வழி அஃது எடுத்து மொழிதல்.

1. 9. ஏகாரமும் தொடரனும் : ஒரு தொடரனில் (Sentence) இரண்டு ஏகாரங்கள் வரக்கூடும். 1. இரண்டு ஏகாரங்கள் இயைந்து வருதல் ஒருவகை. 2. இரண்டு ஏகாரங்களும் வெவ்வேறு சொற்களோடு வருதல் மற்றொரு வகை.

எ. காட்டு : 1. அவர் இங்கேயே இருக்கிறார்
அவர் வீட்டிலேயே இருக்கிறார்
பெட்டி வீட்டுக்குள்ளேயே இருக்கிறது

2. அவர் முன்பே சொன்னாரே
அவர் இங்கே இருக்கிறாரே
அவர் நம்மையே ஏமாற்றிவிட்டாரே

இனி, ஒரு தொடரனில் மூன்று ஏகாரங்கள் வருமா என்று பார்ப்போம். இயைந்து இரண்டு ஏகாரமும் தனித்து ஒரு ஏகாரமும் ஆக மூன்று ஏகாரங்கள் வரவும் கூடும்.

எ. காட்டு: அவர் இங்கேயே இருந்துவிட்டாரே
அவர் வீட்டிலேயே இருக்கிறாரே
அவர்க்குப் போன மாதத்திலேயே
திருமணம் நடந்துவிட்டதே

இக்காலத்துப் பயின்று வரும் செந்தமிழில் மூன்றுக்கு மேற்பட்ட ஏகாரங்கள் ஒரு தொடரனில் வருவதில்லை. தொல்காப்பியரும் நன்னூலாரும் குறித்த எண்ணேகாரம் இக்காலத்து மூன்றேகால், நாலே முக்கால், காலே அரைக்கால் என்பன போன்ற எண்ணுத் தொடர்களில் மட்டுமே பயின்று வருகின்றன. அவர்கள் காலத்தில் ஒரு தொடரன் மூன்றுக்கு மேற்பட்ட ஏகாரங்களைப் பெறுதல் இலக்கண நூலாசிரியர்களால் ஒத்துக்கொள்ளப்பட்டது.

**1. 10. இடைச்சொற்களின் திருப்பணி:** பெயரும் வினையும் பல்வேறு பொருள்களைத் தெளிவுற உணர்த்துதற்கு இடைச் சொற்களே உறுதுணை புரிகின்றன. இடைச் சொற்கள் இல்லையாயின் பெயரும் வினையும் வலியிழந்துபோம்; பெயரும் வினையுமாகிய சொற்கட்கு இடைச் சொற்கள் வண்ணமும் சுண்ணமுமாகப் பயன்பட்டாக வேண்டும்.

கண்ணன், புத்தகம், நான் ஆகிய மூன்று பெயர்களையும் எடு, கொடு ஆகிய இரண்டு வினைகளையும் கொண்டு இடைச் சொற்களின் உதவியை மறுத்து ஒதுக்கிவிட்டால் நாம் கீழ்க் கண்ட தொடரன்களைப் பெற இயலாது.

1. கண்ணன் எனக்குப் புத்தகத்தை எடுத்துக் கொடுத்தான்.
2. நான் கண்ணனுக்குப் புத்தகத்தை எடுத்துக் கொடுத்தேன்.
3. நான் கண்ணனுக்குப் புத்தகத்தைக் கொடுக்க எடுத்தேன்.
4. கண்ணன் எனக்குப் புத்தகத்தைக் கொடுக்க எடுத்தான்.
5. கண்ணன் என்னிடம் புத்தகத்தைக் கொடுக்க எடுத்தான்.
6. நான் கண்ணனிடம் புத்தகத்தைக் கொடுக்க எடுத்தேன்.

7. நான் கண்ணனிடம் புத்தகத்தை எடுத்துக் கொடுத்தேன்.

8. கண்ணன் என்னிடம் புத்தகத்தை எடுத்துக் கொடுத்தான்.

9. நான் கண்ணனிடம் எடுத்த புத்தகத்தை கொடுத்தேன்.

10. நான் கண்ணனிடம் கொடுத்த புத்தகத்தை எடுத்தேன்.

இங்குள்ள பத்துத் தொடரன்களையும், முக்காலத்திலும் முரண முப்பது தொடரன்கள் கிடைக்கும். முப்பதிலும் இறுதியில் ஆ என்ற வினு இடைச் சொல் இயைந்தால் முப்பது வினு கிடைக்கும். எதிர்மறையாக்கினுல் முப்பது எதிர்மறை கிடைக்கும். முன் சொன்ன முப்பது தொடரன்களிலும் உள்ள (30×3) தொண்ணூறு பெயர்களோடும் 'தான்' என்ற இடைச் சொல் சேர்ந்தால் தொண்ணூறு தேற்றத் தொடர்கள் கிடைக்கும். அவற்றை மட்டுமே கணக்கிட்டாலும் நூற்றெண்பது தொடரன்கள் (Sentence) ஆகின்றன. இவற்றையே மேலும் முரண எண்ணற்ற தொடரன்கள் கிடைக்கும்.

இடைச் சொற்களின் திருப்பணிகள் மிகவும் கருத்தில் இருத்தற்பாலன என்பது இப்போது வெள்ளிடைமலை. ஏகார இடைச்சொல் ஒன்றைப்பற்றி மட்டுமே இக் கட்டுரையில் ஒருவாறு நோக்கினேம். இன்னும் காலப்போக்கில் இந்த ஏகாரமே என்னென்ன திருப்பணிகள் செய்ய இருக்கிறதோ! காலப் போக்கில் எல்லாம் தெளிவாக விளங்கும்.

உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் காலத்துக்குக் காலம் மாற்றம் பெறும்போது மொழி மட்டும் இதற்கு விதிவிலக்காகிவிட முடியுமா? வளர்ச்சியும் ஒரு மாற்றந்தானே!

### குறிப்பு

1 நன்னூல் 128
2 நன்னூல் 129
3 தொல்காப்பியம் இடையியல் 1
4 நன்னூல் 422—சிவஞான முனிவர் உரைப் பகுதி

13

# தமிழ் தந்த மண்டலம்

செந்தமிழில் நாம் அடிக்கடிக் கையாளுகின்ற மண்டலம் என்ற சொல் வடமொழியிலிருந்து கடன் கொண்டதோ என்று சிலர் ஐயுறுகின்றனர். இந்தச் சொல்லின் பிறப்பிடம் தமிழ்தான் என்று கருதும் வகையில் கீழ்க்காணும் சொல் தொடர்புகள் அமைந்துள்ளன.

மண்டு, மடு, மடி, மடிப்பு, மண்டி
வடு, வட்டு, வட்டை, வட்டம்

மகரம் வகரமாக மாறுவது தமிழுக்குப் புதுமையல்ல. என்னவோ என்னமோ : வானம், மானம்; தருமோன், தருவோன் என்பன போல வரும் சொற்களை ஒப்புக் காண்க. டகரத்தின் முன் நிற்கும் ணகரம் கெடுவதும் உண்டு. கூண்டு, கூடு; பெண்டு, பேடு, பெடை முதலிய சொற்களை ஒப்புக் காண்க.

மண்டுதலாவது சுற்றி வளைதல் அல்லது சூழ்ந்து கொள்ளுதல். மடுத்தலாவது தடைபட்டு மீளுதல் அல்லது வளைதல். மடித்தலாவது நேராக வளைவின்றி இருப்பதை வளைத்தல். மடிப்பு என்பதும் அது. மண்டி என்பதும் வளைதல் என்றே பொருள்படும். மண்டியிடுதல் என்பதும் ஒருவாற்ருன் வளைதலே யாதல் கருதுக. வடு, வட்டு முதலியன வட்ட வடிவைக் குறிப்பன. வட்டை, வட்டம் என்பன வட்டவடிவைக் குறிப்பன என்பது தெளிவாக வெளிப்படையாக விளங்குகிறது.

பாம்பு மண்டலமிட்டது என்பதன் பொருள் என்ன? பாம்பு வளைந்து வளைந்து தன் உடலால் வட்ட வடிவை அமைக்கிறது. இதனையே நாம் பாம்பு மண்டலமிட்டது என்கிறோம். இங்கும் மண்டலம் என்ற சொல் வளைவு, வட்டம் என்ற பொருளையே குறிக்கிறது. இவ்வாறு வட்டம் வளைவு என்ற பொருள்களில் வழங்கிய சொல்லே நாளடைவில் வட்டமாக உள்ள உலகைக்

குறிக்கலாயிற்று. இந்த அடிப்படையோடு நோக்கின் மண்டலம் என்ற சொல்லின் இயல்பு நன்கு புலனாகிறதல்லவா?

மண்டு—அல்—அம்>மண்டலம்

இச் சொல்லை இவ்வாறு பிரிக்காமல் மண்+தலம் என்று பிரிக்க முயல்வார் சிலர். அது பொருந்தாது. அவ்வாறு பிரிப்பின் வளைவு, வட்டம் என்ற பொருட்கு இடமில்லை. பாம்பு மண்டல மிடுதல் என்பதிலுள்ள மண்டலம் என்ற சொல்லும் விளக்கம் பெறுமற் போய் விடுகிறது. தமிழில் அல், அம் ஆகிய விகுதிகள் சேர்வது பெரு வழக்கு. எனவே மண்டு—அல்—அம்>மண்டலம் என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது. அறிஞர்கள் மேலும் சிந்தித்து முடிவு செய்யட்டும்.

அவ்வாறாயின் உலகு இன்ன வடிவினது என்பது பற்றிய எண்ணம் முன்பே தோன்றியுள்ளது போலும்—என்று கூட எண்ண இடம் ஏற்படும். இதை மட்டும் வைத்துக்கொண்டு நாம் பெருமை பேச இப்போது ஒன்றும் வாய்ப்பில்லை. அறிவியல் உலகில் நாம் குறிப்பிடத்தக்க இடத்தை அடைந்த பிறகு நமது பெரும் வளர்ச்சியை உலகிற்குக் கண்முன் காட்டி அதன் பிறகு சொன்னால்தான் இத்தகைய பேச்சுகட்கு உரிய பொருளும் மதிப்பும் ஏற்படும். ஏதோ நமக்குள் இவற்றைச் சொல்லிக்கொண்டால் போதும் என்று சோம்பிவிடுவதில் பயனில்லை.

நமது கடந்தகால வரலாறு எதிர்காலப் பெருவாழ்வுக்கும் அருஞ் செயலுக்கும் துணையாக வேண்டும். நமது உள்ளத்துக்கு அந்த வரலாறு நல்ல உறுதியும் ஊக்கமும் நல்க வேண்டும்.

# 14

# திரும்பி வந்த கமலம்

கமலம் என்ற இந்தச் சொல்லின் வரலாறு நமக்கு ஒரு வகையில் வியப்பூட்டுவதாகவே உள்ளது. குவளை என்ற தமிழ்ச் சொல் கமலம் என்ற சொல்லோடு மிகத் தொடர்புடையது. குவளை என்பது வடமொழி யுலகுக்குப் போய்க் கமலம் என்ற உருவில் திரும்பி வந்துள்ளது.

தமிழ் : குவளை, மலையாளம் : குவள
கன்னடம் : கோமளெ, தெலுங்கு : கலவ

குவளை என்ற சொல் திராவிட மொழிகளில் அவ்வம் மொழிக் கேற்பச் சில திரிபுகளை ஏற்று நிற்கிறது. சமஸ்கிருத மொழியில் உள்ள குவல—கோமள—கமல முதலிய சொற்கள், திராவிட மொழியில் உள்ள குவளையோடு தொடர்புடையனவாகக் காணப்படுகின்றன. குவளை என்ற சொல்லே படிப்படியாகக் கோமள—என்றும், கமல என்றும் உருமாறியுள்ளது.

தமிழ் : குவளை, வடமொழி : குவல
தமிழ் : கொவளை, வடமொழி : கோமள

தமிழில் மொழிமுன் நிற்கும் உகர உயிர் அதனை அடுத்து அகரம் தொடரும்போது ஒகரமாக மாறுவது உண்டு. இதில் உகரம் முந்தியதா ஒகரம் முந்தியதா என்ற கேள்வி இப்போது நமக்கு வேண்டாம். உகர ஒகர மயக்கம் இவ் வுயிர்களை அகரம் தொடரும் போதுதான் (ஒற்றிரட்டல் நீக்கி) ஏற்படும் என்பதோடு அமைந்து மேலே தொடர்வோம்.

உ>ஒ ஒப்பு நோக்கு
உரல்>ஒரல், உலகம்>ஒலகம்

உதவி > ஒதவி, குணம் > கொணம்
குளம் > கொளம்

அடுத்து வகரம் மகரமாக மாறியிருக்கிறது. வகரத்தில் மூக்கொலி சேர்ந்தால் மகரம் : மகரத்தின் மூக்கொலி நீங்கினால் வகரம்.

குவளை > கொவளை > கொமளை

தமிழில் உள்ள இறுதி ஐகாரத்திற்கு ஒப்பு நிலையில் வடமொழியில் அகரம் அல்லது ஆகாரம் நிற்கும். எனவே கொமளை என்பது கொமள என மாறுகிறது.

வடமொழியில் ஒகர, ஓகார வேற்றுமையில்லை. ஒகரக் குறில் இல்லை என்றும் கூறலாம். ஆகவே கொமள என்பது கோமள என மாறுகிறது.

குவளை > கொவளை > கொமளை > கொமள
கொமள > கோமள

வடமொழியாளர் தமிழ் ஒகரத்தைத் தமது வழக்கில் ஓகாரமாகவும் சிறுபான்மை அகரமாகவும் வழங்குவர். எனவே கொமள என்பது கோமள என வழங்குவதோடு கமள என்றும் மாறுகிறது.

வடமொழியில் ளகர லகரம் பொருள் வேற்றுமை செய்வதில்லை. அதாவது ஒரு சொல்லில் ளகரத்துக்குப் பதிலாக லகரத்தை ஒலித்தாலும் வடமொழியில் பொருள் மாறுவதில்லை. எனவே கமள என்பதைக் கமல என்று ஒலித்திருக்கின்றனர். இந்த நிலைக்குப் பிறகு கமல என்ற சொல் தமிழுலகத்துக்குத் திரும்பி வந்து கமலம் என்ற உருவில் வாழ்கிறது. குவளைப் பூவைக் குறித்த, இந்தச் சொல் உருமாற்றம் பெற்றதோடு நில்லாமல், பொருள் மாற்றமும் பெற்றுத் திரும்பியிருக்கிறது.

ஒரு குறிப்பிட்ட எல்லைக்குமேல் உருவில் மாற்றம் ஏற்பட்டால் இயல்பிலும் மாற்றம் ஏற்பட்டே தீரும்—இந்த விதிப்படியே கமலம் என்ற சொல் இயல்பு மாறித் தாமரையைக் குறிக்கிறது.

குவளை > கொவளை > கொமளை > கொமள

கொமள —┬— கோமள
        └— கமள > கமல

குவளை குவள > குவல

(கீழ்க் கோடிட்டுள்ள கோமள, கமல, குவல முதலிய சொற்கள் வடமொழியில் காணப்பெறுவன. ஏனைய இடைநிலை மாற்றங்கள் நாம் கருதிக் காண்பன.)

கமலம் என்ற சொல் வடமொழியிலிருந்து வருகை புரிந்த தென்பதோடு அது இங்கிருந்துதான் அங்குப் போய் உலவிவிட்டு உருவிலும் இயல்பிலும் மாற்றம் பெற்று இங்குத் திரும்பி வந்திருக்கிறது என்பதும் காண்க. பிறந்த இடந்தேடிப் பெருமையுடன் திரும்பி வந்த இந்தச் சொற் செல்வத்தை இனியாவது நாம் நன்கு அடையாளம் கண்டுகொண்டு வருக வருக என வரவேற்றுப் பாராட்டுவோம்.

கமலம் இனி நமக்குச் சொந்தமா அயலா என்ற மயக்கமே வேண்டாம். வெளிநாட்டுக்குப் போய்த் திரும்பி வரும் உறவினரை நாம் எவ்வளவு ஆவலுடன் வரவேற்று மகிழ்கிறோம். அதுபோல வடமொழி உலகுக்குப் போய்த் திரும்பி வந்த தமிழ்ச் செல்வத்தை வரவேற்றுச் சிறப்பித்து மகிழ்வோம்.

## 15

# மொழியியல்

அறிவை வளர்த்துக் கொள்ளவும் நாம் அறிந்ததைப் பிறர்க்கு அறிவிக்கவும் தலைசிறந்த கருவியாக நிற்பது மொழி. இன்று மக்கள் எய்தியிருக்கும் வியத்தகு முன்னேற்றங்களுக்கெல்லாம் மொழி நேரடியாகவோ மறைமுகமாகவோ பேருதவி செய்திருக்கிறது. நமது முன்னோர்கள் விட்டுச் சென்றுள்ள அறிவுக் கருவூலங்களை நாம் கண்டுணர்ந்து துய்ப்பதற்கும் நாம் இன்று பெற்றுள்ள அறிவுச் செல்வத்தை நமது வழித் தோன்றல்களுக்கு வழங்குவதற்கும் மொழிதான் பெருந்துணையாக நிற்கிறது. அருகிலுள்ளவர்க்கும், ஆயிரங்கல் தொலைவிற்கு அப்பால் உள்ளவர்க்கும் நமது எண்ணத்தை வெளிப்படுத்தி உணர்த்த மொழிதான் முன்னின்று பணி புரிகிறது. நமக்கு முன்பு வாழ்ந்த முன்னோர்களின் நெஞ்சங்களையும், நம்மோடு உடன் வாழும் நெஞ்சங்களையும், இணைக்கும் ஆற்றல் பெற்றது மொழி ஒன்றுதான் என்பது மிகையாகாது. காலத்தையும் இடத்தையும் வென்று, எண்ணத்துக்கும் செயலுக்கும் இடையில் நின்று, மக்களுக்கு உற்ற துணையாகிப் பெரும்பணி புரிகிறது மொழி. ஒரு இனத்தின் அறிவும், பண்பாடும், கலையும், நாகரிகமும் அந்த இனத்தின் மொழியில் பொதிந்து கிடக்கும். இனத்துக்கு இனம் நாட்டுக்கு நாடு மொழியின் சொல்லமைப்பும், ஒலியமைப்பும், தொடரமைப்பும் மாறுபட்டு நிற்கின்றன. இந்த மாற்றங்களின் அடிப்படையில்தான் மொழிகள் நமக்கு வெவ்வேருகக் காட்சியளிக்கின்றன.

உலகில் மிகத் தொன்மைவாய்ந்த மிகச் சில மொழிகளுள் தமிழ் ஒன்று. தொன்மையான மொழிகள் சிலவற்றுள்ளும் அம்மொழிகளைப் பேசுவாரின்மையால் வழக்கிழந்தன ஒரு சில. காலப்போக்கில் தோன்றும் புதுமைகட்கும், மாற்றங்கட்கும், ஈடு கொடுக்க இயலாமற் சிறப்பிழந்தன ஒரு சில. இந்நிலையில் தமிழ்

மொழி மிகத் தொன்மையானதாகவும் வழக்குவன்மையுடைய தாகவும் சிறப்பு குன்றாததாகவும் இருப்பது உண்மையிலேயே நமக்குப் பெருமைதான்.

இன்று உலக அரங்கில் தலைதூக்கி நின்று பீடுநடை போடும் மொழிகள் இலக்கணம் இலக்கியம் என்பவற்றைப் பற்றி எண்ணிப் பாராத காலத்திலேயே, தமிழ்மொழி தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களையும் பல இலக்கியங்களையும் பெற்றிருந்த தென்பது இன்னும் மகிழ்ச்சிக்குரிய செய்தி யாகும்.

இலக்கணம் என்பது மொழியை மொழியால் விளக்குகின்ற ஓர் அரிய கலை. படிமக்கலை, இசை, நடனம், பொறியியல், அறிவியல் ஆகிய இவற்றையெல்லாம் மொழியால்—சொல்லால் விளக்குகிறோம். மொழி வேறு; அந்தப் படிப்புகள் வேறு. மொழியால் மொழிக்குப் புறத்து நிற்பவற்றை விளக்கலாம். ஆனால் மொழியையே விளக்கவேண்டுமாயின் என் செய்வது? வேறு வழியில்லை. மொழியையும் மொழியால்தான் விளக்க வேண்டும். மொழியை மொழியால் விளக்குகின்ற இந்தப் பணியின் இன்றியமையாத பகுதிதான் இலக்கணம் என்பதும். இந்தப் பணியை ஏறத்தாழ இரண்டாயிரத்தைந்நூறாண்டுகட்கு முன்பே தொல்காப்பியப் பெருந்தகையார் செம்மையாகச் செய்திருக்கிறார் என்பதும், நம் எதிர்காலம் பற்றி நமக்கு நம்பிக்கையும் தெளிவும் வழங்கி ஊக்கமளிக்கிறது.

மிகப் பழங்காலத்தில் எத்தனையோ இடர்ப்பாடுகட்கிடையில் அவர் செய்துள்ள பணியை நோக்கின் அத்துறையில் அவருக்குப் பின் இந்த நீண்ட நெடுங்கால இடைவெளியில் நாம் அடைந்துள்ள முன்னேற்றம் மிகச் சிறியதும் நாம் வெட்கப்படக் கூடியதும் ஆம். நமது பழைய இலக்கண மரபு நன்கு திறம்பட வளர்ந்திருந்தால் நாம் இத்துறையில் உலகுக்கே வழிகாட்டியாக நின்றிருப்போம். மிகப்பல காரணங்களால் நமது வளர்ச்சி தடைப்பட்டுக் கிடந்திருக்கிறது.

முற்காலப் பெருமையும் சிறப்பும் நமக்கு ஊக்கமளித்து எதிர்கால ஆக்கப்பணிகட்கு உதவவேண்டும். இலக்கணப் பகுதியோடு நில்லாமல் பல்வேறு வகையிலும் மொழியைப் பற்றிய உண்மைகளைக் காண வழிவகுப்பதுதான் மொழியியல்.

அறிவியல் வளர வளர எல்லாத் துறையிலும் புதிய பொலிவும் மாற்றமும் ஏற்பட்டுக்கொண்டே வருகிறது. இந்த நூற்றாண்டில் மொழியை எளிதில் கற்றுக் கொள்ளவும் கற்றுக் கொடுக்கவும் தகுந்த வழிவகை வேண்டுமென்பதை உலகமே

உணரத் தொடங்கியுள்ளது. மக்களின் எண்ணத்துக்கும் செயலுக்கும் இடையில் நின்று வாழ்விலேயே மிக இன்றி யமையாத பகுதியாகத் திகழ்கின்ற மொழியினைப் பற்றி இக்கால அறிஞர்கள் மிகுந்த அக்கறை காட்டி வருகின்றனர். உளவியல், விலங்கியல், பொறியியல், கணக்கியல் முதலிய பல்வேறு துறையில் உள்ள அறிஞர் பெருமக்களும் மொழி யியலோடு தங்களுக்கு உள்ள தொடர்பினைக் கண்டு அவ்வப் பகுதிகளில் அக்கரைகாட்டி வருவதால் மொழியியற்கலை நன்கு செழிப்புற்று வளர்கிறது.

அகவுலகில் நமக்கு எவ்வளவோ கற்பனைகள் தோன்றலாம்; புறவுலகில் அவற்றை அப்படியே காண இயலாது. ஆனால் மொழியுலகில் அகவுலகும் புறவுலகும் இணைந்து நிற்கிற தென்னலாம். அகவுலகக் கற்பனைகளையும் வெளியுலக உண்மைக் காட்சிகளையும் மொழியுலகில் நன்கு காணமுடியும். மொழியுலகில் நாம் கண்டறிந்து இயற்ற வேண்டிய பணிகள் ஏராளமாகவுள்ளன. இவ் வகையில் நமக்குள்ள சிறந்த மரபினையும் பயன்படுத்திக் கொண்டு மொழியியல் துறையில் விரைந்து மேற்செல்வது இன்று நமக்குள்ள இன்றியமையாத பணிகளுள் ஒன்று.

நான் ஒரு பெண்ணைக் காணுகின்றேன். அவளுடைய முகக்குறிப்பு கண்டு என்னிடம் ஏதோ பேச நினைப்பதாக எண்ணி நான் அவளிடம் பேசுகிறேன். மறுமொழி இல்லை. மீண்டும் பல்வேறு முகக்குறிப்பும் உறுப்பு அசைவுகளுமே வெளிப்படக் காண்கிறேன். நெடுநேரம் முயன்றும் அவள் பேசவில்லை; நான் பேசியதை அவள் கேட்டதாகவும் தெரிய வில்லை. நீண்ட மனக்குழப்பத்துக்குப் பின்புதான் அவள் ஒரு ஊமைச் செவிடு என்று தெரிந்து கொண்டேன். அவளால் பேசவும் முடியாது; நான் பேசுவதைக் கேட்கவும் முடியாது. எங்கள் இருவருக்கும் இடையே கருத்துப் பரிமாற்றம் நிறைவு பெறவில்லை. அவளுடன் அருகிலிருந்த இளைஞன் ஒருவனை நோக்கி அவனிடம் பேசுகிறேன். அவனுக்கு நான் பேசுவது புரியவில்லை. நான் பேசி நிறுத்தியவுடன் அவனும் பேசுகிறான். ஆனால் அவன் பேசியது ஒன்றும் எனக்குப் புரியவில்லை. அவன் பேசுகிற மொழி எனக்குத் தெரியாது; நான் பேசுகிற மொழியும் அவனுக்குத் தெரியாது. நான் அந்தச் செவிட்டு ஊமைப் பெண்ணிடம் கருத்துப் பரிமாற்றத்தில் எந்த அளவு தோல்வி கண்டேனே அதே அளவு அந்த இளைஞனிடமும் தோல்வி காணுகிறேன். அந்த இளைஞனுக்கும் பேசத் தெரியும். எனக்கும் பேசத் தெரியும். இருப்பினும் பயனில்லை. முயன்றால்

அந்த இளைஞனும் நானும் ஒருவரையொருவர் புரிந்து கொள்ளலாம். அவன் என் மொழியைப் படித்துத் தெரிந்து கொள்ளவேண்டும்; அல்லது நான் அவன் மொழியைப் படித்துத் தெரிந்து கொள்ளவேண்டும்; அல்லது, இரண்டு மொழியும் தெரிந்த ஒரு நண்பரின் துணையை நாங்கள் நாட வேண்டும். என் கருத்தைப் பிறர்க்கு உணர்த்துவதும், பிறர் கருத்தை நான் உணர்வதும் என் வாழ்வில் மிகமிக இன்றியமையாத பணிகள். இப்படி உணர்த்தவும் உணரவும் மொழிதான் தலைசிறந்த கருவியாகப் பயன்பட்டு வருகிறது. மேற்காட்டியது போல் சில சூழல்களில் மொழி என்ற கருவியை ஆள்வதில் இடர்ப்பாடு வந்து விடுகிறது. இந்த இடர்ப்பாட்டைக் கடந்து சென்றால்தான் ஒருவர் தம் உள்ளக்கிடக்கையை உலகுக்குத் தெரிவிக்க இயலும். உலக மக்களின் உடன்பாட்டையும் மறுப்பையும் ஒருவர் தெரிந்து கொள்ளவும் இயலும். அறிவியல் வளர வளரச் சேய்மை அண்மையாகிறது. உலகம் சுருங்குகிறது. உலகில் ஒரு கோடியில் நிகழும் நிகழ்ச்சி அற்றைப் பொழுதுக்குள் உலகெங்கும் தெரிந்துவிடுகிறது. செயலின் விரைவு மிகுந்து கொண்டே போகிறது; நேரம் குறைந்து கொண்டே போகிறது. தமிழகத்தில் தென் கோடியில் வாழும் மூதாட்டி ஒருத்தியின் பேரன் வட கோடியில் படை மறவனாக நிற்கிறான். அவளுடைய மூத்தமகன் அமெரிக்காவிலும், மகளும் மருமகனும் உருசியாவிலும் இருக்கிறார்கள். இந்த மூதாட்டியின் வீட்டில் செந்தமிழில் மழலை பொழிந்த மக்கள் இன்று பல்வேறு மொழிகளில் புலமை பெற்று, பல்வேறு மொழியாளர்களுடன் பழகித் தெரிந்தவற்றைக் கற்றுக்கொடுக்கிறார்கள். தமக்குத் தெரியாதவற்றைக் கற்றுக்கொள்கிறார்கள். உலகம் இந்தப் போக்கில் மிக விரைவாக இயங்கிக் கொண்டிருக்கும் போது இனி எந்த நாடும், எந்த இனமும் ஒரே ஒரு மொழி மட்டும் எமக்குப் போதும் என்று அமைதி காணமுடியாது. அறிவியல் நெறியில் முன்னேறி நிற்கின்ற ஆங்கிலம், பிரஞ்சு, செர்மன், உருசியம் போன்ற மொழிகளின் துணையைப் பிறமொழிகள் நாட வேண்டியிருக்கிறது. இன்னும் சொல்லப் போனால் அறிவியல் நெறியில் முன்னேறியுள்ள ஆங்கிலம், பிரஞ்சு போன்ற அந்த மொழிகளே தம்முள் ஒன்றையொன்று நாடித் திண்மை பெற்று வளர்கின்றன. எனவே இந்த நூற்றாண்டில் மொழியைக் கற்றுக்கொள்வதும் கற்றுக் கொடுப்பதும் தவிர்க்க முடியாத பணிகளாகி விட்டன.

குறைந்த நேரத்தில் நிறைந்த வேலைகளைச் செய்து காட்டியும் இதுவரை நடக்காத பணிகளை நடத்திக் காட்டியும் வெற்றிப்

பெருமிதத்தோடு விரைந்து செல்கிறது அறிவியல். அந்த விரைவுக்கேற்ப, புது உலகப் போக்குக்கேற்ப மொழியைக் கற்றுக் கொள்வதற்கும் கற்றுக் கொடுப்பதற்கும் தகுந்த செம்மையான புதிய வழிமுறை ஒன்று இன்றைய உலகுக்கு வேண்டுமன்றோ? அத்தகைய வழி முறையைக் கண்டு வழங்குவதும் மொழியியலின் சிரிய நோக்கங்களுள் ஒன்று.

அறிவியலினால் ஏற்பட்ட நலங்களும் பயன்பாடுகளும் பெருஞ்செல்வர்களுக்குக் கிட்டுகின்ற அளவுக்கு ஏழைக் குடிமகனுக்குக் கிட்டுவதில்லை. பெருஞ் செல்வருக்கு உடலிற் கோளாறு ஏற்பட்டால் உடலிற் பழுதுபட்ட உறுப்பையே மாற்றி அவருக்கு அறிவியல் திறன் புதுவாழ்வு கொடுக்கும். ஆனால் ஏதுமில்லாத குடிமகன் தனக்கு வரும் தலைவலியையும் காய்ச்சலையும் கூடத் தடுத்துக் கொள்ள முடியாமல் அல்லல் படுகிறான். சில வேளைகளில் உயிரையும் விடுகிறான். இந்த ஏற்றத் தாழ்வுகளை அறவே நீக்கமுடியாமற் போனாலும் ஓரளவு ஏற்றத்தாழ்வின் இடைவெளியைக் குறைக்கவாவது வேண்டும். ஒருவனுக்குப் பல மொழியிலுள்ள பல நூல்களைப் படித்தறிய வாய்ப்பு இருக்கிறதென்று கொள்வோம். இந்த வாய்ப்பு எல்லோருக்கும் கிட்டுமா? மிக மிகச் சிலருக்குத்தானே கிட்டும். பல மொழியிலுள்ள பல நூல்களின் கருத்துக்களை அறிந்து கொள்வோரின் தொகை பெருக வேண்டுமானால் மொழி பெயர்ப்புக் கலை வளர்ந்தாக வேண்டும். ஆங்கிலம் படிக்காத தமிழ் மகனுக்கும் சிறந்த ஆங்கில நூல்களின் கருத்துக்கள் தெரிய வேண்டுமானால் அவற்றைத் தமிழில் மொழி பெயர்த்தாக வேண்டும். சிறந்த தமிழ் நூல்களின் கருத்துக்கள் தமிழ் தெரியாத உள்ளங்களையும் தொட வேண்டுமானால் அவற்றையும் பிறமொழிகளில் மொழி பெயர்த்தாக வேண்டும். தமிழில் எழுதப்பட்டுள்ள ஒரு செய்யுளுக்கே பல்வேறு உரைகளும், தடை விடைகளும் ஏற்படுவதைக் காண்கிறோம். ஒரு மொழியிலுள்ளதை இன்னொரு மொழியில் வெளிப்படுத்தும்போது எத்தனையோ இடர்ப்பாடுகளும் குறைபாடுகளும் இருக்கும் என்பது கூறாமலே விளங்கும். இத்தகைய இடர்ப்பாடுகளையெல்லாம் களைந்து முதல் நூலில் உள்ள கருத்தையே மொழி பெயர்ப்பு நூலில் வெளிப்படுத்த வேண்டும். இந்த நோக்கில் கிடைக்கும் வெற்றிதான் மொழிபெயர்ப்புக் கலையின் வெற்றி. இத்தகைய மொழிபெயர்ப்புக் கலைக்கும் பெருந்துணை செய்து உரமூட்டி நிற்கிறது மொழியியல்.

மொழியியல் தோன்றாத போதே மொழியை மக்கள் கற்க வில்லையா? கற்பிக்கவில்லையா? மொழியியல் தோன்றாதபோதே

உலகில் மொழி பெயர்ப்புப் பணியே நடக்கவில்லையா? என்றெல்லாம் சில உள்ளங்களில் வினாக்கள் எழலாம். இல்லை யென்று எந்த மொழியியலாளனும் கூறமாட்டான். இன்னும் தெளிவாகச் சொன்னால் மொழியைக் கற்பதும் கற்பிப்பதும் மொழிபெயர்ப்பதும் முன்பே இருந்ததால்தான் இந்த மொழி யியற்கலையே அரும்பி மலர்ந்து செழித்து நிற்கிறதென்று கூறவேண்டும். புகை வண்டியும் பேருந்தும் இல்லாத காலத்தி லேயே மக்கள் காவிரியிலிருந்து கங்கைக்கும், கங்கையிலிருந்து காவிரிக்கும் போயிருக்கிறார்கள்—வந்திருக்கிறார்கள். இப்போதும் போகிறார்கள்; வருகிறார்கள். ஆனால் முறைதான் வேறு. மொழி யியலின் பயன்பாட்டுக்கும் இத்தகைய விளக்கந்தான் கூறவேண்டியுள்ளது. மொழியியற்கலை என்றும் எங்கும் நடக்காத ஒன்றை நடத்திவைக்கும் வியத்தகு கருவியன்று. குறைந்த நேரத்தில் குறைந்த உழைப்பில் நிறைந்த வேலையையும் நிறைந்த பயனையும் பெற நமக்கு அறிவியல் துணை நிற்பதுபோல் மொழியியலும் மொழியைப் பொறுத்தமட்டில் துணை நிற்கிறது என்பது மட்டும் நடைமுறையில் காணும் உண்மை.

நாம் பெற்ற அறிவையெல்லாம் வெளிப்படுத்த உதவுவது மொழி. அந்த மொழியைப்பற்றிய எல்லா உண்மைகளையும் கண்டறிந்து வழங்கிப் பல்வேறு பயன் விளைத்து நிற்கிறது மொழியியல்.

நல்லவர், கெட்டவர், வலியவர், எளியவர், கற்றவர் கல்லாதவர் ஆகிய எல்லோரும் மொழியைப் பயன்படுத்து கிறார்கள். அவர்கள் தத்தம் குறிக்கோளுக்காக மொழியையும் ஒரு கருவியாக்கி ஆளுகிறார்கள். அரசியலாளன் மொழியைப் பயன்படுத்துகிறான். அவன் பயன்படுத்துவது அரசியலுக் காகவேயன்றி மொழிக்காக அன்று. வணிகன் மொழியைப் பயன்படுத்துகிறான். அது வணிகத் தொழிலுக்காகவேயன்றி மொழிக்காக அன்று. இலக்கியப் புலவன் மொழியைப் பயன் படுத்துகிறான். அவன் மொழியைப் பயன்படுத்துவது இலக்கியத் துக்காகவே அன்றி மொழியைப் பற்றிய உண்மைகளை அறிந்து கொள்வதற்காகவன்று. நாம் எல்லோரும் மொழியைப் பயன் படுத்துகிறோம்; நம்முடைய பல்வேறு நோக்கங்களை அடைவதற் காக மொழியையும் ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறோம்; அதற்காகத்தான் மொழியைக் கற்றுக் கொள்கிறோம். கற்றுக் கொடுக்கிறோம். ஆனால்......மொழியியலாளன் மொழியைப் பற்றிய உண்மைகளை யெல்லாம் தெரிந்து கொள்வதற்காகவும் அந்த உண்மைகளைத் தெரிவிப்பதற்காகவுமே மொழியைப் பயன்

படுத்துகிருன்; கற்றுக் கொள்கிருன்; கையாள்கிருன். மொழியியலாளனைத் தவிர ஏனையோர் மொழியைப் பயன்படுத்தும் போது அவர்களுடைய நோக்கம் அல்லது நோக்கங்கள் மொழிக்கு புறத்தே இருக்கும். மொழியியலாளன் மொழியைப் பயன் படுத்தும்போது அவனுடைய நோக்கமெல்லாம் மொழிக்கு அகத்தே இருக்கும். தமது பல்வேறு நோக்கங்களுக்காக உலக மக்கள் எல்லோரும் பயன்படுத்துகின்ற ஒப்பற்ற அந்தக் கருவியை—மக்களின் உயிருக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றத்தக்க ஒன்றை—எல்லோர்க்கும் எங்கும் என்றும் இன்றியமையாததாக விளங்குகின்ற அந்த மொழியை, வேறு புறநோக்கங்கள் ஏதுமின்றி அதனை அதற்காகவே ஆராயும் மொழியியலாளன் எல்லா வகையிலும் மொழியைப் பயன் படுத்தும் மக்கள் எல்லோருக்கும் நேரடியாகவோ மறைமுக மாகவோ துணைபுரிகிருன்; துணைபுரிய விரும்புகிருன். அவன் மொழிக்கோ மொழியைப் பயன்படுத்துவோர்க்கோ அணுவளவும் கேடு செய்வதில்லை; கேடு செய்ய நினைப்பதில்லை: கேடு செய்யவும் முடியாது. பொறிகளைப் பயன்படுத்துவோர்க்குப் பொறியியலாளன் ஒருவன் வேண்டும்போது உதவுவது போல், உடலுறுப்புகள் சீர்கெட்டபோது நல்ல மருத்துவன் ஒருவன் மக்கட்கு உதவுவதுபோல் மொழியைப் பயன்படுத்துவோர் யாவர்க்கும் மொழியியலாளன் உதவுகிருன்.

உண்மை இப்படியிருக்க, மொழியியற்கலை எங்கோ எப்படியோ யார்க்கோ ஏதோ தீங்கு விளைவிப்பதாக ஒரு சில உள்ளங்களில் பொய்யான ஒரு மயக்கவுணர்வு எப்படியோ அரும்புவதும் மறைவதுமாக இருக்கிறது. இப்படிப்பட்ட அச்ச உணர்வு அல்லது மயக்க உணர்வு எழுவதற்கு மொழியியற் கலையில் எள்ளளவும் இடமில்லை. அத்தகைய உணர்வுகட்குத் தனிப்பட்ட உள்ளங்கள் காரணமாக இருக்கலாமேயன்றி மொழியியற்கலை காரணமாக இருக்க முடியாது.

மொழியைப் பற்றிய உண்மைகளைக் கண்டறிவதையே தன் நோக்கமாகக் கொண்டுள்ள மொழியியலாளன் தன் ஆய்வின் எல்லையை இலக்கண இலக்கியங்களோடு சுருக்கிக் கொள்வதில்லை; எங்கெங்கு மொழி பயன்படுகிறதோ அங்கெல்லாம் இவன் ஆய்வு நோக்கம் மொழியைப் பின்பற்றி ஊடுருவிப் பாய்கிறது. இதன் விளைவாகத்தான் மொழியியலாளன் பேச்சு மொழி, குழந்தை மொழி, திருந்தா மொழி, இறந்த மொழி, வட்டாரமொழி, குழூஉக்குறி ஆகிய எல்லாவற்றையுமே தன் ஆய்வுக்கு எடுத்துக் கொள்கிருன்-எடுத்துக் கொள்ள நேர்கிறது. ‘உன் ஆய்வை இந்த எல்லையோடு நிறுத்து’ என்று ஒரு ஆய்வாளனைத்

தடுத்து நிறுத்த நமக்கு உரிமை கிடையாது. அப்படித் தடுத்து நிறுத்தினால் அறிவு வளர்ச்சிக்கும் வழியில்லாமற் போய்விடும். 'மொழி' என்றால் இலக்கண இலக்கியங்கள் மட்டுமே என்று நினைத்த காலம் ஒன்று உண்டு. அந்தக் கருத்து மெய்யறிவுக்கும் நடைமுறைக்கும் ஒத்துவருமா? உலகில் இலக்கண இலக்கியங் களே இல்லாத மொழிகள் எத்தனையோ உள்ளன. அவற்றை யெல்லாம் மொழியென்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது? உண்மையாகக் கூறப்போனால் பேசுவன எல்லாம் மொழியே. அவற்றில் உயர்வு தாழ்வு காண்பது மொழியிய லாளனின் வேலையன்று. மொழியின் அமைப்பு, இயங்கும் முறை ஆகிய இவைபற்றி ஆய்வதே மொழியியலாளனின் கடமை.

மொழியியலாளர்கள் எல்லோரும் இலக்கண இலக்கியங் கட்கு மிகச் சிறந்த இடமளித்து, அதற்கு மேலும் குழந்தை மொழி, பேச்சு மொழி, திருந்தா மொழி, வட்டார மொழி ஆகிய இவற்றிற்கும் தம் ஆய்வில் இடமளிக்க நினைக்கிறார்கள்; இடமளிக்கிறார்கள். இங்குத்தான் சில உள்ளங்களில் கருத்து வேற்றுமை அரும்புகிறது போலும். மொழியியலாளனுடைய ஆய்வின் எல்லை இலக்கண இலக்கியங்களோடு சுருங்கிவிடவில்லை. மொழி எங்கெல்லாம் பயன்படுகிறதோ அங்கெல்லாம் இவ னுடைய ஆய்வு நோக்கம் மொழியைப் பின்பற்றி ஊடுருவிப் பாயும் என்பதையே மீண்டும் இங்கு நாம் நினைவுகூரவேண்டி யுள்ளது. இலக்கணப் பேரறிஞர்கள் எல்லோரும் மொழியிய லாளனின் முன்னோடிகள். இந்த உண்மையை மொழியியல் பறைசாற்றி மகிழ்கிறது. ஆனால் மொழியியற்கலை மொழிக்கு மட்டுந்தான் உட்பட்டு நிற்குமேயன்றி இலக்கியம், பேச்சு, வட்டார வழக்கு போன்ற சிறு சிறு வட்டங்களுக்கு உட்படாது. இதுவரை மொழியுலகில் தனியாட்சி செலுத்திய இலக்கியத் துக்கு, மொழியியல் தனக்கு உட்படாத ஒரே காரணத்துக்காகச் சிலவேளை அதன்மேல் ஊடலோ சீற்றமோ ஏற்படலாம். காலத் துக்கேற்பப் பல்வகை வளர்ச்சி பெற்று மிகப்பல புரட்சி செய்து, உலகையே புதுப்புது வகையாய் மாற்றி மகிழும் இலக்கியம் தன் எல்லையையும் நோக்கத்தையும் எவ்வளவோ பெரிதாக்கிக் கொண்டு வருகிறது. இந்நிலையில் மொழியியலும் இலக்கியத் துக்கு உரிய இடத்தையும் சிறப்பையும் தவறாமல் அளித்து வருகிறது. நடுநிலையோடு கூர்ந்து நோக்கினால் இலக்கியமும் மொழியியலும் ஒன்றற்கொன்று துணையே என்பது தெளிவாக விளங்கும். இந்த உண்மையை மொழியியற்புலவர்களும், இலக்கியப் புலவர்களும், இலக்கணப் புலவர்களும் நன்கு

உணர்ந்து கொள்வது மிகமிக இன்றியமையாதது. இந்த மூன்று குழுவினரும் ஒருவர்க்கொருவர் துணையென்பதை உணர்ந்து கொண்டால் இம்மூன்று குழுவும் எளிதில், விரைவில் முழுவளர்ச்சி பெற வாய்ப்பு ஏற்படும். அதன் பயனாக மொழியும் மிக நன்கு செழித்து வளர்ந்து நலம் பெற்றுத் திகழும்.

தம்மைப் பழித்தாலும் தமரைப் பழித்தாலும் பொறுத்துக் கொள்வார்கள் தமிழர்கள்; ஆனால் தாய்மொழியைப் பழித்தால் நாம் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை—பொங்கி எழுகிறோம். தாய்மொழி என்பது உள்ளத்துக்கும் உணர்ச்சிக்கும் அவ்வளவு நெருக்கமானது. இந்த நெருக்கம் இயற்கையானது—உண்மையானது. உலகில் உள்ள எல்லா மொழிகளும் ஒவ்வொரு இனத்துக்குத் தாய்மொழியாக இருக்கின்றன என்பதும் இறந்த சில மொழிகளும் சில இனங்கட்குத் தாய்மொழியாக இருந்தன என்பதும் உண்மைதான். மொழியியலாளன் பல்வேறு இனத்தின் பல்வேறு தாய்மொழியைத்தான் ஆராயவேண்டியுள்ளது. அவன் மொழியியலாளன் என்ற முறையில் ஒரு மொழியை ஆராயும்போது தன் சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு இடந்தருவதில்லை—இ ட ந் த ர க் கூ டா து — இடந்தரமாட்டான். தான் காணும் உண்மைகளை மட்டும் எடுத்துச் சொல்வான். அதன் வாயிலாக இது உயர்ந்தது இது தாழ்ந்தது என்று பேசிக் கொள்ளும் மக்களை அவன் தடுப்பதில்லை—ஊக்குவிப்பதுமில்லை. எனவே மொழியியலாளன் கண்டு கூறும் உண்மைகளை அறிந்துகொண்டவுடன் அவனை நாம் உறவாகவோ பகையாகவோ நினைப்பது மெய்யறிவுக்குப் பொருத்தமில்லை. அவனை நாம் தக்கபடி பயன்படுத்திக் கொள்ளவேண்டும். மொழியியலாளனுக்கும் ஒரு தாய்மொழி உண்டு. அது அவனுடைய உள்ளத்துக்கும் உணர்வுக்கும் நெருக்கமானதுதான். அவனே ஒரு இலக்கியப் புலவனாகவும் இருந்தால் அந்த உணர்வு பீறிட்டு வெளிப்படவும் கூடும். ஆனால் மொழியியலாளன் என்ற முறையில் அவன் ஒரு மொழியை ஆராயும்போது அவன் தன் சொந்த விருப்பு வெறுப்புகட்கு இடந்தருவதில்லை. உணர்ச்சிகட்கு இடந்தராமல் அறிவுக்கு மட்டும் இடந்தந்து உண்மையைக் காணுகின்றான். கண்ட உண்மையைக் கூறுகின்றான். அப்படி அவன் மொழியைப் பற்றி என்னதான் ஆராய்கிறான்? இனி இதற்குத் தெளிவான விடை காணவேண்டும். முறையாக ஒலிக்கூறுகள் சேர்வதால் சொல்லும், முறையாகச் சொற்கள் சேர்வதால் மொழித்தொடரும் தோன்றுகின்றன. சொல்லும் தொடரும் பேசுவோர் கருத்தைக் கேட்பார்க்கு வழங்குகின்றன.

ஒலியும் சொல்லும் தொடரும், இவற்ருல் விளையும் பொருளும் உலகமொழிகள் எல்லாவற்றுக்கும் பொதுவானவை. மொழியியலில் இவைதாம் இன்றியமையாத இடம் பெற்று நிற்கின்றன. இவற்றின் துணைகொண்டுதான் மொழியியல் பல்வேறு படிப்பியல்களோடு தொடர்பு கொண்டு செழித்து வளருகிறது. ஒலி, ஒலியமைப்பு, சொல், சொல்லமைப்பு, தொடர், தொடரமைப்பு ஆகிய இவையெல்லாம் ஒவ்வொரு மொழியிலும் காலத்திற்குக் காலம் இடத்திற்கு இடம் மாறிக் கொண்டிருக்கின்றன. இடத்திற்கு இடம் ஒரு மொழியிலேயே ஏற்படும் மாற்றங்கள் பற்றியும் காலத்திற்குக் காலம் அவ்வாறு ஏற்படும் மாற்றங்கள் பற்றியும் மொழியியல் வேறு வேறு பகுதி களில் விளக்கம் அளிக்கிறது. குழந்தையாக இருந்தபோது அவன் பேசிய பேச்சுக்கும் வளர்ந்த பிறகு அவன் பேசும் அதே மொழிப் பேச்சுக்கும் எத்துணையோ வேறுபாடுகள் உள்ளன. இத்தகைய செய்திகளையும் அங்குப் படிந்து கிடக்கும் உண்மை யையும் மொழியியல் கூர்ந்து நோக்கி எடுத்து விளக்குகிறது. ஒரே தாய்மொழியிலிருந்து இரண்டுக்கு மேற்பட்ட மொழிகள் தோன்றி வளர்வதைக் கண்டறிதல், அம்மொழிகளுள்ளும் ஒன்றற்கொன்று கொண்டுள்ள தொடர்புகளைக் கண்டறிதல், அம்மொழிகள் பிரிந்த ஆண்டினைக் கணக்கிடுதல், எவையேனும் இரண்டு மொழிகளை ஆய்விற்கு எடுத்துக் கொண்டு அவற் றிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் காண்டல் போன்ற பல்வேறு பகுதிகள் மொழியியலில் இடம் பெறுகின்றன. இவை பற்றியெல்லாம் ஓரளவு தெரிந்து கொண்டால் மொழியியலின் இயல்பும் பயனும் நமக்கு இனிது விளங்கும்.

மொழி வளர்ச்சி என்பது அந்த மொழியைப் பேசும் மக்களின் வளர்ச்சியைப் பொறுத்தே அமையும். மக்களிடம் வளர்ச்சி இல்லையென்ருல் அவர்கள் பேசும் மொழியில் மட்டும் வளர்ச்சியைக் காணமுடியுமா? பல்வேறு துறைகளில் எண்ணியும் பல்வேறு மொழியிலுள்ள உயர்ந்த நூல்களைப் படித்தும், உலகில் பல்வேறு நாடுகளுடன் தொடர்பு கொண்டும் அறிவு வளம் பெற்ற மக்கள் எங்கிருந்தாலும் அவர்கள் பேசும் மொழியும் வளர்ச்சி பெற்றதாகவே இருக்கும்.

தமிழ்மொழி எல்லாவகையிலும் நிறைவெய்தித் திகழ வேண்டின் தமிழ் நெஞ்சங்களில் எண்ண ஓட்டம் பெருக வேண்டும். புதிய புதிய செய்திகளைக் கண்டறிந்து வெளிப் படுத்தும் போதெல்லாம் முதலில் அவற்றை நம் தாய் மொழியிலேயே வெளிப்படுத்த வேண்டும். தமிழ் ஆர்வலர்கள் இயன்ற வரையில் பல்வேறு மொழிகளைப் பயின்று அவ்வம்

மொழியிலுள்ள உயர்ந்த செல்வங்களையெல்லாம் தமிழில் மொழி பெயர்த்துச் சேர்க்கவேண்டும். பல்வேறு மொழிகளின் வாயிலாகத் தாம் பெற்ற அறிவையும் கருத்துக்களையும் தமிழில் வெளிப்படுத்தித் தமிழை வளப்படுத்த வேண்டும்.

நாள்தோறும் உலகம் மாறிக்கொண்டே இருக்கிறது. இந்த மாற்றத்துக்கிடையே எத்தனையோ புதுமைகள்—எத்தனையோ இழப்புகள். உணராதவற்றை உணரும்போதும், அறியாதவற்றை அறியும்போதும், காணாதவற்றைக் காணும்போதும், புதிய சொற்கள் தேவைப்படலாம். தேவையே நெருக்கடியாக மாறும்போது சொற்கள் புதிது புதிதாக உருவாகின்றன—உருவாக்கப்படுகின்றன. ஒரு பொருளைக் குறிக்கவே சில நேரங்களில் பல சொற்கள் உருவாக்கப்படுவதும் உண்டு. ஒருவர் உருவாக்கிய சொல் இன்னொருவருக்குப் பிடிக்காது. இப்படிப் பல சொற்கள் உருவாக்கப்படும்போது மொழியின் இயல்புக்கு ஒத்தனவாகவும், ஒலித்தற்கும் ஆளுதற்கும் எளிமை யுடையனவாகவும் அமைந்துள்ள சொற்கள் வாழும்; அல்லாதன வீழும். மிதிவண்டி என்ற சொல் வளர்ந்து வருவதையும் ஈருருளி என்ற சொல் தேய்ந்து போனதையும் பார்த்தால் மேற்கூறிய உண்மை விளங்கும்.

மொழியியற் படிப்பின் துணைகொண்டு நமது இலக்கண நூல்களையும் அவற்றின் உரைகளையும் பார்க்கும்போது அவற்றின் அருமை பெருமைகளை நன்கு உணர முடிகிறது. இனி எதிர்காலத்தில் மொழி வளர்ச்சிக்கு வழி என்ன? வழி என்ன? என்று துடிக்கும் நன்னெஞ்சங்களுக்கு மொழியியற் படிப்பு ஒரு சிறு கைவிளக்காகத் துணை புரியும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.